# கல்கி

*ஸ்பீடா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...*




வழங்கும்

**ஜில்லுனு ஒரு சம்மர்!**

32 பக்க இணைப்பு

KALKI 11.05.2008 ரூ.10.00 96 பக்கங்கள்

## என் செல்ல தளபதி!

**- ஷோபா சந்திரசேகர்**

● ஜி.இ.பச்சியப்பன்,
திருவண்ணாமலை

*மலையைச் சுற்றுவது - மனைவியைச் சுற்றுவது, எது சிறந்தது..?*

மலைபோல மனைவி வாய்த்தால், நம்பிச் சுற்றுவது நல்லது...

● வள்ளீசன், சிதம்பரம்

*முதுமை வராமலிருக்க என்ன வழி...?*

காலெண்டர் பார்க்காதீர்கள்... 'கிழ'மை வராது...!

● பரிமளம், தஞ்சாவூர்

*காதல் - கல்யாணம்... என்ன வித்தியாசம்?*

காதலுக்குக் கண்ணில்லை. கல்யாணத்துக்குப் பின் வாயில்லை.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

*'பெண் புத்தி, பின் புத்தி.' இது சரியா?*

ரொம்ப சரி. வெற்றிகரமான ஆணுக்குப் பின் பெண் புத்தி.

● எம்.அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி

*மாடர்ன் ஆர்ட் பிடிக்குமா?*

ஒருமுறை மாடர்ன் ஆர்ட் பெயின்டிங் கண்காட்சிக்கு அழைப்பின் பேரில் சென்றிருந்தேன். சுவரில் வரிசையாகத் தொங்கிய பெயின்டிங்குகளை, எக்ஸிபிஷனில் காணாமல் போன குழந்தையைப் போல பார்த்தபடி நகர்ந்தேன். ஒரு பெயின்டிங்கைக் காட்டி 'இது என்ன சொல்லுங்க பார்க்கலாம்?' என்று கேட்டார் ஓவியர். 'யானைதானே' என்றேன். 'இல்லை பட்டிக்காட்டான்' என்றார் ஓவியர். 'நானா? பெயின்டிங்கா?' என்ற அபிநயம் பிடித்தபடி மேலும் நகர ஆரம்பித்தேன். அறையின் எதிர்ப்புற சுவரின் மத்தியில் மாட்டப்பட்ட ஓவியத்தில் வேப்ப மரம் ஒன்று பச்சைப் பசேல் என்ற இலைகளோடும், வெளிர் நிறத் துளிர்களோடும், கிளைகளில் ஒரிரு பறவைகளோடும், மரத்துக்கு மேலே நீல வானத்தோடும் படு ரியலிஸ்டிக்காக இருந்தது. புல்லரிப்போடு ஓவியரைப் பார்த்தேன். ஓவியர் என் அருகில் வந்து ரகசியக் குரலில், 'நீ பார்ப்பது ஓவியம் அல்ல. காற்று வசதிக்காக சுவரில் ஜன்னல் சைஸுக்கு சதுரமாகப் போட்ட ஓட்டை வழியாகத் தெரியும், வெளியிலிருக்கும் நிஜமான வேப்பமரம்' என்று கூறி, என்னை வேதாளம் போல பார்த்தார்.

# மலர் சூடும்



## கிரேஸியைக் கேளுங்கள்




# ரகசியம்!

● சாமி, திருவண்ணாமலை

***'நெய்க்கு தொன்னை ஆதாரம், தொன்னைக்கு நெய் ஆதாரம்' என்று சொல்வது ஏன்?***

சர்க்கரைப் பொங்கல், கண்டல் இவற்றை எல்லாம் விட்டுவிட்டு குறிப்பாக நெய்யைச் சொன்னதற்குக் காரணம், தொன்'நெய்' என்ற அந்த வார்த்தையிலேயே 'நெய்' இருப்பதால் சொல்லியிருக்கலாம்!

● மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்

***பெண்கள் கூந்தலில் மலர் சூடுவது அழகுக்கா? ஆரோக்கியத்துக்கா?***

பூவோடு சேர்ந்து நாரீமணியும் மணக்க...?

● வாசுதேவன், மும்பை

***தங்களுடைய 'ஹாபி'?***

தாலி கட்டிய 'பிபி'... மற்றவர் பொழுதை நான் போக்குவேன். என் பொழுதை அவள் போக்குவாள். ●





பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்ஸ்
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
4343 8888, 2225 1522,
2225 0623, 2225 1324,

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 68 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032

**கோ**டம்பாக்கமே 'குருவி' பரபரப்பில் சிறகடித்துக் கொண்டிருக்க, விஜய் பற்றியும் 'குருவி' படம் குறித்தும் நம்மோடு பேசினார் ஷோபா சந்திரசேகர்...

**நாளைய தீர்ப்பு... குருவி... எப்படி இருக்கிறார் விஜய்?**

எப்பவுமே விஜய்க்குள்ள ஒரு நெருப்பு கனன்றுக்கிட்டே இருக்கும். லைட்டா தாண்டிவிட்டா போதும் பரபரன்னு பத்திக்குவார். அந்த ஃபயர் நாளுக்கு நாள் அதிகமாயிட்டே இருக்கு. அவரோட அம்மாவா எனக்கு அது மிகப் பெரிய சந்தோஷம்.

**சின்ன வயசுல விஜய் போக்கிரியா... சாதுவா...?**

எந்த அம்மாவுக்குமே தன்னோட குழந்தை குறும்பு பண்ணினாலும் அதை ரசிக்கிற பக்குவம் இருக்கும். அப்படித்தான் நானும். சின்ன வயசுல விஜய் பயங்கரச் சுட்டி. ஒரு இடத்துல அடங்கி இருக்க மாட்டார். அவரோட தங்கை இறந்த பிறகுதான் படு அமைதியாயிட்டார்.

**விஜய் ரஜினி ரசிகர்... நீங்கள்?**

கண்டிப்பா நான் விஜய் ரசிகைதான். திரையில பார்க்கும்போது இது நம்ம விஜய்தானான்னு சில நேரம்



வியந்து போயிருக்கேன். அப்படி வியக்கிற அள வுக்குத் தன்னை விஜய் வளர்த்துக்கிட்டதுதான் எங்களோட அதிர்ஷ்டம்!

**விஜய்யிடம் நீங்க பார்த்து பிரமிப்பது...?**

அவரோட உழைப்புதான். நேரம் பார்க்காம உழைப்பார். திருப்தி வர்ற வரைக்கும் அசர மாட்டார். அவர் இந்தளவுக்கு உசந்ததுக்குக் காரணமே அவரோட அயராத உழைப்புதான்.

**பாடகர் விஜய் எப்படி இருக்கார்..?**

(சிரிக்கிறார்) விஜய்க்கு அபாரமான இசை ஞானம். எந்த ஒரு பாட்டை யும் ஒரு தடவை கேட்டார்னா, அப்படியே திருப்பிப் பாட ஆரம்பிச்சிடுவார். என்னோட சகோதரர் சுரேந்தர், நான் எல்லாருமே இசை மேல ஆர்வமா இருக்கறதால் அந்த ஆர்வம் விஜய்யைத் தொத்திக்கிச்சு.



என் செல்ல தளபதி!

அவரோட உந்துதல் தான், என்னைப் பாடல் கேசட் ரிலீஸ் பண்ணுற அளவுக்குக் கொண்டு வந்திருக்கு.

**விஜய் நடித்ததில் உங்களுக்குப் பிடித்த படம்..?**

எல்லாமே பிடிக்கும். குறிப்பா சொல்லணும்னா, பூவே உனக்காக, காதலுக்கு மரியாதை, போக்கிரி...

**குருவியைப் பத்திச் சொல்லுங்க...**

தமிழகத்தைப் போலவே நானும் ரொம்ப ஆவலோட எதிர்பார்த்துக்கிட்டு இருக்கேன். தமிழகத்தில் இருக்கற ஒவ்வொரு குடும்பமும், இந்தப் படத்தை ஒரு விழா மாதிரி கொண்டாடுவாங்க. விஜய்யோட திரை வாழ்க்கைல பெரிய திருப்பு முனையாக இந்தப் படம் இருக்கும்ங்கறது நிச்சயம்.

**- கபிலன்**

# “விஜய் ஒரு ஃபயர்!”

**ஷோபா சந்திரசேகர்**



## என்ன பரிசு?

• சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-சர்ட்...

• குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...

**ஹலோ வாசகர்களே!**

ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' இந்த வாரம் அசத்தலா இருக்கா? அடுத்த வாரத்திலிருந்து விஜய்யைப் பற்றி முழு அலசல் ஆரம்பம்... இனி நீங்க அசத்தறதுக்கு ரெடியா? பீட்சா சாப்பிடக் கூலியா? தோ... பரிசுப் போட்டி ஆரம்பமா யிடுச்சு!

• பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம் பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!



"விஜய் எங்களுக்கு மகனாகக் கிடைத்தது நாங்கள் செய்த புண்ணியம்!"

• நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரைப் பற்றிய கேள்வி. சரியான விடை களை 'டிக்' அடிச்சு கூப்பனையும் நிரப்பி, கத்தரிச்சு அனுப்பணும்.

• ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு. ஸோ, க்விக்!

• வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந் துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங் கிலிப் போட்டி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம் 7 ஆம் பக்கம் இருக்கு)

• பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப் பன்கள் அனைத்தை யும் இணைச்சு அனுப் பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.

• இந்த பதிமூன்று வாரத்தில் உங் களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்களுக்கு

# தொடர் சங்கிலிப் போட்டி கூப்பன்



# விஜய் வின்னர்ஸ் - 1

அந்த இதழ் கிடைக்க உதவி செய்ய தோம். வோ. டயல் : 4343 8888

• போட்டி குறித்த இறுதி முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

• இந்த வாரப் போட்டி விடைகளை அனுப்ப கடைசி தேதி : 15.05.2008

• போட்டியில் கலந்துக்கங்க; பரிசுகளை அள்ளுங்க!

கடைசி தேதி : 15.05.2008

## இந்த வாரக் கேள்விகள்!

1. விஜய் - சிவாஜி சேர்ந்து நடித்த படம்?
   - ☐ ஒன்ஸ்மோர்
   - ☐ யூத்
2. 'வலையப்பட்டி தவிலே' பாடலுக்கு விஜய்யோடு சேர்ந்து நடித்த நடிகை...
   - ☐ ஸ்ரேயா
   - ☐ த்ரிஷா
3. விஜய் நடித்த படத்தில் ஷோபா சந்திரசேகருக்குப் பிடித்த படம்...?
   - ☐ காதலுக்கு மரியாதை
   - ☐ கண்ணுக்குள் நிலவு
4. விஜய் நடித்த முதல் படம்
   - ☐ நாளைய தீர்ப்பு
   - ☐ ப்ரெண்ட்ஸ்
5. விஜய்யின் மகன் பெயர் என்ன?
   - ☐ சஞ்சய்
   - ☐ கமல்

பெயர் : .................................................... வயது : ............

முகவரி : .................................................... ....................

..........................................................................................

செல் : .............................. இ.மெயில் : ..............................

# வட்டமேஜை

● **கோ**டையில் நமது உடலைப் பாதுகாக்க, டாக்டர் வேல்விழியின் ஆலோசனைகள் நல்ல பயனளிக்கும்.

**- ஏ.ஜி.கல்யாணசுந்தரம், மணியக்காரன்பாளையம்**

● **அ**ரசின் பல்வேறு இலவச, சமூக நலத் திட்டங்கள் பொருளாதார அடிப்படையில் இருக்க, இட ஒதுக்கீடு



## நெஞ்சை உலுக்கிய கேக்!

மட்டும் அனைத்துத் தரப்பு மக்களுக்கும் என்று சொல்வது ஏற்புடைய வாதமல்ல.

**-ஆர்.நாகராஜன், சென்னை - 117**

● **க**ண்ணனைத் தேடிக் கொண்டிருந்த எங்களை ஸ்ரீ வேளுக்குடி க்ருஷ்ணன் சுவாமிகள் வழிநடத்திச் செல்வது மனத்துக்கு மிகவும் இதமாக இருக்கிறது.

**- பி.ஹேமாம்புஜம், சென்னை - 17**

● '**இ**ந்த நடிப்புக்குத்தான் இத்தனை பில்ட் அப்பா!' கொஞ்சம் நடிங்க அப்பு என்ற நேபாளி பட விமர்சன வரிகளைப் படித்ததும் என்னையும் அறியாமல் வாய்விட்டுச் சிரித்துவிட்டேன்.

**- எஸ்.சையது முகமது, சென்னை - 93**

● **ப**க்தி சுவை சொட்டச்சொட்ட 'மடப்பள்ளி மகாத்மியம்' இருந்ததோடு, நாவிலும் நீர் சொட்ட வைத்துவிட்டது.

**-எஸ்.வெங்கடரமணன், சென்னை - 33**

● '**போ**ன்சாய் மனசு' கதையில் தமயந்தியின் தவிப்பு செம டச்சிங். நல்ல சிறுகதை.

**- எஸ்.ஏ.கேசவன், கு.கழுகாசலபுரம்**

● '**இ**ந்திய சினிமா என்றால் இந்தி சினிமா' என்கிற மாயையை முறியடித்து தமிழ் சினிமா தலை நிமிரும் என்கிற அமீரின் வார்த்தைகளுக்கு சபாஷ்!

**-என்.எஸ்.மணிமாறன், திருவண்ணாமலை**

● **ம**ஞ்சள் நிற மரண கேக் கட்டுரை நெஞ்சை உலுக்கியது. இனி ஒரு கவளம் உணவை வீணாக்கினாலும் ஹைத்தி தேசம் மனதை உறுத்தும்.

**- ஆர்.பிரகாஷ், பொன்மலை**

## ஹிட் போஸ்ட்

● **ஊ**ழல் குற்றச்சாட்டு சுமத்தப்பெற்ற பிறகும் ஓர் அமைச்சர் தொடர்ந்து பதவியில் நீடிப்பது தவறானது. இடதுசாரிகள் மத்திய அமைச்சர் பாலு விஷயத்தில் மௌனமாக இருப்பது வெட்கக்கேடு.

**- ஆர்.நாகராஜன், சென்னை**

● **ஆ**த்திகருக்கும் - நாத்திகருக்கும் அதிக வித்யாசம் இல்லை. இருவரும் 'கடவுள் நம்பிக்கை' என்ற மையப் புள்ளியை நோக்கியே சிந்திக்கிறார்கள் என்ற உண்மையினை சத்குருவின் அற்புதமான பேட்டியின் மூலம் உணர்ந்தோம்.

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

"காங்கிரஸ் மேலிட வட்டாரங்களில், மிகவும் கமுக்கமாக சில ஏற்பாடுகள் நடந்து வருகின்றன'' என்றார் நமது தகவல் குருவி. விஷயம் இதுதான். வருகிற பாராளுமன்றத் தேர்தலில் தமிழகத்தைப் பொறுத்தவரை தி.மு.க. கூட்டணியில் மிக முக்கிய மாற்றம் ஒன்று இருக்கும். பா.ம.க. அந்தத் தேர்தலில் தி.மு.க. கூட்டணியுடன் இருப்பதற்கான வாய்ப்பு இல்லை என்பதில் இப்போது கலைஞர் தெளிவாகிவிட்டார். எனவே அந்த இடத்தை நிரப்புவதற்கு 'விஜயகாந்த்தைப் பயன்படுத்திக்கொள்ளலாமே' என்ற காங்கிரஸ் யோசனைக்கு கலைஞர் கிட்டத்தட்ட ஓ.கே சொல்லிவிட்டதாகத் தகவல்கள் சொல்கின்றன. விஜயகாந்த் நேரடியாக கலைஞருடன் கூட்டணியில் இருக்க மாட்டாராம். ஆனால், காங்கிரஸுடன் இருப்பார். நடக்கப் போவது பாராளுமன்றத் தேர்தலாகையால், கூட்டணிக்கு 'காங்கிரஸ் தான் தலைமை ஏற்கிறது' என்பது, மதவாத சக்திகளை ஒடுக்க காங்கிரஸுக்குக் கை கொடுக்கிறோம் என்பதும் விஜயகாந்தின் வாதமாக இருக்குமாம். இந்தச் செய்தியைக் கேட்டதும், தி.மு.க., காங்கிரஸ், தே.மு.தி.க. வட்டாரங்களில் பேசிப் பார்த்தோம்.



தே.மு.தி.க. கடந்த சட்டமன்றத் தேர்தலில் 234 இடங்களில் வேட்பாளர்களை நிறுத்தியபோதிலும் விஜயகாந்த் மட்டுமே வெற்றி பெற முடிந்தது. அப்போது போட்டியிட்டுத் தோற்ற பலர் போண்டியாகி, கட்சியை விட்டே விலகிவிட்டார்கள். விஜயகாந்த் போகும் இடங்களில் அவருக்கு மகத்தான கூட்டம் கூடினாலும், தேர்தல் அரசியல் வேறு கணக்கு என்பது விஜயகாந்துக்குப் புரியவைக்கப்பட்டிருக்கிறதாம். பாராளுமன்றத் தேர்தலில் தனித்துப் போட்டியிட்டு, கணிசமாக வோட்டுகளைப் பெற்றாலும் ஒரு தொகுதியில்கூட வெற்றி பெறாத நிலைதான் ஏற்படும் என்பதை நிதர்சனமாக உணர்கிறார்கள் தே.மு.தி.க. பிரமுகர்கள். அப்படி ஒரு இடத்தில்கூட வெற்றி பெற முடியாத நிலை ஏற்படும் பட்சத்தில், 2011 சட்டமன்றத் தேர்தலுக்கு முன் கட்சி கரைந்து விடுவதற்கான வாய்ப்பு இருப்பதையும் உணர்கிறார்



# கலைஞருக்கு கை கொடுக்கும் விஜயகாந்த்...?

**பாராளுமன்றத் தேர்தலில் கடைசி கட்டத்தில் ஏதாவது ஒரு பிரச்னையைக் காரணம் காட்டி பா.ம.க. பறந்துவிடும் என்பது கலைஞரின் கணிப்பு!**



கள் அவர்கள். மேலும் கோடிக்கணக்கில் செலவு செய்து பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட தே.மு.தி.க.வில் யாரும் தயாராக இல்லை. காங்கிரஸுடன் இணைந்து செயல்பட்டால், நிதிப் பிரச்னை பெருமளவுக்குத் தீர்ந்துவிடும்.

''தி.மு.க.வை இதுவரை கடுமையாக எதிர்த்துவிட்டு நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தி.மு.க.வை ஆதரிக்கும் நிலை தற்கொலைக்கு ஒப்பானது இல்லையா?'' என்று ஒரு தே.மு.தி.க. பிரமுகரிடம் கேட்டோம். ''தி.மு.க.வை விட்டு காங்கிரஸ் வெளிவரத் தயாராக இல்லை. அதேசமயம் எங்களுக்கும் காங்கிரஸுக்கும் தோழமை இருக்கிறது. உங்களுக்கு ஒரு சரித்திரத்தை நினைவுபடுத்த விரும்புகிறேன். காங்கிரஸுக்கும், எம்.ஜி.ஆருக்கும் உறவு பலவீனமாகிப் போன நிலையில் திருப்பத்தூர் என்ற இடத்தில் சட்டமன்ற இடைத்தேர்தல் வந்தது. அப்போது தி.மு.க. கூட்டணியில் காங்கிரஸ் இருந்தது. எம்.ஜி.ஆர் அதிரடியாக, 'காங்கிரஸை அ.தி.மு.க.வும் ஆதரிக்கும்' என்று சொல்லிவிட்டார். அது ஒரு தொடக்கமாக அமைய அ.தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணி பின்னர் உருவானது. இப்போது நடக்கப்போவது பாராளுமன்றத் தேர்தல். பிரதமர் பதவிக்கு காங்கிரஸ் தரப்பில்தான் முன்னிறுத்தப்படுவார்கள். எங்களுக்கோ, தி.மு.க.வுக்கோ அதில் எந்த வாய்ப்பும் கிடையாது. ஆனால், பாராளுமன்றத் தேர்தலுக்குப் பிறகு, இரண்டு வருடங்கள் கழித்துத்தான் சட்டமன்றத் தேர்தல். அதற்குள் காங்கிரஸ் தி.மு.க.விடமிருந்து பிரிந்து வந்து எங்களோடு இணைந்து போட்டியிடத் தயாராகிவிடும் என்று நம்புகிறோம். எங்கள் கட்சியும் காங்கிரஸுடன் இணைந்து பாராளுமன்றத் தேர்தலில் செயல்படும் பட்சத்தில், குறிப்பிடத்தக்க வெற்றி பெறும் என்ற நம்பிக்கை இருக்கிறது. கட்சியையும் உயிரோட்டமாக வைத்துக்கொள்ள முடியும். 1998ல் அ.தி.மு.க., பா.ஜ.க.வுடன் கூட்டணி அமைத்தபோது ம.தி.மு.க., பா.ம.க. போன்ற கட்சிகள் 'எங்களுக்கும், பா.ஜ.க.வுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை; எங்கள் கூட்டணி அ.தி.மு.க.வுடன்' என்று சில காலம் சொல்லி வந்ததை நினைவுபடுத்த விரும்புகிறேன். தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணியில் நாங்கள் இணையும்போது, 'நாங்கள் காங்கிரஸுடன்தான் இருக்கிறோம் என்பதே எங்கள் நிலைப்பாடாக இருக்கும்'' என்றார் அந்தத் தே.மு.தி.க பிரமுகர். இந்த யோசனைக்கு முதலில் வித்திட்டது பண்ருட்டி ராமச்சந்திரன் என்கிறார்கள். பண்ருட்டி மற்றும் விஜயகாந்துக்கு, காங்கிரஸ் மேலிட மற்றும் தமிழ்நாடு பிரமுகர்களுடன் நல்ல உறவு இருப்பதால் இரு தரப்பிலும் இந்த யோசனைக்குப் பச்சைக்கொடி காட்டப்பட்டிருக்கிறது. கட்சியின் எதிர்கால ஆதாயத்தைக் கருதி, இதை இடைக்கால ஏற்பாடாக கருதுகிறாராம் விஜயகாந்த்.

**க**லைஞர் இந்த யோசனையைப் பரிசீலிப்பதற்கு முக்கிய காரணம், பா.ம.க. கொடுத்து வரும் குடைச்சல்தான் என்கிறார்கள். பாராளுமன்றத் தேர்தலில் கடைசி கட்டத்தில் ஏதாவது ஒரு பிரச்னையைக் காரணம் காட்டி, பா.ம.க பறந்துவிடும் என்பது கலைஞரின் கணிப்பு. மேலும் பா.ம.க.வுடன் கூட்டணி இருக்கும் பட்சத்தில் வட மாவட்டங்களில், பரவலாக அந்தக் கட்சிக்கு இடங்களைக் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. தங்கள் கட்சியின்

செல்வாக்கு இதன் காரணமாக சரிந்துகொண்டே வருகிறது என்பது உள்ளூர் தி.மு.க.வினர் வருத்தம். மேலும், வீர பாண்டியார், துரைமுருகன், பொன்முடி என்று முக்கியப் பிரமுகர்களை எதிர்த்து வெளிப்படையாகப் போர்க்கொடி உயர்த்தும் பா.ம.க.வுடன் கூட்டணி அமைத்தால், இரு தரப்பிலும் சரியான ஒட்டுறவு, ஒருங்கிணைப்பு இல்லாமல் தோல்வியைத் தழுவும் வாய்ப்பு அதிகரிக்கும் என்பதும் மேலிட தி.மு.க.வினரின் கணிப்பு.

இது போன்ற ஏற்பாட்டுக்கு தமிழ்நாடு காங்கிரஸ் கோஷ்டிகள் அனைத்தும் உடன்படுகின்றன என்பது ஆச்சரியமான செய்தி. ''2011ல் தமிழகத்தில் காமராஜ் ஆட்சியைக் கொண்டு வர இந்த ஏற்பாடு மிகப் பெரிய உதவியாக இருக்கும்'' என்கிறார் ஒரு சீனியர் பிரமுகர். இதற்கிடையில் இந்த ஏற்பாடு தொடர்பாக, மேல் நடவடிக்கைகளுக்காக மட்டுமே சமீபத்தில் ஒருங்கிணைப்பாளராக வயலார் ரவி நியமிக்கப்பட்டார் என்றும் ஒரு காங்கிரஸ் பிரமுகர் சொல்கிறார். 'அரசியலில் நிரந்தர நண்பனும் கிடையாது; பகைவனும் கிடையாது.' தமிழக அரசியலுக்காகவே இத்தகைய பொன்மொழியை உதிர்த்த அந்த மகானுபாவன் வாழ்க!

- ப்ரியன்



**காங்கிரஸ் கோஷ்டிகள் அனைத்தும் உடன்படுகின்றன என்பது ஆச்சரியமான செய்தி!**

# "குறைகளை நேசிக்கிறேன்"

**'சித்திரம் பேசுதடி', 'அஞ்சாதே' திரைப்படங்களின் மூலம் கோடம்பாக்கத்தில் தனித்த கவனத்தை ஈர்த்த இயக்குநர் மிஷ்கின் நம்மோடு பேசினார்...**



**உங்க படங்களில் மேக்கிங் ஸ்டைல் பெரிதும் பாராட்டப்படுகிறது. இது தற்செயலானதா... இல்லை, தனி மெனக்கெடுதல் உண்டா?**

''இங்க கத்துக்க நிறைய இருக்கு. நான் இப்பத்தான் ரேஸுக்கே வந்திருக்கேன். இன்னும் சில வருஷங்கள் கழித்து இதே கேள்வியைக் கேட்டால், பதில் சொல்ல முடியும்னு நினைக்கிறேன்.''

**சினிமாவை எப்படி உணர்கிறீர்கள்?**

''சட்டுனு எனக்கான அந்தக் கதவு திறந்திடுச்சு. நான் சுதாரிப்பதற்குள் அது என் சுவாசமாக மாறிடிச்சு. என்னோட சிந்தனை, செயல்கள் எல்லாம் இப்ப சினிமாதான். தாயின் கருவறைக்குள்ள இருக்கற மாதிரி தோணுது. நான் இங்க பத்திரமா இருக்கேன்.''

**உங்கள் படங்களின் திரைக்கதை உத்தி என்ன?**

''முதல்ல பயம் இருக்கு... போகிறப்போ, டிஸ்கஷன்ல, ஃபோனில் பேசும்போதுன்னு எப்பவும் ஐடியாக்கள் வந்துக்கிட்டே இருக்கும். சின்ன நோட்டில் குறிப்பு எடுத்து வச்சுக்குவேன். ஆனால், மொத்தமா கதையா எழுதறப்ப தனியா போய் உட்கார்ந்திடுவேன். எழுதுவேன், எழுதியதைத் திருத்துவேன்... சரியா அமையலைன்னா மொத்தத்தையும் கிழிச்சுப் போட்டுட்டு முதல்லேர்ந்து ஆரம்பிப்பேன்.''

**'அஞ்சாதே' கரு உருவான விதம் எப்படி?**

''நான் பதினைந்து வருஷம் வாழ்ந்த இடம், போலீஸ் காலனி. அதை உத்துப் பார்த்து, உள்வாங்கி மனசுக்குள்ள நிறைய விஷயங்களைத் தேக்கி வச்சிருந்தேன். அங்க நான் பார்த்த ஒரு காதல், எனக்குக் கிடைத்த நட்புகள், இதுதான் விதை... அதுக்கப்புறம் கதை என்னோட ப்ரியமான நண்பன் ஒருவனைப் பத்தினது. திடீர்னு ஒரு நாள், 'நான் போலீஸ் டிபார்ட்மெண்ட்டில் வேலையில் சேர்ந்துட்டேன்'னு என்னிடம் சொன்னான். எனக்கு அவனை நினைச்சா பெருமையா இருக்கும். இங்க நாம எல்லாரும் பொதுவான ஒரு கருத்துத் திணிப்பைப் பண்ணிட்டிருக்கோம். போலீஸ்காரங்களே இப்படித்தான்; பொம்பளைங்களே இப்படித்தான்; சினிமாக்காரங்களே அப்படித்தான்... ஏன் ஜெனரலைஸ் பண்றீங்க...? நான் தெளிவானதுக்கப்புறம் யோசிச்சேன், இந்த ஒரு விதை... அந்த ஒரு களம்... அங்கிருக்கும் மனிதர்கள்... போலீஸ் நண்பன், அவனை

மையமா வச்சு இழை இழையா கிராஃப்ட் பண்ணின படம்தான் 'அஞ்சாதே'.''

**உங்களுக்குமா குத்துப்பாட்டு?**

''தம்புங்கள்... 'கத்தாழை' பாட்டு தியேட்டர்ல வரும்போது நான் எந்திருச்சு வெளில போய்டுவேன். வெட்கப்படுவேன்; வேதனைப்படுவேன். ஏன்னா, அது நான் சமரசம் ஆன இடம்.''

**அடுத்த படைப்பான 'நந்தலாலா'...?**

''சித்திரம் பேசுதடி ரிலீஸுக்கு அப்புறம் அறுபது நாள்ல நான் எழுதின ஒரு கதை. அடுத்த சீன் என்ன எழுதப் போறேன்னு எனக்கே தெரியாது. ஆனா, எழுத எழுத கதை ஒரு தளத்துக்கு என்னை உயர்த்திட்டே போச்சு. 'நந்தலாலா' ஒரு பயணக் கதை.''

**விமர்சனங்களை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

''நான் நிறைய பத்திரிகைகளைப் படிக்



கறதில்லை. ஒரு படத்தை எடுக்கறதோட என் வேலை முடிவடையுது. என் குறைகள் மூலம் நிறைய கத்துக்கறேன்... நேசிக்கிறேன்... ட்ரையல் அண்ட் எரர்தான் எல்லாமே. குறைகள் ஒரு பக்கம் இருக்கட்டும். 'அஞ்சாதே'வின் பாட்டி சீனையும், குருவியையும் நிறைய பேர் பாராட்டினாங்க. எனக்கு அது போதும்!''

**விஷாலுடனான படம் நின்றுவிட்டதாமே...?**

''ஆமாம்... இப்போது சூர்யாவோடு கைகோர்த்திருக்கேன். என் ஸ்கிரிப்ட்டுக்கான நேர்மை அவர்கிட்ட இருக்கு. சூப்பர் ஹீரோ சப்ஜெக்ட். 'நந்தலாலா' முடிஞ்சதும் ஆரம்பிச்சிடுவோம்.''

**- உமாஷக்தி**



# கல்கி



**2008 மே 11**
**ஸர்வதாரி சித்திரை 29**
**மலர் : 66**
**இதழ் : 41**

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## வினையாகிப்போன விளையாட்டு!

ஸ்ரீசாந்தைக் கன்னத்தில் அறைந்த ஹர்பஜன், தண்டனை பெற்ற பிறகு அவருடன் சகோதர உரிமை பாராட்டுகிறார்; தம்மைத் தண்டித்த கிரிக்கெட் வாரியத்தைத் தமது பாதுகாவலராக வர்ணிக்கிறார்!

இந்த அன்புணர்வெல்லாம் ஆட்ட நேரத்தில் எங்கே போய்விடுகிறது? வெறியும் காட்டுமிராண்டித்தனமும் ஏன் வந்து தொற்றிக்கொள்கின்றன?

எப்படியாவது ஜெயித்தாக வேண்டும் என்பதற்காக ஆடுகிற பந்தயமாக மாறிவிட்டது கிரிக்கெட். ஆட்டத்தின் நேர்த்தியும் அழகும் இனி முக்கியமில்லை. ஐந்து நாட்கள் சகோதரத்துவத்துடன் பழகி, ஆரோக்கியமாய்ப் போட்டி போட்டு, எதிரெதிர் அணிகள் ஒன்றையொன்று ஊக்கப்படுத்திக்கொள்வதெல்லாம் இனி செல்லாக் காசு! கோடிகள் புரளும் கிரிக்கெட் ஒரு குறுகிய கால வியாபார யுத்தம். கோடிக்கணக்கில் பணம் புரளும் சூதாட்டம். ஆகவே, ஒவ்வொரு சிறு இழப்பும் பேரிடி. இந்த அழுத்தத்தின் சுமை தாளாமல் விளையாட்டு வீரர்கள் தடம் புரள்வது, வேதனையளிக்கும் அளவுக்கு ஆச்சர்யமளிக்கவில்லை.

கவர்ச்சி நடனமும், ஆட்டக்காரர்களை ஏலம் விடும் முறையும் கலந்துபோன கிரிக்கெட்டில், இன்னமும் அங்

தமிழகத்தின் ஜாக்கிசான்!






கங்கே ஆட்டப் பண்பும் அழகான தெறிப்புகளும் காணக் கிடைப்பது, முந்தைய தலைமுறை கிரிக்கெட் வீரர்கள் செய்த புண்ணியம்தான்!

கிரிக்கெட் வீழ்ந்துவிட்டதென்றால், தேசிய விளையாட்டான ஹாக்கி அடியோடு அழிந்தேவிட்டது! ஒலிம்பிக் போட்டியில் பங்கேற்கத் தகுதிபெறும் முன்சுற்றிலேயே இந்தியா வெளியேற்றப்பட்டுவிட்டது. இது நடந்த கையோடு, ஹாக்கி சம்மேளன செயலாளர் ஜோதி குமரன் லஞ்சம் பெற்றதற்காக (ஒரு மீடியா புலனாய்வு முயற்சியில்) வெறியேற்றப்பட்டுள்ளார்; ஹாக்கி சம்மேளனத்தையே இந்திய ஒலிம்பிக் சங்கம் கலைத்துவிட்டது!

விளையாட்டில் தோற்றுப்போவது அவமானமல்ல; கால சுழற்சியின் ஒரு கட்டத்தில், ஏதேனும் ஒரு விளையாட்டில் ஒரு நாடோ அணியோ பலவீனமடைவது ஏற்கக்கூடியதே. ஆனால், கையூட்டுப் பெற்றுக்கொண்டு ஒரு தேசிய விளை யாட்டைச் சிறுகச் சிறுகச் சாகடிப்பது சுயநலத்தின் உச்சம்! இந்த நாட்டு இளைஞர்களுக்கு விளையாட்டிலே அடியோடு ஆசையற்றுப் போகச் செய்யக்கூடிய கொடுஞ்செயல்.

இந்திய அரசியலில் நிலவும் வியாபார நோக்கின் கோணல் பார்வையும் லஞ்ச - ஊழலும், கிரிக்கெட்டிலும் ஹாக்கியிலும் கலந்துபோய்விட்டன.

ஆரோக்கிய சிந்தனையையும் ஆட்டத்தின் பேரிலான நேசத்தையும் மீட்கும் வகையில், ஹாக்கி சம்மேளனம் சீரமைக்கப்படவேண்டும். கிரிக்கெட்டை அனர்த்த பொருட்காட்சியாக்கும் ஆபத்திலிருந்து காப்பாற்ற, சில வழிகாட்டல் நெறிகளை வகுக்க வேண்டும். ஏலங்களையும் கவர்ச்சி நடனங்களையும் மறுபரிசீலனைக் குட்படுத்தவேண்டும். நமது பண்பாட்டுக்கு எதிரானவற்றைக் களைய வேண்டும். அரசு உடனே செயல்படாவிட்டால், விளையாட்டு வினையாகி, அளவிடமுடியாத சேதங்களை விளைவிக்கும். ●

## அடுத்த இதழில்... அமர்க்கள ஆரம்பம்...



# அமரர் கல்கியின் அமரத்துவ எழுத்தில்...

# நெஞ்சைத் தொடும் சிறுகதைகள்!

மனம் வருடும் மகத்தான அணிவகுப்பு...

இளமை பொங்கும் இளைஞர்கள் ராஜ்ஜியம்

# காஃபி ஷாப்!

கல்லூரி இளசுகளின் கலக்கல் பக்கங்கள்!

* மாணவர்களின் படைப்புகள் வரவேற்கப்படுகின்றன!
* அஞ்சலட்டையில் மட்டுமே அனுமதி!

## இது எங்க ஏரியா உள்ளே வராதே!

"கிரஹப்ரவேச ப்ராப்தி ரஸ்து"




# வளமான வாழ்க்கைக்கேற்ற வசதியான இடம்.

BLB நிறுவனம் வழங்கும் மற்றுமொரு அற்புதமான வீட்டுமனைப் பிரிவு.

**CMDA அனுமதி பெற்று நேர்த்தியாக வடிவமைக்கப்பட்ட 600 மனைகள்.**

பூந்தமல்லி மற்றும் ஆவடி வழியாக செல்லக்கூடிய வசதியான இருவழிப்பாதை கொண்ட பெரிய வீட்டுமனைப் பிரிவு. பூந்தமல்லி மற்றும் ஆவடியிலிருந்து 20 நிமிடங்களில் செல்லக்கூடிய, வீடுகளுக்கு மத்தியில் அமைந்த அற்புதமான மனைகள்.

இன்றே உங்கள் மனையை ஸ்ரீ நரசிம்மா நகரில் பதிவு செய்யுங்கள்.



## ஸ்ரீ நரசிம்மா நகர்

பூந்தமல்லி மற்றும் ஆவடி அருகில்

(CMDA அனுமதி எண்.37/2007)

சிறப்பு அம்சங்கள்:

✓ 30 நிமிட பயணத்தில் சுங்குவார்சத்திரத்தில் அமைய இருக்கும் சர்வதேச க்ரீன் ஃபீல்ட் விமான நிலையம். ✓ MTH நெடுஞ்சாலையிலிருந்து 5 நிமிட பயணம் ✓ திருநின்றவூர் மற்றும் திருமழிசை திவ்ய தேசங்களுக்கு அருகில் அமைந்துள்ளது ✓ இரயில் மற்றும் பஸ் வசதிகளுடன் கூடியது. ✓ விரைவாக உயரும் நிலமதிப்பு ✓சுற்றிலும் வீடுகள் ✓உடனடியாக வீடு கட்டலாம் ✓முழுவதும் தார்ச்சாலை மற்றும் வேலியிடப்பட்டது ✓ தெளிவான பத்திரங்கள் ✓ 5 ஆண்டு காலம் பாதுகாப்பு சேவை.

கடன் வசதி






இலவசமாக மனையை பார்வையிட அழைக்கவும்: மனை மகிழ்ச்சி செழிப்பு

**28345104 / 05 / 06**

## BLB ESTATES PRIVATE LIMITED

"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road), T.Nagar, Chennai - 600 017. E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

## வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்

பெருமானே பூமிப் பிராட்டிக்கு உரைத்தது வராஹ புராணம். அதிலே கைசிக மஹாத்மியம் என்று ஒரு கட்டம் வருகிறது. ஓர் ஆண்டில் வரக்கூடிய 25 ஏகாதசிகளுக்குள்ளே, கார்த்திகை மாசத்தில் வளர்பிறையில் வரக்கூடிய ஏகாதசிக்கு கைசிக ஏகாதசி என்று பெயர். (சிலர் இதைத் தவறாக கௌசிக ஏகாதசி என்பர். கைசிக ஏகாதசி என்பதே சரி.)

கைசிகம் என்பது ஒரு பண். தோடி, கல்யாணி என்று ராகங்கள் இருப்பது போல் பழந்தமிழ் இசையில் நைவளம், (நட்டபாடை, நாட்டக் குறிஞ்சி,) கைசிகம் என்று பண்கள் உண்டு. அந்த கைசிகப் பண்ணில் பாடிப் பாடியே எம் பெருமானுடைய திருவுள்ளத்துக்கு ஆனந்தத்தை ஏற்படுத்தினான் நம்பாடுவான் என்கிற பக்தன். அந்த ராகத்தின் மாஹாத்மியமே வராஹ புராணத்தில் வருகிறது.

ஒவ்வொரு ஏகாதசியின்போதும் திருக்குறுங்குடிக்கு வந்து வீணை இசைத்து, பாடல் பாடி ராகத்தாலே பெருமானை ஆனந்தப்படுத்தினான் நம்பாடுவான். இப்படி இருக்கையில், ஒரு



திரிவிக்கிரமப் பெருமான்

# கண்ணனைத் தேடி... 3

# பாட்டுப்





கார்த்திகை மாத சுக்ல பக்ஷ ஏகாதசியன்று, காட்டுப் பாதை வழியே திருக்குறுங்குடிக்கு வந்தவனை ஒரு பிரம்மராக்ஷஸ் பிடித்துக்கொண்டது! ''இப்போது உன்னைச் சாப்பிடப் போகிறேன்'' என்றது.

''தாராளமாக! இந்த உடம்பில் எனக்கொன்றும் ஆசை கிடையாது. ஆனால், ஒவ்வொரு ஏகாதசிக்கும் பெருமானைப் பாடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறேன். அதை முடித்துவிட்டு வந்து உனக்கு உணவாகிறேன்.''

பிரம்மராக்ஷஸ் ஏற்றுக்கொள்ளவில்லை. நம் பாடுவான் ஒவ்வொரு பிரதிக்ஞையாக அதனிடம் சொல்லி வந்தான்: 'நான் திரும்பி வராமல் போனால், எனக்கு இந்தப் பாபம் வரட்டும், அந்தப் பாபம் வரட்டும்' என்று ஒவ்வொரு பிரதிக்ஞையாகப் பண்ணியும் பிரம்மராக்ஷஸ் விடவில்லை. கடைசியாக பெரிய ஸத்யத்தைப் பண்ணினான். ''நான் திரும்பி வராது போனால், 'பகவான் வாசுதேவனுக்கு மற்றொருத்தன் ஒப்பான்' என்று சொன்னால் எவ்வளவு பாவம் வருமோ, அந்தப் பாவம் என்னைத் தீண்டட்டும்'' என்றான்!

# பித்தன்!

சட்டென்று பிரம்மராக்ஷஸ் கையை விட்டுவிட்டது. இதற்கு மேலே யாரும் பாபத்தைப் பற்றிப் பேச முடியாது! ''பெருமானை ஸேவித்துவிட்டுத் திரும்பி வா. உன்னைச் சாப்பிடுவதற்கு

நான் காத்திருக்கிறேன்'' என்று அவனை அனுப்பியது.

நம்பாடுவான் திருக்குறுங்குடி நம்பி சன்னிதிக்கு வந்தான். தள்ளி நின்றபடி பெருமானை நோக்கிப் பாடினான். அவன் நின்று பாடிய இடத்திலிருந்து நம்பியைப் பார்க்க முடியவில்லை. துவஜஸ்தம்பம் மறைத்தது. நம்பாடுவான் மனத்திலே அடங்காத காதல். 'நாம் திரும்பிப் போகையில் உயிரை விட்டுவிடப் போகிறோம். இனி இந்த உடலோடே வந்து பெருமானை ஸேவிக்க முடியாது. அவரோ காட்சி கொடுக்காமல் உள்ளே இருக்கிறார்...' என்று கண்களிலே கண்ணீர் மல்க பாசுரத்தைப் பாடினான்.

பெருமான் நோக்கினார். 'நாம் இருப்பதே பக்தனுக்காகத்தானே. அந்த அடியவர்களுள் சிறந்தவனான நம்பாடுவானுக்கு இன்று நாம் காட்சியளிப்போம்' என்று திருவுள்ளம் பற்ற, அவர் சங்கல்பத்துக்கு ஏற்றார் போலே, துவஜஸ்தம்பம் சடக்கென்று ஒரு பக்கத்திலே நகர்ந்து, நேரே திருக்குறுங்குடி நம்பியினுடைய ஸேவை, நம்பாடுவானுக்குக் கிட்டிற்று.

இப்போது நாம் திருக்குறுங்குடிக்குச் சென்றாலும், துவஜஸ்தம்பம் விலகியிருப்பதைப் பார்க்கிறோம். இங்கே கோயிலுக்குள் மூன்று நம்பிகளாக பெருமான் காட்சி கொடுக்கிறார் - நின்ற நம்பி, இருந்த நம்பி, கிடந்த நம்பி. நின்ற திருக்கோலம் தெற்கு மூலையில். அதற்கு வடக்காக இருந்த திருக்கோலம். அதற்கும் வடக்காகக் கிடந்த திருக்கோலம். அமர்ந்த திருக்கோலத்து எம்பெருமான் பரவாஸுதேவனாக வைகுண்டத்தில் இருக்கும் பரருபத்துப் பிரதிநிதியாக ஸேவை சாதிக்கிறான். இந்தச் சன்னிதிக்கு வலப்புறத்தில் மகாபலியினுடைய பீடம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. வணங்கிய திருக்கோலத்தில் மகாபலி இருக்கிறார். அவருக்கு எதிர்த்தாற்போல் திரிவிக்கிரம பெருமான் இடது திருவடியால் மேல் லோகத்தையும் வலது திருவடியால் கீழ்லோகத்தையும் அளந்துகொண்டு ஸேவை சாதிக்கிறார். அவரின் இருபுறத்திலேயும் மற்ற இரண்டு நம்பிகளும் ஸேவை சாதிக்கிறார்கள். ஆக, இந்தத் திருத்தலமே ஆச்சர்யம் வாய்ந்தது.

அதிலும் இந்த வீற்றிருந்த நம்பிக்குத் தனிச் சிறப்பு உண்டு. இந்த எம்பெருமான் சிவனாருக்குப்

* விலகியிருக்கும் துவஜஸ்தம்பம்



* திருமங்கையாழ்வார்

பிரத்யக்ஷம் ஆனான். இதனை திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியிலே ஆச்சர்யமாகப் பாடியுள்ளார்:

அக்கும் புலியும் அதலும் உடையார்
பக்கம் நின்னார் ஒருவர்

அக்ஷ மாலையும் புலித் தோலாடையும் உடைய பரமசிவன், பெருமானுக்கு அருகே நின்று தரிசித்தார் என்கிறார்.

சிவனுக்குப் பிரத்யக்ஷமாகி, அவன் கையிலே ஒட்டிக்கொண்டிருந்த ப்ரஹ்ம கபாலத்தைப் போக்கி, ப்ரம்மஹத்தி தோஷத்தையும் போக்கிக்கொடுத்தானாம் வீற்றிருந்த நம்பி. அதனாலேதான் இன்றைக்கும் இங்கே சிவனாருக்குப் பிராதான்யம் உண்டு. இந்தப் பெருமானை ஸேவித்தபடி எழுந்தருளியிருக்கிறார் சிவனார். அந்தக் காலத்திலிருந்தே சைவ - வைணவ ஒற்றுமையை வளர்க்க வேண்டும் என்பதற்காக இதைப் போல சன்னிதியை ஏற்படுத்தி வைத்தார்கள் மன்னர்கள்.

குறுங்குடி என்ற பெயர் வந்ததற்கே காரணம், இது குறியவனுடைய (வாமன மூர்த்தி) குடி என்பதுதான். குறியவன் வசிக்கும் குடில் என்பதால் 'குறுங்குடில்' என்று வழங்கிய பெயர்தான் குறுங்குடியாகி நிற்கிறது. திருநெல்வேலியிலிருந்து சுமார் முப்பது கி.மீ. தூரத்தில் நாங்குனேரி செல்லும் மார்க்கத்தில் உள்ளது இந்த திவ்ய தேசம்.

இங்கே நின்ற நம்பியின் திருக்கோயில் வாசலிலே ஒரு பெரிய மணி. இது கேரள தேசத்து ராஜாவான ஆதித்தவர்மனால் 1468ஆம் ஆண்டு சமர்ப்பிக்கப்பட்டது. இந்த மணியினுடைய ரீங்காரம், ஊர் முழுக்க வடிவுடைய நம்பியின் பெருமையைப் பறைசாற்றி எல்லோரையும் இங்கே அழைத்து வரும். நம்பிராயருடைய சன்னிதிக்கு உள்ளே புகச் சென்றோம் என்றால், அங்கேயும் ஒரு மணி காட்சியளிக்கிறது. நாதவினோத மணி என்று இதற்குப் பெயர்!

இந்தத் திருக்குறுங்குடி எம்பெருமானுக்கு, பாட்டு கேட்பதிலே ஆசை அதிகம். குருகூர்ச் சடகோபன் என்று அழைக்கப்படும் நம்மாழ்வாரும், திருமழிசையாழ்வாரும் பின்னர் திருமங்கையாழ்வாரும் பெரியாழ்வாரும் பாசுரம் பாட, பாட்டுப் பித்தன் ஆகிப் போனான் எம்பெருமான்! இவர்களுள் நம்மாழ்வார் அவதாரத்துக்கே இந்த எம்பெருமான்தான் அருளினான். காரி - உடையநங்கை என்ற தம்பதி, பிள்ளைப் பேறு வேண்டி இந்தத் திருக்குறுங்குடி நம்பியை வேண்ட, 'யாரைப் போன்ற பிள்ளை வேண்டும்?' என்று அவனும் கேட்க, சற்றும் யோசிக்காமல் 'உன்னைப் போல் பிள்ளை வேண்டும்' என்று உடையநங்கையார் கேட்டார்! திருக்குறுங்குடி நம்பியேதான் நம்மாழ்வாராகப் புளியமரத்து அடியிலே, ஆழ்வார்திருநகரியிலே வைகாசி விசாகத்து அன்று திருவவதாரம் பண்ணினார். ஆகையினாலேதான் திருக்குறுங்குடியிலே தனியாக நம்மாழ்வார் திருவுருவம் இருக்காது. திருக்குறுங்குடி நம்பியேதான் நம்மாழ்வார்!



இவ்வாறு பாட்டுப் பித்தனான எம்பெருமானுக்கு அரையர்கள் தாளமிசைத்துப் பாட்டு பாடும் வந்தன மரபை ஏற்படுத்தினார் ஸ்ரீராமானுஜர். இந்தப் பாட்டு கேட்காமல் போய்விட்டால் பெருமானால் தூங்கவே முடியாதாம்! சில காலம் அரையர் சுவாமிகள் இல்லாமல் போய் அந்தக் கைங்கர்யம் நின்று போயிற்று. அதனால் பெருமானுக்குச் சாப்பாடே பிடிக்காமல் போய்விட்டதாம். இது கண்டு எல்

லோரும் மனம் நொந்துபோய், அரையர் சுவாமிகளுடைய தாளம் அத்தனையையும் சேர்த்து ஒரு மணியாக ஆக்கி இந்த எம்பெருமானுடைய சன்னிதிக்கு முன்னே கட்ட, அந்த நாதத்தைக் கேட்டு, ''சரி, இனி சாப்பிடுகிறேன்'' என்று குழந்தைபோல் மனம் மாறினானாம் எம்பெருமான்! ஆதலால் இது நாதவினோத மணி.

**பா**ட்டுப் பித்தனான எம்பெருமானுக்கு கைசிகப் பண்ணைப் பாடிவிட்டுப் புறப்பட்ட நம்பாடுவான் என்ன ஆனார் என்கிற கேள்வி வருகிறதா...?

அப்போதுதான் திருக்குறுங்குடி நம்பி தன் விளையாட்டைக் காட்டினார். ஒரு வயோதிகனுடைய உருவத்தை எடுத்துக் கொண்டு, காட்டுமார்க்கத்தில் நம்பாடுவானை நிறுத்தி, ''இந்த வழியிலே ஒரு பிரம்மராக்ஷஸ் இருக்கிறது'' என்று தடுத்தார்.

அப்போது நம்பாடுவான் சொன்னான்: ''நான் திருக்குறுங்குடி நம்பியின் பக்தன். சொன்ன சொல் ஒருநாளும் மீற மாட்டேன்...'' என்று நேரே பிரம்ம ராக்ஷஸிடம் சென்றான்.

போனவர் பிரம்மராக்ஷஸிடம் தன்னை ஒப்படைத்துக் கொண்டார். அதுவோ, இவர் முகத்தில் இருந்த தேஜஸைப் பார்த்தது. அவர் திருமேனியை ஒரு தடவை ஸேவித்தது. அதனுடைய உள்ளம் உருகிக் கலங்க ஆரம்பித்தது.... கலங்கிய உள்ளம் தெளிய ஆரம்பித்தது. ''நான் உன்னைச் சாப்பிடுவதாயில்லை'' என்றது.

''நான் சொன்ன சொல் மீற முடியாது. எப்போது நீ கேட்டுவிட்டாயோ அப்போது நான் உன் உணவாகித்தான் தீர வேண்டும்'' என்றார் நம்பாடுவான்.

பிரம்மராக்ஷஸ் மெதுவே சொன்னது: ''அதற்குப் பதில் நான் வேறொன்று கேட்கட்டுமா? ஒரு சாபத்தினால் தான் இப்படி ராக்ஷஸனாகிப் போனேன். நீயோ பெருமாளை நிறைய ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறாய். அந்த ஸ்தோத்திரத்தின் பலனை எனக்குக் கொடுத்தால் என் சாபம் தீரும்'' என்றது...

இதற்கு நம்பாடுவான் சொன்ன பதில் நம்மை மெய் சிலிர்க்க வைக்கக்கூடியது.




அதை அடுத்த வாரம் பார்ப்போம்.

(தேடுவோம்)

படங்கள்: **ஸ்ரீஹரி**

# நோ 'சம்திங்'..! காற்றாடி கரண்ட்..!?

''தமிழ்நாடு மின்சார வாரியம் இரண்டு வருஷமாக என்னை அலைக் கழிச்சதுதான் காற்றாலை மின் உற்பத்தி முயற்சிக்கு அடித்தளம்'' என்கிறார் சுப்பிரமணியம்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன், வீடு கட்டினார். அதற்கு மின் இணைப்பு பெற நினைத்தார். மின்சார வாரிய அலுவலகத்தில் விண்ணப்பித்து, ஐந்தாயிரத்து ஐந்நூறு ரூபாய் மின்சார வாரிய அலுவல கத்தில் பணமாகக் கட்டினார். மாதங்கள் பலவாகியும் மின்சார இணைப்பு கொடுக்கப்படவில்லை.

பல முறை நேரில் சென்று அதிகாரி களிடம் முறை யிட்டார். ஆனால், மின் இணைப்பு மட்டும் கிடைக்கவில்லை. 'சம்திங் தள்ளாமல் மின் இணைப்பு கிடைக் காது ஓய்...!' என்று ஊர்க்காரர்கள் கிண்டல் செய்தனர். சம்திங் தர அவருக் குச் சம்மதம் இல்லை. தம் வீட்டுக்குத் தேவைப்படும் மின்சாரத்தை தாமே தயாரித்தால் என்னவென்று யோசித்தார். உடனே களமிறங்கினார். கடந்த மூன்று மாதங்களாக காற்றாலை மின் உற்பத்தி வாயிலாக அவரது வீட்டில் டியூப் லைட்டு கள் வெளிச்சம் தந்துகொண்டிருக்கின் றன!

நாமக்கல் மாவட்டம், ராசிபுரம் அருகே காகவேரி கிராமம். ஆத்தூர் மெயின் ரோட்டில் அமைந்துள்ளது, அந்தக் காற்றாலை மின் உற்பத்தி வீடு. குறிப்பிட்ட செயலை நிகழ்த்திக் காட்டி யிருப்பவர் சுப்பிரமணியம்.

''கையூட்டு தராம காரியம் ஆகாதுன்னு தெரிஞ்சுக்கிட்டேன். நான் எதுக்கும் எப்பவும் யார்கிட்டேயும் லஞ்சம் தந்தது இல்லே. அதனால காற் றாலை மூலமா மின் உற்பத்தி பண்ணி, வீட்டுக்குப் பயன்படுத்த முடிவு செஞ் சேன். அதுக்கு என்னோட தொழில் அனுபவமும் துணையா இருந்தது'' என்கிறார் சுப்பிரமணியம்.



● சுப்பிரமணியம்

''ஆறு இறக்கைகள் கொண்ட காற்றா லையை உருவாக்கி, அதனைக் கெட்டிக் கட்டடத்தின் மேல் விளிம்பில் பொருத்தி னேன். அதன் சுழற்சியினை 'வி' புள்ளி பெல்ட்டில் இணைத்து 'டைனமோ' சுழற்சி வேகத்தைப் பல மடங்கு உயர்த்தி னேன். இதன் மூலமாக உற்பத்தியாகும் மின் சக்தியை, கார் பேட்டரியில் சேமித்து, இன்வெர்ட்டர் வாயிலாக மின் சாதனங்களை இயங்க வைத்தேன். தற் போது சோதனை அடிப்படையில் இத னைச் செயல்படுத்தி வெற்றி பெற்றுள் ளேன்'' என்கிறார் மகிழ்ச்சி பொங்க.

**செய்தி, சித்திரம்:**
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# இரண்டாவது வரம்!

''**போ**தும். இந்த ஒரு குழந்தையை ஒழுங்கா வளர்த்தாலே போதும்.'' இப்படி ஒரு முடிவை பல இளம் தம்பதியர் எடுத்து வருகிறார்கள். முக்கியமாக நகர்ப்புறத்தில், இருவரும் வேலைக்குச் செல்லும் சூழலில், குழந்தை வளர்ப்பு என்பது சுலபமான காரியம் இல்லையே, அஞ்சுகிறார்கள்.

'இரண்டாவது குழந்தை' என்பதில் உண்டாகக்கூடிய பலவித சிக்கல்கள் தொடர்பாக விளக்கம் பெற மகப்பேறு மருத்துவர் டாக்டர் அனிதா பார்த்தசாரதியை அணுகினோம்.

''சொல்லப்போனால் முதல் குழந்தை பிறந்தவுடனேயே, இரண்டாவது குழந்தை தொடர்பான எங்கள் ஆலோசனைகள் தொடங்கிவிடுகின்றன.

இருவருமே தீர்மானமாக 'ஒரே குழந்தை போதும். அதை நன்றாக வளர்ப்பதில் எங்கள் முழு கவனத்தையும் செலுத்தப்போகிறோம்' என்று கூறினால், அதற்கான நிரந்தர குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளை நாடலாம்.

'இரண்டாவது குழந்தை வேண்டும். ஆனால், அம்மாவின் உடல்நலம் முழுக்கத் தேறி இழந்த சக்தியை அவள் மீண்டும் பெற்ற பிறகுதான் அடுத்த குழந்தை' என்று புத்திசாலித்தனமான முடிவுக்கு வந்தால் அப்போது இவர்கள் பல தகவல்களைக் கட்டாயம் அறிந்து கொள்ள வேண்டும்.

தற்காலிகமாக குழந்தை பெறுவதைத் தள்ளிப்போட ஆண்களைப் பொறுத்த வரை ஆணுறைகள்தான் இப்போதைக்கு ஒரே வழி. பெண்களுக்கு காப்பர்-டி பொருத்திக் கொள்ளுதல் அல்லது கருத்தடை மாத்திரை என்று இரண்டு சாய்ஸ்கள் உண்டு.

முதல் குழந்தை நார்மலாகப் பிறந்திருந்தால் காப்பர்-டி பொருத்திக் கொள்ளலாம்.

முக்கியமாக முதல் குழந்தை சிஸேரியன் முறையில் பிறந்திருந்தால் கர்ப்

பப்பை காப்பர் - டி பொருத்தத் தயார் நிலையில் இல்லாமல் போகக் கூடும். இவர்கள் முதல் குழந்தை பிறந்த ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு காப்பர்-டி பொருத்திக்கொள்ளலாம்.

இந்த இடத்தில் கருத்தடை மாத்திரைகள் தொடர்பான ஒரு தேவையில்லாத பயத்தையும் நீக்க வேண்டியது அவசியம். கருத்தடை மாத்திரை போட்டுக்கொண்டால் சுரக்கும் பாலின் அளவு குறைந்து போகிறது என்று நினைப்பவர்கள் இருக்கிறார்கள். இது தவறு. 'Progesteron only pill' என்றே குறிப்பிட்டிருப்பார்கள். இதனை உட்கொள்வதால் எந்த விதத்திலும் பால் சுரப்பது தடைப்படுவதில்லை. நடுவே ஒரு நாள் இதைப் போட்டுக்கொள்ள மறந்தால் கவலைப்பட வேண்டாம். ஆனால் தொடர்ந்து இருநாட்கள் இதைப் போட்டுக்கொள்ளாமல் இருக்கக் கூடாது. அவ்வாறு மறக்க நேர்ந்தால் கர்ப்பத்தடை பாதுகாப்பு கிட்டாது.

ஒரு சராசரி இந்தியக் குழந்தையின் எடை 2.8 கிலோ இருக்கும். இதைவிடக் குறைந்த எடையில் முதல் குழந்தை பிறந்திருந்தால் (முக்கியமாக, குறைப் பிரசவங்களில் இப்படி நடக்க வாய்ப்பு அதிகம்), அந்தக் குழந்தையை நன்கு வளர்த்த பிறகு, அதற்கு இரண்டு வயதான பிறகே அடுத்த குழந்தைக்குத் தயாராக வேண்டும்.

ஆண்களும் இதுபோன்ற விவரங்களை அறிந்துகொள்வது அவசியம். கருத்தரிப்பது, பிரசவம், கருச்சிதைவு இவையெல்லாம் பெரிய விஷயங்கள். பெண்ணின் உடல் வெறும் இயந்திரம் அல்ல.

கருச்சிதைவு சட்டபூர்வமாகி இருக்கலாம். ஆனால், கரு உருவாகாமல் இருக்க எளிய முறைகள் இருக்கும்போது அலட்சியம் காரணமாக கருத்தரித்துவிட்டு ''டி அண்டு சி செய்திடுங்க டாக்டர்'' என்று மேம்போக்காகக் கூறுவது மிகத் தப்பு. இப்படி நிகழ அனுமதிக்காமல், மிகவும் பொறுப்புடன் நான்கு வருடங்களுக்கு ஒருமுறை என்று 25 வருடங்களுக்கு காப்பர்-டியை மாற்றிச் செல்பவர்களும் இருக்கிறார்கள்.

**"அழகிய உறவுகள் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டே வருவது ஆரோக்கியமாகப் படவில்லை!"**

சமீபத்தில் ஊசி மருந்தின் மூலமாகக்கூட கருத்தடை செய்து கொள்ளும் முறை அறிமுகமாகிவிட்டது. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இந்த ஊசி மருந்தை பெண் செலுத்திக் கொள்ள வேண்டும். இது முழுக்க நம்பகமான ஒன்றாகத்தான் இருக்கிறது.

ஒரு குழந்தையை வளர்ப்பதே பெரும் பாடு என நினைத்து, இரண்டாவது குழந்தை வேண்டாம் என்ற முடிவை பல இளம் தம்பதியர் எடுக்கிறார்கள். ஆனால், ஒற்றையாக வளரும் குழந்தை அதிக பிடிவாதம் கொண்டதாக வளரும். சுயநலம் மிகுந்ததாகவும், விட்டுக் கொடுக்கும் தன்மை இல்லாததாக உருவாக வாய்ப்பு மிக அதிகம். மேலும், சித்தப்பா, பெரியப்பா, அத்தை, மாமா போன்ற அழகிய உறவுகள் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டே வருவது ஆரோக்கியமாகப்படவில்லை'' என்றார் டாக்டர் அனிதா பார்த்தசாரதி.

- ஜி.எஸ்.எஸ்.



# கோபம் வேண்டாம் ப்ளீஸ்!



* அமீர் சொகைல்

கிரிக்கெட்டில் கோபத்துக்கு இடமே கிடையாது. கோபமடைகிற வேளையில்தான் பல பேட்ஸ்மேன்கள் தங்களது விக்கெட்டுகளைப் பறிகொடுத்துள்ளார்கள். ஏன், சினத்தால் பல ஆட்டங்கள் எதிர்பாராத முடிவுக்குச் சென்றுள்ளன. 1996 உலகக்கோப்பை கால் இறுதிப் போட்டியில் வெங்கடேஷ் பிரசாத்தின் பந்துவீச்சினால் கோபமடைந்தார் பாகிஸ்தான் வீரர் அமீர் சொகைல். அடுத்த பந்தை பவுண்டரிக்கு விரட்டி, பிரசாத்திடம் கடும் சினத்துடன் 'உன் பந்துக்கு நேர்ந்த கதியைப் பார்த்தாயா?' என்று மட்டையைத் தூக்கிக் காண்பித்தார். மைதானத்தில் உணர்ச்சிகள் வெள்ளம்போல கொந்தளித்தன. ஆனால், அடுத்த பந்திலேயே க்ளீன் போல்ட் ஆனார் சொகைல்! அதுவரைக்கும் வலுவாக இருந்த பாகிஸ்தான் அணி மளமளவென விக்கெட்டுகளை இழந்து இந்தியாவை செமி ஃபைனலுக்கு அனுப்பியது.

சென்ற வருடம் இங்கிலாந்து சென்றது இந்திய அணி. அப்போது ஜாகீர்கான் பேட்டிங் செய்தபோது பின்னால் நின்றுகொண்டு இங்கிலாந்து வீரர்கள் கிண்டல் செய்துகொண்டிருந்தார்கள். ஜாகீர்கானுக்கும் கோபம் வந்தது. ஆனால், அந்தக் கோபத்தைத் தமது போலிங்கில் முழுமையாகக் காண்பித்து, இந்தியாவுக்கு வெற்றியைத் தேடிக் கொடுத்தார் அவர்.

* ஜாகீர்கான்



ஹர்பஜன் பிரச்னைக்கு வருவோம். பெயர்தான் சாந்தகுமாரனே தவிர, மைதானத்தில் தென்படும் ஸ்ரீஷாந்தின் நடவடிக்கைக்கும் சாந்தத்துக்கும் பொதுவாக பொருத்தம் இருப்பதில்லை. நாடக நடிகருக்குண்டான அத்தனை அம்சங்களையும் ஸ்ரீஷாந்தின் நடவடிக்கைகளில் காண முடியும். பல முறை நடுவர்களால் அறிவுறுத்தப் பட்டும் ஸ்ரீஷாந்த் இன்றுவரை திருந்தவில்லை. இஷாந்த் சர்மா, ஸ்டெய்ன்போல ஸ்ரீஷாந்த் தமது திறமைகளுக்காக அதிகம் பேசப்படுவதில்லை என்பது இங்கே குறிப்பிட வேண்டிய விஷயம். ஹர்பஜன் சிங்கின் கோபத்துக்கு ஆரம்பமே ஸ்ரீஷாந்தின் வெறுப்பேற்றும் நடவடிக்கைகள்தான். தன்னையும் தன் அணியையும் வெறுப்பேற்றும் தொனியில் ஸ்ரீஷாந்த் பேசியதாக எண்ணிய ஹர்பஜன், கைக்கு வேலை கொடுத்துவிட்டார். இரண்டு காலிப் பாத்திரங்கள் முட்டிக்கொண்டால் என்ன சப்தம் எழுமோ அதுபோல இப்போது பெருத்த சப்தம் எழுந்து பல விவாதங்களைத்

ச.ந.கண்ணன்

தொடங்கி வைத்துள்ளது.

முளையிலேயே கிள்ளி எறியாததால் வந்த வினை இது. ஆஸ்திரேலியாவில் ஹர்பஜனால் இந்திய அணிக்கும் ரசிகர்களுக்கும் பல தலைவலிகள் ஏற்பட்டன. அப்போதெல்லாம் உண்மையை அறிய முற்படாமல் எல்லோரும் ஒன்றுகூடி, ஹர்பஜனுக்கு ஆதரவாகக் குரல் கொடுத்தார்கள். இந்திய அணிக்காக மாடாக உழைத்துக் கொண்டிருக்கும் அனில் கும்ப்ளே ஒருமுறைகூட ஒழுங்கீனத்துக்காக நடுவர் முன்பு நின்றது கிடையாது. அப்படிப்பட்ட கும்ப்ளேவை முதன்முறையாக நடுவர் முன்னால் நிற்க வைத்தார் ஹர்பஜன் சிங்! (சிட்னி டெஸ்ட் - ஹர்பஜன் - சைமண்ட்ஸ், இந்த மூன்றையும் வைத்துச் சம்பவத்தை ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள்).

* ஸ்ரீசாந்த், ஹர்பஜன்சிங்



கிரிக்கெட்டிலிருந்து முற்றிலுமாக ஸ்லெட்ஜிங்கை ஒழிக்க வேண்டும் என்று சமீபத்தில்தான் சர்வதேச கிரிக்கெட் வாரியத்திடம் கோரிக்கை வைத்தது இந்திய கிரிக்கெட் வாரியம். ஆனால், இந்திய மண்ணில் இரு இந்திய வீரர்கள் மல்யுத்த வீரர்கள் பாணியில் கட்டிப் புரள்வார்கள் என்று பி.சி.சி.ஐ. கனவிலும் நினைத்துப் பார்த்திருக்காது.

ஐ.பி.எல். போட்டி முடியும் தருணத்தில் குறைந்த பட்சம் ஐந்து புதிய இந்திய வீரர்களாவது நட்சத்திர அந்தஸ்து பெறுவர். அவர் களது வருகையால் சுமாரான திறமையுள்ள பல இந்திய வீரர்களுக்கு வாய்ப்புகள் மறுக்கப்படும்.

கோபத்தைத் துறந்து, திறமையை நிரூபித்துக் காட்ட வேண்டிய தருணம் இது. ⊙

# யூ.பி.எஸ்.சி.



ப்ளஸ் டூ முடிச்சாச்சா? அப்போ இன்ஜினியராக ஆயிடலாம். அப்புறம் கேம்பஸ் இன்டர்வியூ. பிரபலமான ஐ.டி. நிறுவனத்திலே சேர்ந்து பல லட்சம் சம்பளம். இதுதான் நிறையப் பேரோட கனவு...

ஆனால், இப்போதும் வேறொரு வேலைக்கான கௌரவம் குறையவே இல்லை. இத்தனைக்கும் அதில் சம்பளம் ஒண்ணும் - ஒப்பிடும்போது - அதிகம் இல்லை. இருந்தாலும் அந்த வேலைக்கு முட்டி மோதிக்கிட்டு இருக்காங்க. அதுதான் சிவில் சர்வீஸஸ்.

ஏன் இந்த மோகம்? காரணங்கள் நிறைய. என்றாலும் முக்கியமான ஒன்று இதுதான்: இந்திய நிர்வாகத்தின் ஒரு பகுதி ஆகலாம் என்கிற எண்ணம். 'உள்ளுக்குள்' இருந்து கொண்டு சிஸ்டத்தையே மாற்றலாம். இந்தியாவை வல்லரசாக்கும் கனவு. நிறைய அதிகாரம். பாதுகாப்பான பதவி. நிறைய சலுகைகள் - அரசு சேவைகளிலும், போக்குவரத்திலும். சம்பளம் குறைவு என்றாலும் சலுகைகள் சரிக்கட்டும்.

சிவில் சர்வீஸஸில் மிக அதிக மதிப்பெண் பெறுவது எப்படி? நிபுணர்களைக் கேட்டால் "விருப்பப் பாடமாக நீங்கள் எதைத் தேர்வு செய்கிறீர்கள் என்பதைப் பொருத்துதான் உங்கள் வெற்றி தோல்வி நிர்ணயிக்கப்படுகிறது" என்பார்கள். அதென்ன விருப்பப் பாடம் என்றால், காடு முரடான விதத்தில் அமைந்திருக்கும் சிவில் சர்வீஸஸ் தேர்வுகள் குறித்த சில அடிப்படைகளைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

பட்டதாரிகள் மட்டுமல்ல. பட்டப் படிப்பை கடைசி வருடம் படிப்பவர்கள் கூட இந்தத் தேர்வை எழுதலாம். 21-30 வயதுக்குள் அதிக பட்சம் நான்கு முறை எழுதலாம். (OBC என்றால் ஏழு முறை. SC ST என்றால் எவ்வளவு முறை வேண்டுமானாலும்). நுழைவுத் தேர்வுகள் மே- ஜூனிலும், இறுதித் தேர்வு அக்டோபர்- நவம்பரிலும் நடைபெறும்.

நுழைவுத் தேர்வில் பொதுக்கல்வி (General Studies - 150 மதிப்பெண்கள்). விருப்பப் பாடம் (300 மதிப்பெண்கள்) என்று இரண்டு தாள்கள்.

முதல் தாளில் இந்திய அரசியல், இந்தியப் பொருளாதாரம், இந்திய வரலாறு, சமீபத்திய சம்பவங்கள், தினசரி அறிவியல், புள்ளி விவரங்களின் அடிப்படைத் தன்மைகள் ஆகியவை தொடர்பான கேள்விகள் இடம் பெறும்.

ஜூலை அல்லது ஆகஸ்ட்டில் நுழைவுத் தேர்வின் ரிசல்ட் வெளியாகிவிடும்.

இறுதித் தேர்வில் ஒன்பது பேப்பர்கள்.

1. பதினெட்டு இந்திய மொழிகளில் ஏதாவதொன்றில் (300)

1. ஆங்கிலத் தகுதி (300)

மேற்கூறிய இரண்டும் அடிப்படைத் தகுதிக்கானவை.

1. பொதுக்கட்டுரை (200)

2. பொது அறிவு (ஒவ்வொன்றும் 300)

4. விருப்பப் பாடங்கள் (ஒவ்வொன்றும் 300) எல்லாமாகச் சேர்த்து மொத்த மதிப்பெண் 2000. இதோடு நேர்முகத் தேர்வுக்கான 300 மதிப்பெண்களும் சேர்க்கப்பட்டு, மிக அதிக மதிப்பெண்கள் பெற்றவர்களுக்கு அவர்கள் விரும்பும் வரிசையில் (பெரும்பாலும் ஐ.ஏ.எஸ், ஐ.பி.எஸ், ஐ.எஃப்.எஸ் என்றுதான் இவை முறையே இருக்கும்) பதவிகள் அளிக்கப்படும்.

இந்தத் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற இதோ சில ஆலோசனைகள்:

- நுழைவுத்தேர்வு, இறுதித்தேர்வு ஆகிய இரண்டிலுமே விருப்பப்பாடமாக ஒன்றையே எடுத்துக்கொள்வது நல்லது. இதனால் நேரமும் குறையும், ஆழமாகவும் படிக்கலாம்.
- பதில்களில் தெளிவு தேவை.
- சில பிரிவுகளில் சாய்ஸ் இருக்கும். அப்போது தகவல்களை அடிப்படையாகக் கொண்ட பதில்கள் எந்தக் கேள்விக்கு அமையுமோ அவற்றைத் தேர்ந்தெடுங்கள். இதனால் மதிப்பெண்கள் கூடுதலாகப் பெற வாய்ப்பு அதிகரிக்கும்.
- ஒன்றுக்கொன்று தொடர்புடைய இரண்டு விருப்பப் பாடங்களைத் தேர்ந்தெடுத்தால் அவற்றில் சில பாடங்களாவது இரண்டிலும் இடம் பெற்றிருக்கும். இயற்பியலும் வேதியியலும், விலங்கியலும் தாவரவியலும், பொலிடிகல் சைன்ஸும் வரலாறும், புவியியலும் சமூகவியலும் இவை சரியான ஜோடியாக அமையும்.
- ஒருமுறைக்குமேல் தேர்வை எழுத மனத்தைத் தயார் நிலையில் வைத்துக் கொள்ள வேண்டும்.



# கனவுகள்!

ஆண்டுக்கு இரண்டு லட்சம் பேர் எழுதும் இந்தத் தேர்வுகளில், சுமார் 500 பேர்தான் இறுதியில் தேர்ச்சி அடைகிறார்கள். வாழ்க இந்தியா!

– குல்லு



சிவப்பு பாதி, நீலம் மீதி என்ற ஜிகுஜிகு வண்ணத்தில் அந்தக் கால (டவுன் பஸ்) வேன் வண்டி!

ரெயிலடியில் இறங்கியதும், அருகிலேயே டவுன் பஸ் ஸ்டாண்ட்.

டவுன்ஷிப் எனப்படும் அங்கிருந்து பன்னிரண்டு மைல் தொலைவிலிருந்த சுந்தரனூருக்கு டவுன் பஸ்தான் கதி! இல்லையென்றால், மாட்டு வண்டி பயணம்தான்.

பொதுவாக டவுன் பஸ் ஸ்டாண்டை அடையும்போது மதியமாகியிருந்தது.

மொட்டை வெயில், உருகிய தார் கனிந்து இளகி, கொத கொதவென கால் செருப்பில் ஒட்டி அவஸ்தை!

மெல்ல பிளாட்பாரத்து ஒரு நிழல் குறைந்த கடையோரம், எங்களை நிறுத்தி வைத்துவிட்டு, அப்பா மெல்ல கிளம்பி, டவுன் பஸ் ஸ்டாண்ட் கடைகள் அனைத்திலும் அநேகமாக ஏறி இறங்கி விட்டுத் திரும்பி வந்தார்!

''எங்கே போனீங்க...?'' கோபமான அம்மாவின் ஒற்றைக் கேள்விக்கு உடனடியாக பதில் இல்லை.

''நான் ஆம்பிளை. நாலு இடத்துக்கும் போவேன்...''

''என்ன இது, குழந்தைகள் எதிரில்...'' அம்மா சமாதானக் கொடி பிடிக்க...

''நான் என்ன தண்ணி போடறேனா? வேற ஏதாவது கெட்ட பழக்கம் உண்டா...? இல்லே...'' வழக்கமான டயலாக்!

''வெயில் அனல் அடிக்குது. இப்படிக் குழந்தைகளை வச்சிட்டு எத்தனை நேரம் நிக்கறது? நீங்க வேற கடை கடையா ஏறி இறங்கிட்டு... இந்தக் கழுதை வேற துணியை ஈரமாக்கிடுச்சு!'' என மூச்சு விடாமல் அம்மா பேச...

''அம்மா சர்பத்து வேணும்!'' என்றான் தம்பி.

''வெயில்லே சர்பத் எல்லாம் சளி பிடிக்கும். சாப்பாடே சாப்பிடலாம். விசாரிச்சுட்டுத்தான் வந்தேன். எ.எஸ்.எம். வர மணி மூணேகால் ஆயிடுமாம்'' என்றார் அப்பா.

''நல்ல விவஸ்தை கெட்ட மனுஷர் கிட்டே மாட்டிக்கிட்டேன். குழந்தை ஈரம் பண்ணிடுச்சுன்னு சொல்றேன்... சாப்பாடு... சாப்பாடுன்னு...''

''சரி... சரி... கிளம்பு. அங்கே பைப் ஒண்ணு இருக்கு வர்றியா? தண்ணி பிடிச்சுட்டு வரவா?''

''அப்பா... அப்பா...''

''என்னடா?''

''சர்பத்து...''

''பெரியவனே சர்பத் வாங்கி இந்த சனியன் தலையில கொட்டிட்டு இருடா...''

கோபத்தில் பொங்கிய அம்மா வரமும் தந்தார். எனக்கும் சர்பத் குடிக்கும் தாகம் பிறந்தது.

காத்திருந்தது போல கடைக்காரர் தம்ளரை நிமிர்த்தி, தெர்மாகோல் கூடையின் மூடியைத் திறந்து, ஐஸ் கட்டியை எடுத்து ஸ்பூனால் உடைத்தார்.

வியர்வை பொங்கி ஊற்றிய முகத்தில், ஐஸ் சிதறலாய்ப் பறந்து வந்து

# ஒரு கிளாஸ் சர்பத்

யூ.ஷைபஸ் அஹமத்

தூவிய நிமிடம், சொர்க்கத்தில் மிதப்பது போலத் தோன்றியது.

ஐஸ் கட்டி மிதக்க பெரிய்ய்ய தம்ளரில் சர்பத்தைக் கடைக்காரர் நீட்ட... தம்பி எங்கேயோ பராக்கு பார்த்துக்கொண்டே தம்ளரை வாங்க...

அப்போதுதான் அந்தச் சிவப்பு, நீல வர்ண டவுன் பஸ் நுழைந்தது.

உடனே ஒரு பரபரப்பு தொற்றிக் கொள்ள..

''அப்பா பஸ் வந்திடுச்சு!'' என்றபடி தம்பியைச் சீக்கிரம் சர்பத் குடிக்க சைகை செய்தேன். அவன் பஸ்ஸைப் பார்த்த அவசரத்தில் சர்பத் தம்ளரைக் கீழே நழுவ விட்டான்.

தம்ளர் சிமென்ட் பிளாட்பாரத்தில் விழுந்து உடைந்து தெறித்துப் போயிற்று. கடைக்காரரின் பார்வையில் அனல்!

''ஏம்மா, நான் என்ன பொய்யா சொல்றேன்? கீழே கிடக்குது பாருங்க கண்ணாடித் துண்டு!'' அந்த நேரம் தம்பிப் பாப்பாவின் கை, உடைந்த தம்ளரில் விளையாடி, வதை பட்டு ரத்தம் சொட்டத் தொடங்கியது.

பதறியபடி ஓடி வந்த கடைக்காரர் ஐஸ் கட்டி ஒன்றை எடுத்து, குழந்தையின் கையில் வைத்து ரத்தத்தை நிறுத்த முயல... அது இன்னும் வேகமாய் வீறிட்டது.

எங்களுக்கு மிக அருகே ஊர்ந்து வந்து நின்ற எ.எஸ்.எம். வண்டி, புளி மூட்டையாய் அடைத்த ஜனங்களுடன் ஒருபுறம் சாய்ந்தபடி இருக்க...

ஏதோ ஒரு ஜன்னல் வழியே அப்பாவின் தலை தெரியத் தொடங்கியது.

''சீக்கிரம் ஏறுங்க, இடம் பிடிச்சுட்டேன்!'' அப்பா வெற்றி பெற்ற வீரனாய்ச் சிரித்தார்.

''இந்த மனுஷனுக்கு புத்தியே இல்லை...!'' அம்மா சீற...

''அம்மா நான் டிரைவர்கிட்டே சொல்லி வண்டியை நிறுத்தறேன். ஐயாகிட்டே சொல்லி காசு வாங்குங்க!'' என தன் கவலையை கடைக்காரர் சொன்னார்.

''அப்பா பாப்பாவுக்கு கை அறுந்து ரத்தம் கொட்டுது!''

''என்ன...



என்னடா சொல்றே?'' என பதறியபடி பஸ்ஸை விட்டு அப்பா இறங்கினார்.

''டேய் நீங்க ரெண்டு பேரும் வண்டியில ஏறுங்கடா...'' என்றவர் டிரைவரிடம் ஓடிப்போய் ஏதோ கூறி வந்தார்.

பிடித்திருந்த இடத்தில் நானும் தம்பியும் ஜம்மென மூட்டை முடிச்சுகளோடு அமர்ந்துகொள்ள... பஸ் தன் சக்கரங்களை உருட்டியபடி ஊர்ந்தது.

''என்ன இது சின்னப் பசங்களையும், எல்லா உடைமைகளையும் பஸ்ஸில் ஏற்றிவிட்டு, என்ன உங்க வேலையும் நீங்களும்!'' என பஸ் புறப்பட்ட கணத்தில் அம்மாவும் அதில் ஏற, அப்பா கைக்குழந்தையுடன் செய்வதறியாமல் நின்றிருந்தார்.

குழந்தையை அருகேயிருந்த மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல கூறியபடி கடைக்காரர்!

தேவையில்லாமல் கடைத் தெருவைச் சுற்றிவிட்டு மீண்டும் டவுன்ஷிப் பஸ் ஸ்டாண்ட் வந்து, பிறகுதான் சாத்தனூர் செல்லும் இந்த பஸ். இது தெரியாமல்தான் நாங்கள் பஸ்ஸில் கிளம்பிவிட்டோம்.

அம்மா வழியெல்லாம் புலம்பிக் கொண்டு வந்தார். குழந்தையை நினைத்துக் கவலைப்பட்டார். ஆனால், கண்டக்டர் மீண்டும் டவுன் பஸ் ஸ்டாண்ட் போகும் என்று வாக்குறுதி கூறியதால்தான் அன்று அம்மா ஓடும் பஸ்ஸிலிருந்து குதிக்காமல் இருந்தார்.

ஒவ்வொரு வினாடியும் ஒரு மணி நேரம் போலத் தோன்றியது. அப்பா இல்லாமல் நாங்கள் பயணித்த முதல் பயணம் என்பதால் பதற்றமும், பரபரப்பும் பயமும் ஏகத்துக்கு அப்பிக் கொண்டன.

ஒருவழியாய் வெஸ்டர்ன் காலனியைக் கடந்த மூன்றாம் நிமிடம் டவுன் பஸ் ஸ்டாண்டில் பஸ் நுழைந்தது. சர்பத் கடை தெரிந்தது. அப்பா கவலையுடன், தூங்கிய குழந்தையைத் தூக்கியபடி நின்றிருந்தார். எங்களைப் பார்த்துவிட்டு பஸ் ஏறி வந்தார்.

''அப்பா சர்பத் காசு கொடுத்திட்டியா?'' தம்பியிடமிருந்து முதல் கேள்வி அதுதான்!

''என்னங்க, குழந்தை எப்படி இருக்கு?'' அம்மா பதறினாள்.

''ஒண்ணுமில்லே சின்னக் கிறல்தான். பக்கத்து வீதியிலேயே டாக்டர் இருக்காரு. போய்ப் பார்த்து, தடுப்பு ஊசி போட்டுட்டு வந்தேன்.''

''எனக்குக் குழந்தைக்கு என்ன ஆச்சோங்கற டென்ஷன். கையும் ஓடலை... காலும் ஓடலை. ஏண்டா ஏதாவது சாப்பிட்டீங்களாடா?''

''அதுங்களே பாவம் பசியோட இருக்கும். நான் வேணா போய் வாங்கிட்டு வந்திடவா?''

சாப்பாடு முடித்துவிட்டு, ஆற அமர வந்து பார்த்தபோது எ.எஸ்.எம். கிளம்பிப் போயிருந்தது. மத்தியான மொட்டை வெயில். பஸ்கள் குறைந்து பஸ் ஸ்டாண்டு வெறிச்சோடியது.

மீண்டும் சர்பத் கடை வாசலுக்கு வந்து நின்றோம். நாங்கள் கேட்காமலே எல்லோருக்கும் சர்பத் கிடைத்தது.

நாங்கள் சிவப்பு - நீல வேன் எ.எஸ்.எம்.முக்காக மீண்டும் காத்திருக்கத் தொடங்கினோம்!



**''கள்ள நோட்டு வழக்குல உங்களுக்கு பத்து வருஷம் கடுங்காவலும், அம்பதாயிரம் ரூபாய் அபராதமும் விதிக்கிறது இந்த கோர்ட்!''**

**''அபராதத் தொகையை நல்ல நோட்டுலதான் கட்டணுமா, எசமான்?''**

**- திருச்சி அனன்யா**

*சென்ற வாரத் தொடர்ச்சி...*

# "ஆன்மிகத் தலைவர்களுக்கு அரசியல் வேண்டாம்!"



**- சத்குரு ஜக்கி வாசுதேவ் பேட்டி**

**ஆன்மிகத் தலைவர்கள் ஒன்றுகூடி அரசியல் - சமூகப் பிரச்னைகளில் மக்களுக்கு ஏன் விழிப்புணர்வு ஊட்டக் கூடாது?**

அரசியல் சக்திகளுக்குத் துணையாக எங்களைச் செயல்படச் சொல்கிறீர்களா? என் மீது நம்பிக்கைக் கொண்டோர் லட்சக்கணக்கானவர்கள் இருக்கிறார்கள் என்பது உண்மைதான். அரசியலும், சூழ்ச்சியும் கைகோத்து நிற்கும் நதிநீர் மற்றும் பிராந்திய, இனப் பிரச்னைகளில் தலையிட்டுத் தீர்வு சொல்லும்பட்சத்தில், அந்த நம்பிக்கையை இழக்க வேண்டிவரும். அரசியல்வாதிகளே அந்தப் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளட்டும். நாட்டு மக்கள் அந்த அரசியல்வாதிகள் மீது நம்பிக்கை வைத்துத்தான் பொறுப்பை வழங்கியிருக்கிறார்கள். நீங்கள் சொல்வதுபோல் நாங்கள் இணைந்து செயல்பட்டால், அதற்கு அரசியல் முகம் கிடைத்துவிடுமே! ஆன்மிகத் தலைவர்களும், இந்த நாட்டின் குடிமகன்களே. அந்த வகையில் ஒன்றுகூடி பிரச்னைகளை விவாதித்து, தீர்வு சொல்லலாம். ஆன்மிகத் தலைவராக, இந்த நாட்டின் சமூக, அரசியல் சூழல் குறித்து அலசுவது சரியல்ல. ஆனால், ஒரு குடிமகனாக என்னால் எல்லாவற்றையும் பற்றிப் பேச முடியும். ஆனால் ஆன்மிகத் தலைவராகப் பேசினால், மக்களின் நம்பிக்கையைத் தவறாகப் பயன்படுத்தியதாகத்தான் கருதப்படும். ஏனென்றால் மக்கள் எங்கள் மீது வைத்திருக்கும் நம்பிக்கை ஒரு மாறுபட்ட தளத்தை அடிப்படையாகக் கொண்டது. மக்களை, பிராந்திய, இன உணர்வு அடையாளங்களைத் தாண்டி அழைத்துச் சென்றாலே, பல பிரச்னைகளுக்குத் தீர்வு கிடைக்கும். ஓர் ஆன்மிகத் தலைவராக, இந்தத் தேசத்துக்காகவோ, அல்லது ஒரு மாநிலத்துக்காகவோ நான் பேச முடியாது. மனித நல்வாழ்க்கை, மேம்பாடு என்ற வகையில்தான் பேச முடியும்.

**குடும்ப உறவுமுறைகளுக்கிடையில் முரண்பாடுகள் அதிகமாகாமல் நல்ல புரிதலை ஏற்படுத்துவது**

**இன்று மிகவும் பெரிய சவாலாகியிருக்கிறது...?**

குடும்பம் என்ற ஒன்று இல்லாவிட்டால் இதுபோன்ற பிரச்னைகள் இருக்காதல்லவா? (சத்தமாகச் சிரிக்கிறார்) உறவுமுறைகள் மனச் சங்கடங்களைக் கொண்டு வரும்போது, அதற்கு நல்ல நிவாரணம், தியானம்தான். தியானமும் யோகாவும் உங்களுக்குள்ளேயே நல்லிணக்கத்தைக் கொண்டுவரும். அதன் காரணமாகச் சுற்றி இருக்கும் உறவுமுறைகளுடன் நல்லிணக்கம் ஏற்படும். உங்களுக்குள்ளேயே நல்லிணக்கத்தையும், மனமுதிர்ச்சி, மற்றும் பக்குவத்தையும் கொண்டு வருவது எப்படி என்று நாங்கள் ஈஷாவில் சொல்லித் தருகிறோம். ஈஷா 'யோகா' மூலம் பல பிளவுபட்ட குடும்பங்களில் 'உறவுப் பூ' மீண்டும் மலர்ந்திருக்கிறது. 'யோகா' என்பது வாழ்வியல் அம்சங்கள் அனைத்தையும் உள்ளடக்கியது.

**ஈஷா அமைப்பு, கிராமப்புறங்களில் நல்ல கட்டுமானத்துடன் இருப்பதால், மக்களுக்குச் சுத்தம், சுகாதாரம் பற்றி போதித்து ஆரோக்கியமான சமுதாயம் அமைய தங்கள் பங்களிப்பை ஆற்றலாமே?**

ஏன் இப்போதே நாங்கள், இது போன்ற பணிகளைச் செய்து வருகிறோமே! அருகில் தாளிக்குடி என்ற கிராமத்துக்குச் சென்று பாருங்கள். அந்தக் கிராம மக்கள் எப்படி அதைச் சுத்தமாக வைத்திருக்கிறார்கள் என்பது புரியும். எல்லாம் ஈஷா செயல்பாட்டின் விளைவுதான். மண்ணில் மக்கிவிடும் குப்பைகளால் பயன் பெறுவது மரங்கள்தானே! எனவே சுத்தம், சுகாதாரம் என்பது 'மரம் நடும்' இயக்கத்தின் செயல்பாடுகளுடன் ஒருங்கிணைந்த ஒன்றுதான். மனிதன் சந்தோஷமாக இருக்க வேண்டும் - நான் சொல்லுவது மனம் சார்ந்த சந்தோஷம். அப்போதுதான் அவன் இருக்கும் சுற்றுச் சூழலை அவன் சுத்தமாக வைத்திருப்பான். இன்றைய தொழில்நுட்பமும், வசதிகளும், அவனது எல்லாப் பிரச்னைகளுக்கும் தீர்வு காண உதவும். ஆனால் அவனது மன சாட்சியைத் தட்டி எழுப்பி, மனத்தை மலர வைப்பதற்குத் தொழில்நுட்பம் உதவாது.



அந்த 'மலர வைக்கும்' பணியைத்தான் ஈஷா செய்கிறது.

**ஈஷாவின் தியான - யோக பயிற்சிகள் 'ஆனந்த அலை' என்ற பெயரில் தமிழ்நாட்டில் மே முதல் வாரத்தில் மாபெரும் இயக்கமாக நடைபெறப் போவதாக கேள்விப்படுகிறோம். அது பற்றிச் சொல்லுங்கள்.**

(குரலில் உற்சாகத்துடன் பேசுகிறார்) வாழ்க்கையை, இன்னமும் நெருங்கிப் பார்த்து அனுபவிப்பது எப்படி என்று சொல்லித் தருவோம். அனைத்து அம்சங்களையும் உள்ளடக்கிய வாழ்க்கை எது

பவர்களுக்குப் பளிச்செனத் தெரிந்துவிடும். உடல்சார்ந்த சந்தோஷங்களே வாழ்க்கை என்ற போலி எண்ணங்கள் தவிடுபொடியாக்கப்பட்டு, உள்ளத்தில் உணர்வு பூர்வமான 'பூ' மலரும். உங்கள் புறவாழ்க்கையிலும் அந்தப் பூவின் வாசம் புத்துணர்வோடு வீசும்போது, ஆனந்த அலைக்கான அடித்தளம் அங்கே அமைக்கப்படும். இந்த அனுபவத்தை நீங்கள் பெற வேண்டும். வயிற்றை நிரப்பி விட்டுத்தான் தியானமும், யோகமும் சொல்லித்தர வேண்டுமென்று சொன்னேன் அல்லவா? தமது நாட்டின் பொருளாதாரம் இப்போது வளங்கொழிக்கும் முகமாக மாறி வருகிறது. எந்த வகையான மனிதர்கள் பொருளாதார அதிகாரத்தை எதிர்காலத்தில் கையாள்வார்கள் என்பது முக்கியமாகப் பார்க்க வேண்டிய ஒன்று. அந்தப் பொருளாதார அதிகாரம் பெறப் போகிற மனிதர்கள், ஆனந்த அலை மூலம் 'நல்ல மனிதர்களாகவும் மலர்வார்கள். தமிழ்நாட்டு மக்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது என் விருப்பம்.

**"ஒரு குடிமகனாக என்னால் எல்லாவற்றையும் பற்றிப் பேச முடியும். ஆனால், ஆன்மிகத் தலைவராகப் பேசினால் மக்களின் நம்பிக்கையை இழக்க நேரிடும்!"**

**'ஏகப்பட்ட கனவுகளுடன் என் மகனை வளர்த்தேன். அவன் அவற்றைச் சிதைக்கும் வகையில் ஈஷாவில் சேர்ந்து விட்டான்' என்று ஒரு தாய் கடிதம் எழுதியிருந்தார். உங்களோடு இருக்கும் நிறைய இளைஞர்களின் அம்மாக்கள் இப்படி மனதளவில் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கக்கூடும்! இதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

அந்தத் தாய் என்ன எதிர்பார்க்கிறார்? படித்த படிப்புக்கு மகன் நன்றாகச் சம்பாதித்து அவரிடம் கொடுக்க வேண்டுமென்றா? இங்கே இருக்கும் ஒவ்வொரு இளைஞரும், வெளியில் இருந்தால் செய்துகொண்டிருப்பதை விட, பல மடங்கு அதிகமாக, ஆக்கபூர்வமான பணிகளை இங்கே செய்து கொண்டிருக்கிறார்கள். முழு நேரமாக இயங்குவதற்கு மிகக் குறைந்த எண்ணிக்கையிலான இளைஞர்களே முன் வந்திருக்கிறார்கள். இன்னமும் நிறைய பேர் வர வேண்டும். இங்கே எந்த இளைஞரும் வேலை, வெட்டியின்றி சோம்பேறியாகச் சுற்றித் திரியவில்லை. இந்த உலகத்துக்கும், சமூகத்துக்கும் தேவையான உபயோகமான பணிகளை அவர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். வெளியில் உள்ள இளைஞர்களை விட அதிக அளவில் உழைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒரு தாய், தாம் செய்த 'முதலீட்டு'க்கு, மகனிடமிருந்து 'வருமான'த்தை மட்டும் எதிர்பார்க்கக்கூடாது. அப்புறம் வியாபாரிக்கும் அவருக்கும் என்ன வித்தியாசம்? தமது மகனைப் பற்றிய நியாயமான கவலை அந்தத் தாய்க்கு இருக்குமானால், இங்கே வந்து பார்க்கட்டும். மனிதகுலத்துக்கும், தான் சார்ந்துள்ள அமைப்புக்கும் பயனுள்ள பணிகளை அவன் செய்யவில்லை யென்று நினைத்தால் எங்களைக் கேள்வி கேட்கட்டும்.

**- ப்ரியன்**

**செ**ன்னையில் செல்ஃபோன் திருட்டு நாளுக்கு நாள் அதிகமாகி வருவது அனைவரும் அறிந்ததே. செல்ஃபோன் திருட்டுப் போனால் முதலில் நாம் செய்ய வேண்டியது என்ன...? யாரை அணுக வேண்டும்? என்பது போன்ற அடிப்படை கேள்விகளுடன், சென்னை சைபர் க்ரைம் பிரிவின் துணை போலீஸ் கமிஷனரான டாக்டர் சுதாகரைச் சந்தித்தோம்...

சேமிக்க முடிகிறதோ அந்தப் பொருட்கள் அனைத்திலுமே சைபர் க்ரைம் புரிந்திட முடியும்.

'ஹாக்கிங்' என்றழைக்கப்படுவது மற்றொரு வகையான சைபர் க்ரைம். நம் வீட்டுக் கணினியிலோ அல்லது 20, 25 கணினிகள் ஒன்றாகச் சேர்த்து அமைக்கப்பட்ட ஒரு நெட்வொர்கிங்கிலோ நமக்குத் தெரியாமலேயே, நமது கணினியில் நாம் கொடுக்கும் பாஸ்வேர்ட்களையும்

# நில்... கவனி...

''முதலில் சைபர் க்ரைம் என்றால் என்ன என்பதைப் பற்றி மக்கள் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் செல்ஃபோன் திருட்டை அவர்கள் சுலபமாக எதிர்கொள்ள முடியும்!

கணினி, ஐ பாட், தொடங்கி டிஜிட்டல் காமரா, செல்ஃபோன்... என எந்தெந்த எலக்ட்ரானிக் மீடியாக்களிலெல்லாம் நம்மால் தகவல்களைச்



கிரெடிட் கார்ட் நம்பர்களையும் அறிந்து கொள்ளும் முறைதான் இது. இப்படி ஹாக்கிங் முறையில் கண்டுபிடிக்கப்பட்ட கிரெடிட் கார்ட் நம்பர்களைப் பயன்படுத்தி, ஆன் லைன் மூலமாக ரயில் டிக்கெட்டுகளையும், விமான டிக்கெட்டுகளையும் பதிவுசெய்து ஏமாற்று வேலைகளை வெகு சுலபமாக நடத்திவிடுகிறார்கள்.

அதைப் போலவே, பல இளைஞர்களும் ஏமாந்து போவது வேலை அறிவிப்போடு வரும் இ-மெயில்களில்தான். 'உங்களுக்கு லண்டனில் உள்ள, குறிப்பிட்ட கம்பெனியில் வேலை கிடைத்திருக்கிறது. இந்த வேலைவாய்ப்பை நீங்கள் நழுவவிடாதீர்கள். உடனடியாக இவ்வளவு பணத்தை முதலீடு செய்யுங்கள்' போன்ற தகவல்களுடன் வரும் மின்னஞ்சல்களைப் பார்த்து, நஷ்டமடைபவர் பலர்'' என்றவரிடம், சென்னையில் சமீப காலமாக, செல்ஃபோன்கள் அதிகளவு திருட்டுப் போகிறதே என்றால், ''ஆமாம்; உண்மைதான். இன்று பள்ளி செல்லும் குழந்தைகள்கூட செல்ஃபோன் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். செல்ஃபோன் தொலைந்துபோவது என்பதும், மற்ற



# 'செல்!'



களிலும் ரயில்களிலும், சர்வ சாதாரண மாக நிகழ்கிறது. கடந்த ஆறு மாத காலத்தில் மட்டுமே கிட்டத்தட்ட 2,000 செல்ஃபோன்கள் திருடு போயுள்ளன. அதில் 45 முதல் 50 சதவிகித செல்ஃபோன் களை நாங்கள் தேடிக்கண்டு பிடித்துக் கொடுத்துள்ளோம்.

செல்ஃபோன் திருடப்பட்டுவிட் டால், முதலில் வீட்டுக்கு அருகாமையில் உள்ள காவல் நிலையத்தில் அதைத் தெரிவிக்க வேண்டும். அந்தந்தக் காவல் நிலையங்களிலிருந்து, எங்களிடம் அந் தப் புகார் பட்டியல் வந்து சேரும். ஒவ் வொரு செல்ஃபோனுக்கும் IMEI எண் என்று ஒன்று இருக்கும். அந்த எண்ணை வைத்து நாங்கள் அந்தந்த செல்ஃபோன் சேவை நிறுவனங்களைத் தொடர்பு கொண்டு, தொலைந்துபோன செல் ஃபோனை, இப்பொழுது யார் உப யோகப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள், அவரது முகவரி போன்ற விவரங்களைச் சேகரிப்போம். முதலில் புகார் அளிக்கப் பட்ட காவல் நிலையத்துக்கு அனுப்பி விடுவோம். நாங்கள் கொடுத்த குறிப்பை வைத்துக்கொண்டு, செல்ஃபோன் பறி கொடுத்தவரிடம், அந்த காவல் நிலை யத்தைச் சேர்ந்தவர்கள் திருப்பிக் கொடுத்துவிடுவார்கள். சில சமயங்களில் திருடப்பட்ட செல்ஃபோன்கள் நெட் வொர்க் ஏரியாவைத் தாண்டி எடுத்துச் செல்லப்பட்டிருந்தால், எங்களால் ஒன் றும் செய்யமுடியாது. 'ஆன்ட்டி தெப்ட் ஸாஃப்ட்வேர்' என்றழைக்கப்படும் மென் பொருளை செல்ஃபோன் உபயோகிப் பவர்கள் கட்டாயம் பொருத்திக்கொண் டால் இந்தத் திருட்டைத் தடுக்கலாம்.

உலகளவில் பார்த்தால் சென்னை ஒரு முக்கிய ஸாஃப்ட்வேர் நகரம். ஆனாலும் இங்கு அதிக அளவு சைபர் கிரைம் நடப்பதில்லை. இளைஞர்கள் சில சாட் டிங்கில் தங்களது புகைப்படங்களை அனுப்புவது அல்லது தங்களது முகவரி, செல்ஃபோன் நம்பர்களைக் கொடுப்பது போன்றவற்றைச் செய்யாமல் இருந் தாலே, பாதி சைபர் குற்றங்களைக் குறைத்துவிடலாம்'' என்கிறார் சுதாகர்.

**- நளினி சம்பத்குமார்**



**கோ**யில்களின் அன்றாட நடைமுறைகள் என்னென்ன? அபிஷேகத்துக்குரிய பால், நீர், அலங்காரத்துக்கும் அர்ச்சனைக்கும் வேண்டிய மலர்கள், விளக்கு ஏற்ற எண்ணெய், நெய், நித்தியபடி நைவேத்தியத்துக்கு வேண்டிய அரிசி, இவை அனைத்தும் கோயிலைச் சேர்ந்த அமைப்பிலிருந்தே கிடைத்து வந்தன. பால் பசு மடத்தில் இருந்தும், கோயில் நிலத்திலிருந்து நெல்லும், எண்ணெய் வித்துக்களும் கிடைத்தன. சில கோயில்களில் இதற்கென நிவந்தங்களும் நிரந்தர கட்டளைகளும் ஏற்படுத்தப்பட்டு இருந்தன. இதைப் போலவே பூஜைக்கு வேண்டிய மலர்கள், கோயிலைச் சார்ந்த நந்தவனங்களில் பயிர் செய்யப்பட்ட செடிகொடிகளிலிருந்து கிடைத்தன. நந்தவனத்தைப் பராமரிக்க,



# புண்ணியம் தரும்



அதற்கென நியமிக்கப்பட்ட ஆட்களுக்கு கோயிலில் இருந்து, அதற்கும் நிவந்தங்கள் அளிக்கப்பட்டதாக கல்வெட்டுகளிலும் வேறு சாஸனங்களிலிருந்தும் அறிய முடிகிறது. அமரர் கல்கியின் பொன்னியின் செல்வன் மூலம் நமக்கு அறிமுகமான சேந்தன் அமுதன் இப்படி புஷ்ப கைங்கர்யம் செய்து வந்தவன்தானே! அந்தப் புண்ணியம் தானே, அவனை சோழ தேசத்துக்கே ராஜாவாக்கியது! இறைவனுக்கு உகந்த கைங்கர்யங்களில் புஷ்ப கைங்கர்யமே மிக உயர்ந்த பலன் அளிப்பது என்பதற்கு இதைவிட சான்று வேறு வேண்டுமா என்ன?

ஆழ்வார்களில் ஒருவரான பெரியாழ்வார், கண்ணன் உகந்த கைங்கர்யங்களில் புஷ்ப கைங்கர்யமே முக்கியமானது என்று உணர்ந்து, ஸ்ரீவில்லிபுத்தூரில் நந்தவனம் அமைத்து, தாமே அதனைப் பராமரித்து, தம் கையாலேயே மலர்களைப் பறித்து மாலை கட்டி, பெருமாளுக்குச் சூட்டினார். அவரது இந்தத் தொண்டின் மகிமையினால் பூமாதேவியே மனம் மகிழ்ந்து அவருக்கு மகளாக வந்து, அவர் செய்த

தொண்டில் தானும் பங்கேற்றுக் கொண்டாள். அவள் சூடிக்கொடுத்த மாலையையே பெருமாளும் உவந்து ஏற்றுக் கொண்டார் என்று படிக்கிறோம் அல்லவா?

புஷ்ப கைங்கர்யத்துக்காக ஏற்பட்ட நந்தவனம் கோயிலின் ஒரு பகுதியாகவே அமைந்துவிட்டது. திருவாரூரில் கோயில் வளாகம் ஐந்து வேலி என்றால், நந்தவனமும் ஐந்து வேலி நிலத்தில் அமைந்ததாம்!

இருவாட்சி, மல்லிகை, முல்லை, ஜாதி, செண்பகம், பவழமல்லி, மகிழம், பாதிரி போன்ற வாசனை மிகுந்த மலர்களும், அரளி, கொன்றை, விருட்சி, நந்தியாவட்டை, செம்பருத்தி போன்ற வண்ணமும் வனப்பும் மிகுந்த மலர்களும், மரிக்கொழுந்து, தவனம், துளசி, மாசிப் பச்சை ஆகிய மணம் மிகுந்த பத்திரங்களும் (இலைகள்), வன்னி, வில்வம்

# பூக்கள்!

போன்ற விசேஷ குணமுடைய மரங்களும் நந்தவனங்களில் நிறைந்து காணப்பட்டன.

செடிகளுக்கு வேண்டிய தண்ணீருக்காக கிணறு, தடாகம், ஓடை ஆகிய நீர்நிலைகளும் நந்தவனத்துக்கு உள்ளேயே அமைக்கப்பட்டு ஓர் அழகிய பூங்காவாகத் திகழ்ந்தன கோயில் வளாகங்கள். அந்தந்த வேளைக்குரிய மலர்கள் மலர்ந்து மணம் வீசி, கோயிலை நாடி வரும் பக்தர்களுக்கு ஒரு தனி சுகானுபவத்தைத் தந்தன.

இப்போதெல்லாம் கோயில் நந்தவனங்கள், ஆக்ரமிப்பாளர்களின் சுயநலக் கரங்களில் சிக்கி, சுருங்கி, சோபை இழந்து

த.கி. நீலகண்டன்



இருப்பதைக் கண்டு மனம் சகிக்கவில்லை. இப்படிப்பட்ட நந்தவனங்களை ஆன்மிக அன்பர்கள் முன்வந்து முயற்சியுடன் பராமரித்தால் தொண்டுக்குத் தொண்டும் ஆச்சு! உடல் உழைப்புக்கு உடல் உழைப்பும் ஆச்சு! புண்ணியத்துக்குப் புண்ணியமும் ஆச்சு!

நன்றி: **அரண வசந்தன்**







# 'பாப்' பாடகியின் பாப்பா விளையாட்டு!



'**பா**ப்'பா - பாப் பாடகி மடோனா எந்த நாட்டுக்குப் போனாலும், அங்கு ஒரு குழந்தையைத் தத்தெடுத்துக் கொண்டுதான் திரும்பி வருவார். இரண்டு வருஷங்களுக்கு முன்னர் மாளவியாவுக் குப் போயிருந்த மடோனா, அந்நாட்டுச் சட்டங்களைப் பின்பற்றாமல், தமது நட்சத்திர அந்தஸ்தைப் பயன்படுத்தி ஒரு குழந்தையைத் தத்தெடுத்து வந்தார். அந்தப் பிரச்னை இப்போது சூடுபிடித் திருக்கிறது. மாளவியா உயர்நீதிமன் றத்தில் நடந்துகொண்டிருக்கும் வழக்கின் தீர்ப்புக்கு நாள் குறித்தாகிவிட்டது. ஆனால், மடோனாவின் வக்கீல்கள் தீர்ப்பை ஒத்திவைக்குமாறு கேட்டிருக் கிறார்கள். அவரின் லேட்டஸ்ட் பாப் ஆல்பத்தைப் பிரபலப்படுத்துவதற்காக அவர் இசைப் பயணம் புறப்படுவதுதான் காரணம்.

வழக்கின் தீர்ப்பு எப்படி இருக்குமோ? ஆனால் அதற்கு முன்பே அடுத்த குழந் தையைத் தத்தெடுக்கத் தயாராகிவிட் டார் மடோனா. இந்த முறை இந்தியக் குழந்தையாம். இந்தியா என்றால் பிரச் னைகள் வராது என்று நினைக்கிறாரோ என்னவோ..

தாலாட்டு கேட்க வாய்ப்பில்லாத குழந்தைகள் 'பாப்' கேட்டுத்தான் வள ரட்டுமே.

### பால்போலே பதினாறில்

**சி**ன்ன வயதில் பிரபலமாவது சில ருக்கு மட்டுமே அடிக்கும் அதிர்ஷ்டம். ஹாரிபாட்டர் படத்தின் நாயகன் டேனியல் ராட்கிளிஃப் அடைந்தது பேரதிர்ஷ்டம். சமீபத்தில் ஆஸ்திரேலி யாவில் நடந்த ஒரு விழாவுக்குப் போயி ருந்த ராட்கிளிஃப் ஜோடியாகத் திரிந்த அழகிய மங்கையர் இருவரைப் பார்த்து மனதைப் பறிகொடுத்துவிட்டார்!

கொஞ்ச நேரம் ஜாலியாக கடலை போட்டதோடு அவர்களோடு சேர்ந்து இவரும் ஒரு 'தம்' போட்டிருக்கிறார்.

விழா முடிந்து லண்டன் போனவருக்குத் தூக்கம் என்பதே மறந்து போனதாம். மனத்தில் உள்ளதை மறைக்காமல் ஒரு பேட்டியும் கொடுத்துவிட்டார். உடனே ஆஸ்திரேலிய பத்திரிகைகள் அந்த இரண்டு பெண்களையும் கண்டு பிடித்து 'ஃபாலோ-அப்' எழுதிவிட்டார்கள்.

பாவம் ராட்கிளிஃப், இரண்டு பெண்களுக்குமே ஏற்கெனவே பாய்-ஃப்ரெண்ட்ஸ் இருக்கிறார்களாம். இருவருக்கும் இவரைவிட ஏழு வயது அதிகம் என்பது எக்ஸ்ட்ரா தகவல்.



'வயசு பதினெட்டு ஆச்சு. இன்னும் ஒரு கேர்ள்-ஃப்ரெண்ட் கிடைக்கலையே' என்று செம மூட்-அவுட்டில் இருக்கிறாராம் ராட்கிளிஃப். அடுத்த ஹாரி பாட்டர் படத்திலும் அய்யாதான் ஹீரோ.

## ஹாலிவுட் தசாவதாரம்

**ஹா**லிவுட்டில் எப்போதுமே காமிக்ஸ் எழுத்தாளர்களுக்குத் தனி மரியாதை உண்டு. எண்பத்தைந்து வயதாகும் காமிக்ஸ் எழுத்தாளர் ஸ்டான் லீ, அரை நூற்றாண்டு காலமாய் ஹாலிவுட்டை ஆட்டிப் படைப்பவர். அவர் உருவாக்கி உலாவவிட்டிருக்கும் கதாபாத்திரங்கள் அமெரிக்காவில் மட்டுமல்ல, உலகெங்கும் உள்ள ரசிகர்களோடும் நெருங்கி உறவாடி நினைவை விட்டு அகலாதவை. ஹல்க், அயர்ன் மேன், எக்ஸ்-மேன், ஸ்பைடர்மேன் என்று ஏகப்பட்ட மேன்கள் இவரது ஐடியாவில் உதித்தவர்கள்.

ஸ்டான் லீயின் அத்தனை படைப்புகளையும் பிரபலப்படுத்திய மார்வெல் நிறுவனம், இப்போது வருத்தத்தில் இருக்கிறது. அதன் போட்டியாளரான விர்ஜின் காமிக்ஸ் கம்பெனிக்கு, ஸ்டான் லீ கட்சி மாறிவிட்டார். தொடர்ந்து அவரது அதிரடி அறிவிப்பும் வெளியாகியிருக்கிறது. அடுத்த ஆண்டில் ஒன்றல்ல... இரண்டல்ல... பத்து கேரக்டர்களை அறிமுகப்படுத்தப் போகிறாராம்.



– ஸாந்த்

அமரர் கல்கி

# பார்த்திபன்

## 38. என்ன தண்டனை?

அமாவாசையன்றைக்கு மறுநாள் பொழுது புலர்ந்ததிலிருந்து மாமல்லபுரத்து அரண்மனையில் குந்தவி தேவிக்கு ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு யுகமாகக் கழிந்துகொண்டிருந்தது. அடிக்கடி அரண்மனை உப்பரிகை மாடத்தின்மேல் ஏறுவதும் நாலாபுறமும் பார்ப்பதும், மறுபடி அவசரமாகக் கீழிறங்குவதும், பணியாட்களுக்கு ஏதேதோ கட்டளையிடுவதும், உறையூரிலிருந்து அவளுடன் வந்திருந்த வள்ளியிடம் இடையிடையே பேசுவதுமாயிருந்தாள். என்ன பேசினாலும், எதைச் செய்தாலும் அவளுடைய செவிகள் மட்டும் குதிரைக் குளம்படியின் சத்தத்தை வெகு ஆவலுடன் எதிர்நோக்கிக்கொண்டிருந்தன. பணியாட்களுடன் பேசிக் கொண்டிருக்கும்போதே சட்டென்று பேச்சை நிறுத்திக் காதுகொடுத்துக் கேட்பாள். விக்கிரமனையும் பொன்னனையும் தான் அவள் அவ்வளவு ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள் என்று சொல்ல வேண்டியதில்லை.

விக்கிரமனும் பொன்னனும் வந்தவுடனேயே என்ன செய்ய வேண்டுமென்று குந்தவி தீர்மானித்து வைத்திருந்தாள். விக்கிரமனுடன் அதே கப்பலில் தானும் போய்விடுவது என்ற எண்ணத்தை அவள் மாற்றிக் கொண்டுவிட்டாள். அதனால் பலவிதச் சந்தேகங்கள் தோன்றி மறுபடியும் விக்கிரமன் பிடிக்கப்படுவதற்கு ஏதுவாகலாம். இது மட்டுமல்ல; தந்தையிடம் சொல்லிக்கொள்ளாமல் அவ்விதம் ஓடிப் போவதற்கும் அவளுக்கு மனம் வரவில்லை? நரசிம்ம சக்கரவர்த்தியின் பரந்த கீர்த்திக்குத் தன்னுடைய செயலால் ஒரு களங்கம் உண்டாகலாமா? அதைக் காட்டிலும் விக்கிரமன் முதலில் கப்பலேறிச் சென்ற பிறகு, தந்தையிடம் நடந்ததையெல்லாம் கூறி மன்னிப்பு கேட்டுக் கொண்டு, விக்கிரமனையே தான் பதியாக வரித்துவிட்டதையும் தெரிவிப்பதே முறையல்லவா? அப்போது சக்கரவர்த்தி தன்னைக் கட்டாயம் மன்னிப்பதுடன், கப்பலில் ஏற்றித் தன்னை செண்பகத் தீவுக்கும் அனுப்பி வைத்துவிடுவார். 'உன்னுடைய கல்யாணத்துக்காக நான் ஒரு பிரயத்தனமும் செய்யப் போவதில்லை. உன்னுடைய பதியை நீயேதான் ஸ்வயம்வரம் செய்துகொள்ள வேண்டும்' என்று சக்கரவர்த்தி அடிக்கடி கூறி வந்திருக்கிறாரல்லவா? அப்படியிருக்க, இப்போது தன் இஷ்டத்துக்கு அவர் ஏன் மாறு சொல்ல வேண்டும்?

இத்தகைய தீர்மானத்துடன் குந்தவி விக்கிரமனுடைய வரவுக்கு வழி நோக்கிக் கொண்டிருந்தாள். வான்வெளியில் சூரியன் மேலே வரவர, குந்தவியின் பரபரப்பு அதிகமாகிக்கொண்டிருந்தது. கடைசியாக, கிட்டத்தட்ட நடு மத்தியானத்தில் குதிரைகளின் குளம்படிச் சத்தம்

# கனவு

கேட்டபோது குந்தவியினுடைய இருதயம் விம்மி எழுந்து தொண்டையை அடைத்துக் கொண்டது. மறுபடியும் ஒரு தடவை விக்கிரமனைக் கப்பலில் ஏற்றி அனுப்பி விட்டுத் தான் பின்தங்குவதா? கதையிலே, காவியத்திலே வரும் வீரப் பெண்மணிகள் எல்லோரும் அவ்விதம்தானா செய்திருக்கிறார்கள்? அர்ச்சுனனோடு சுபத்திரை கிளம்பிப் போய்விடவில்லையா? கிருஷ்ணனோடு ருக்மணி போகவில்லையா? தான் மட்டும் எதற்காகப் பின்தங்க வேண்டும்? விக்கிரமனுக்கு விடை கொடுத்தனுப்புவது தன்னால் முடியாத காரியம் என்று அவளுக்குத் தோன்றிற்று. குதிரைகளின் காலடிச் சத்தம் நெருங்க நெருங்க அவளுடைய மனக்குழப்பம் அதிகமாயிற்று.

**வ**ந்த குதிரைகள் அரண்மனை வாசலில் வந்து நின்றன. வாசல் காப்பாளருக்கு, இரத்தின வியாபாரி தேவசேனர் வந்தால் உடனே தன்னிடம் அழைத்து வரும்படி குந்தவி கட்டளையிட்டிருந்தாள். இதோ, குதிரையில் வந்தவர்கள், இறங்கி உள்ளே வருகிறார்கள். அடுத்த விநாடி அவரைப் பார்க்கப் போகிறோம்! ஆகா! இதென்ன? உள்ளே வருகிறது யார்? சக்கரவர்த்தியல்லவா...? குந்தவியின் தலை சுழன்றது. எப்படியோ பல்லைக் கடித்துக் கொண்டு சமாளித்துக்கொண்டாள். சிறிது தடுமாற்றத்துடன், ''அப்பா! வாருங்கள்! வாருங்கள்! இத்தனை நாளாய் எங்கே போயிருந்தீர்கள்?'' என்றாள்.

சக்கரவர்த்தி ஆவலுடன் குந்தவியின் அருகில் வந்து அவளைத் தழுவிக்கொண்டார். உடனே, திடுக்கிட்டவராய், ''ஏன் அம்மா! உன் உடம்பு ஏன் இப்படிப் பதறுகிறது?'' என்று கேட்டார். ''ஒன்றுமில்லை, அப்பா! திடீரென்று வந்தீர்களல்லவா?'' என்றாள் குந்தவி.

''இவ்வளவுதானே? நல்லது, உட்கார் குழந்தாய்! நீ உறையூரிலிருந்து எப்போது வந்தாய்? எதற்காக இவ்வளவு அவசரமாய் வந்தாய்?'' என்று கேட்டுக் கொண்டே சக்கரவர்த்தி அங்கிருந்த ஆசனத்தில் அமர்ந்தார். குந்தவிக்கு அப்போது ஏற்பட்ட இதயத் துடிப்பைச் சொல்ல முடியாது.

'அப்பா இங்கே இருக்கும்போது அவர் வந்துவிட்டால் என்ன செய்கிறது? இப்பொழுது வருகிற சமயமாச்சே! அரண்மனைக்குள் வராமல் நேரே போய்க்



**"இவ்வளவுதானே? நல்லது. உட்கார் குழந்தாய்! நீ உறையூரிலிருந்து எப்போது வந்தாய்? எதற்காக இவ்வளவு அவசரமாய் வந்தாய்?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.**

கப்பலேறச் செய்வதற்கு வழி என்ன?' என்றெல்லாம் எண்ணி அவள் உள்ளம் தவித்தது. அவளுடைய தவிப்பைக் கவனியாதவர் போல சக்கரவர்த்தி, "குழந்தாய்! இன்று சாயங்காலம் நான் உறையூருக்குக் கிளம்புகிறேன். நீயும் வருகிறாயா? அல்லது உறையூர் வாசம் போதுமென்று ஆகிவிட்டதா?" என்றார்.

"உறையூருக்கா? எதற்காக அப்பா?" என்றாள் குந்தவி.

"ரொம்ப முக்கியமான காரியங்கள் எல்லாம் நடந்திருக்கின்றன, அம்மா! அருள்மொழி தேவி அகப்பட்டுவிட்டார்!"

"ஆகா!" என்று அலறினாள் குந்தவி.

"ஆமாம். அருள்மொழி தேவியைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்தது யார் தெரியுமா? நீ அடிக்கடி சொல்வாயே, யாரோ வேஷதாரிச் சிவனடியார் என்று, அவர்தான்!"



"என்ன! என்ன...! தேவி எங்கே இருந்தார்? யார் கொண்டுபோய் வைத்திருந்தார்கள்? அந்தப் போலிச் சிவனடியார்...ஒருவேளை அவரேதான்..."

சக்கரவர்த்தி புன்னகையுடன், "இன்னும் உனக்குச் சந்தேகம் தீரவில்லையே, அம்மா! இல்லை. அந்தச் சிவனடியார் அருள்மொழி ராணியை ஒளித்து வைத்திருக்கவில்லை. ராணியைக் கொண்டுபோய் வைத்திருந்தவன் - நான் முன்னமேயே ஒருதடவை சொன்னேனே - அந்தக் கபாலிகக் கூட்டத்தின் பெரிய பூசாரி - மகா கபால பைரவன். சிவனடியார் அருள்மொழி ராணியைக் காப்பாற்றிக் கொண்டு வந்ததின் பலன், அவருடைய உயிருக்கே ஆபத்து வருவதாயிருந்ததாம். நேற்று இராத்திரி மகா கபால பைரவன் சிவனடியாரை காளிக்குப் பலி கொடுப்பதாக இருந்தானாம். அவரைக் கட்டிப் பலிபீடத்தில் கொண்டுவந்து போட்டாகி விட்டதாம். கழுத்தில் கத்தி விழுகிற சமயத்தில் சிவனடியாரை யார் வந்து காப்பாற்றினார்களாம் தெரியுமா?"

"யார் அப்பா?"

"செண்பகத் தீவிலிருந்து வந்திருந்தானே - இரத்தின வியாபாரி தேவசேனன் - அவனும் படகோட்டி பொன்னனும் நல்ல சமயத்தில் வந்து காப்பாற்றினார்களாம்!"

குந்தவி ஏதோ சொல்வதற்கு வாயைத் திறந்தாள். ஆனால், வார்த்தை ஒன்றும் வெளியில் வரவில்லை. அவளுடைய அழகிய வாய், மாதுளை மொட்டின் இதழ்கள் விரிவதுபோல் விரிந்து

அப்படியே திறந்தபடி இருந்தது.

''இன்னும் ஒரு பெரிய அதிசயத்தைக் கேள், குழந்தாய்! இரத்தின வியாபாரி தேவசேனன் என்பது உண்மையில் யார் தெரியுமா? அவனும் ஒரு வேஷதாரிதான். தேசப் பிரஷ்டனான சோழநாட்டு இளவரசன் விக்கிரமன்தான் அம்மாதிரி வேஷம் போட்டுக்கொண்டு அவனுடைய தாயாரையும் தாய்நாட்டையும் பார்ப்பதற்காக வந்தானாம்! என்ன தைரியம், என்ன துணிச்சல் பார்த்தாயா குழந்தாய்!''

குந்தவி விம்மிய குரலுடன், ''அப்பா! அவர்கள் எல்லோரும் இப்போது எங்கே?'' என்று கேட்டாள்.

''யாரைக் கேட்கிறாய், அம்மா? விக்கிரமனையும், பொன்னனையுமா? அவர்களை உறையூருக்குக் கொண்டுபோகச் சொல்லியிருக்கேன். நானே நேரில் வந்து விசாரணை நடத்துவதாகச் சொல்லியிருக்கிறேன். அதற்காகத்தான் முக்கியமாக உறையூருக்குப் போகிறேன். நீயும் வருகிறாயா?''

இத்தனை நேரமும் குந்தவி அடக்கி வைத்துக்கொண்டிருந்த துக்கமெல்லாம் இப்போது பீறிக்கொண்டு வெளியில் வந்தது. தந்தையின் மடியில் தலையை வைத்துக்கொண்டு 'கோ' என்று கதற ஆரம்பித்தாள்.

இவ்வளவு நேரமும் புன்னகையுடன் பொலிந்துகொண்டிருந்த சக்கரவர்த்தியின் முகபாவத்தில் இப்போது மாறுதல் காணப்பட்டது. அவருடைய கண்களின் ஓரத்தில் ஒரு துளி ஜலம் முத்துப் போல் பிரகாசித்தது. குந்தவியின் தலையையும் முதுகையும் அவர் அன்புடன் தடவிக் கொடுத்து, ''குழந்தாய்! உனக்கு என்ன துக்கம்? உன் மனத்தில் ஏதோ வைத்துக்கொண்டு சொல்லாமலிருக்கிறாய். என்னிடம் மறைப்பானேன்! எதுவாயிருந்தாலும் சொல்'' என்றார்.

குந்தவி கொஞ்சங் கொஞ்சமாக எல்லாவற்றையும் சொன்னாள். காஞ்சி நகரின் வீதியில் சங்கிலிகளால் கட்டுண்டு சென்ற விக்கிரமனைச் சந்தித்ததிலிருந்து தன்னுடைய உள்ளம் அவனுக்கு வசமானதைத் தெரிவித்தாள். பிறகு, மகேந்திர மண்டபத்தில் ஜுரத்துடன் உணர்விழந்து கிடந்த விக்கிரமனைப் பல்லக்கில் ஏற்றி அழைத்துச் சென்றதிலிருந்து, இன்று அவனைக் கப்பலேற்றி அனுப்ப உத்தேசித்திருந்த வரையில் எல்லாவற்றையும் கூறினாள். கடைசியில், ''அப்பா! அந்தச் சோழ ராஜகுமாரனையே என் நாதனாக வரித்துவிட்டேன். மற்றொருவரை மனதிலும் நினைக்க மாட்டேன்!'' என்று கூறி விம்மினாள்.

சக்கரவர்த்தி அப்போது அன்பு கனிந்த குரலில் கூறினார்: ''குழந்தாய், இந்த உலகில் அன்பு ஒன்றுதான் சாசுவதமானது; மற்றதெல்லாம் அநித்தியம். இரண்டு இளம் உள்ளங்கள் அன்பினால் ஒன்று சேரும் போது, அங்கே அன்பு வடிவமான கடவுளே சாந்நித்தியமாயிருக்கிறார். அவ்விதம் அன்பினால் சேர்ந்த உள்ளங்களுக்கு மத்தியில் நின்று தடை செய்ய யாருக்குமே பாத்தியதை கிடையாது; தாய் தகப்பனுக்குக்கூடக் கிடையாதுதான். ஆகையால், நீ சோழநாட்டு இளவரசனை மணம் புரிய

குந்தவி விம்மிய குரலுடன், ''அப்பா! அவர்கள் எல்லோரும் இப்போது எங்கே?'' என்று கேட்டாள்.

**"எனக்கு ஒன்றும் தெரியாது. சாயங்காலமானால், தானே எல்லாம் வெளியாகிறது. ஏன் அவசரப்படுகிறீர்கள்?" என்றான் பொன்னன்.**

விரும்பினாயானால், அதை ஒருநாளும் நான் தடை செய்யேன். ஆனால், குழந்தாய்! நமது பல்லவ வம்சம் நீதி நெறி தவறாது என்று புகழ்பெற்றது. பல்லவ சாம்ராஜ்யத்தில் ராஜகுலத்தின ருக்கும் ஒரு நீதிதான்; ஏழைக் குடியான வனுக்கும் ஒரு நீதிதான். ஆகையால், சோழ ராஜகுமாரன் விஷயத்தில் ராஜ்ய நீதிக்கி ணங்க விசாரணை நடைபெறும். குற்றத் துக்குத் தகுந்த தண்டனை கிடைக்கும். அதற்குப் பிறகும், நீ அந்த ராஜகுமாரனை மணக்க விரும்பினால், நான் குறுக்கே நிற்க மாட்டேன்."

இதைக் கேட்ட குந்தவி, "அப்பா! தேசப் பிரஷ்டமானவர்கள் திரும்பி வந் தால் தண்டனை என்ன?" என்றாள்.

"சாதாரணமாக, மரண தண்டனைதான். ஆனால், சோழ ராஜகுமாரன் விஷயத்தில் யோசிக்க வேண்டிய அம்சங்கள் இருக்கின் றன."

"என்ன அப்பா?"

"நீதான் அடிக்கடி சொல்வாயே, அந்த ராஜகுமாரனுடைய காரியங்களுக்கெல்லாம் அவன் பொறுப்பாளியல்ல. போலிச் சிவனடியாருடைய போதனைதான் காரணம் என்று. அது உண்மைதான் என்று தோன்றுகிறது. அந்தச் சிவனடியாரும் இப்போது அகப்பட்டிருக்கிறார். அவரை யும் தீர விசாரித்து உண்மையறிய வேண்டும்."

அப்போது குந்தவி, மனத்துக்குள், 'ஆமாம், அந்தப் போலிச் சாமியாரால்தான் எல்லா விபத்துகளும் வருகின்றன. அவர் அநாவசியமாக நேற்றிரவு ஒரு ஆபத்தில் சிக்கிக்கொண்டிராவிட்டால், இத்தனை நேரம் அந்த வீர ராஜகுமாரர் கப்பலில் ஏறி இருப் பாரல்லவா?' என்று எண்ணமிட்டாள்.

"அதோடு இன்னும் ஒரு விஷயமும் யோசிக்க வேண்டியிருக்கிறது. செண்பகத் தீவின் இரத்தின வியாபாரிக்குக் குதிரை கொடுத்து, சோழ நாட்டுக்கு அனுப்பி வைத்தது யார்? ஞாபகம் இருக்கிறதா, குழந்தாய்?"

"அப்பா!" என்று வியப்புடன் ஆனந் தமும் கலந்த குரலில் குந்தவி கூச்சலிட் டாள். ஒற்றர் தலைவன் வேஷத்திலிருந்த சக்கரவர்த்தி குதிரை கொடுத்து அனுப்பித் தானே விக்கிரமன் சோழ நாட்டுக்குப் போனானென்பது அவளுக்கு நினைவு வந்தது.

"அப்படியானால், எப்படி தண்டனை ஏற்படும் அப்பா?" என்றாள்.

"எல்லாம், விசாரிக்கலாம் குழந்தாய்! விசாரித்து எது நியாயமோ, அப்படிச் செய்யலாம். பல்லவ ராஜ்யத்தில் நீதி தவறி எதுவுமே நடக்காது" என்றார் சக்கரவர்த்தி.

## 39. சிரசாக்கினை

"ஆகா இது உறையூர்தானா?" என்று பார்த்தவர்கள் ஆச்சரியப்படும் விதமாகச் சோழ நாட்டின் தலைநகரம் அன்று அலங் கரிக்கப்பட்டு விளங்கிற்று. பார்த்திப மகா ராஜா போர்க்களத்துக்குப் புறப்பட்டபோது அவருடன் புடை பெயர்ந்து சென்ற லக்ஷ்மி தேவி, மீண்டும் இன்றுதான் உறையூருக்குத் திரும்பி வந்திருக்கிறாள் என்று சொல்லும் படியிருந்தது. உறையூர் வாசிகளிடையே வெகு காலத்துக்குப் பிறகு, இன்று கலகலப்பும் உற்சாகமும் காணப் பட்டன.

வெளியூர்களிலிருந்து ஜனங்கள் வண்டிகளிலும், பலவித வாகனங்களிலும் கால்நடையாகவும் வந்து கொண்டிருந்தார்கள். வீதிகளில் ஆங்காங்கு ஜனங்கள் கூட்டமாய் நின்று கிளர்ச்சியுடன் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அன்று காஞ்சி நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தி உறையூரில் பொதுஜன சபை கூட்டுகிறார் என்றும், இதற்காகச் சோழ நாட்டின் பட்டினங்களிலும் கிராமங்களிலும் உள்ள பிரமுகர்களையெல்லாம் அழைத்திருக்கிறார் என்றும் பிரஸ்தாபமாயிருந்தது. அன்று நடக்கப் போகும் சபையில் பல அதிசயங்கள் வெளியாகுமென்றும் பல விசேஷ சம்பவங்கள் நிகழுமென்றும் ஜனங்கள் எதிர்பார்த்தார்கள். அருள்மொழி தேவியும், இளவரசர், விக்கிரமரும் உறையூருக்குத் திரும்பி வந்திருக்கிறார்களென்றும் செய்தி பரவியிருந்தது. இன்னும் இளவரசர் இரத்தின வியாபாரி வேஷத்தில் வசந்த மாளிகையில் வந்திருந்தாரென்றும், குந்தவி தேவிக்கும் அவருக்கும் காதல் உண்டாகிக் கல்யாணம் நடக்கப்போகிறதென்றும் இதனால் உறையூரும் காஞ்சியும் நிரந்தர உறவு கொள்ளப் போகிறதென்றும் சிலர் சொன்னார்கள். வேறு சிலர் இதை மறுத்து, "தேசப்பிரஷ்டத் தண்டனைக்குள்ளான இளவரசரைச் சக்கரவர்த்தி விசாரணை செய்து பொதுஜன அபிப்பிராயத்தையொட்டித் தீர்ப்பு கூறப் போகிறார்" என்றார்கள். நான்கு நாட்களுக்கு முன்னால், அமாவாசை இரவில், கொல்லி மலைச் சாரலில் நடந்த சம்பவங்களைப் பற்றியும், மாரப்ப பூபதியின் மரணத்தைப் பற்றியும் ஜனங்கள் கூட்டியும் குறைத்தும் பலவாறாகப் பேசிக்கொண்டார்கள்.

பொன்னனும் வள்ளியும் அன்று உறையூர் வீதிகளின் வழியாக வந்தபோது ஆங்காங்கே ஜனங்கள் அவர்களை நிறுத்தி, "பொன்னா! இன்று என்ன நடக்கப் போகிறது?" என்று விசாரித்தார்கள். பொன்னனோ, தலையை ஒரே அசைப்பாக அசைத்து, "எனக்கு ஒன்றும் தெரியாது. சாயங்காலமானால், தானே எல்லாம் வெளியாகிறது. ஏன் அவசரப்படுகிறீர்கள்?" என்றான். வள்ளியை அழைத்துக் கேட்ட பெண் பிள்ளைகளிடம் வள்ளியும் அதே மாதிரிதான் மறுமொழி சொன்னாள். பொன்னனுக்கும் வள்ளிக்கும் அன்று இருந்த கிராக்கிக்கும், அவர்களுக்கு அன்று ஏற்பட்டிருந்த பெருமைக்கும் அளவேயில்லை.



"சீன தேசத்திலிருந்து வந்திருக்கும் உலக யாத்திரிகர் இவர்தான்!"

**தே**வலோகத்தில் தேவேந்திரனுடைய சபை கூடியிருப்பதைப் பார்த்தவர்கள் யாரும் திரும்பி வந்து நமக்கு அந்தச் சபையைப் பற்றிக் கூறியது கிடையாது. ஆனால், அன்று உறையூரில் கூடிய மாமல்ல நரசிம்ம சக்கரவர்த்தியின் சபையைப் பார்த்தவர்கள், 'தேவேந்திரனுடைய சபை கிட்டத்தட்ட இந்த மாதிரிதான் இருக்க வேண்டும்!' என்று ஏகமனதாக முடிவு கட்டினார்கள். அவ்வளவு விமரிசையாக அலங்கரிக்கப்பட்டிருந்த சபா மண்டபத்தில் சபை கூடிற்று. குறிப்பிட்ட நேரத்துக்குள் 'தேவேந்திரனை'த் தவிர மற்றவர்கள் எல்லோரும் வந்து தத்தம் ஆசனங்களில் அமர்ந்துவிட்டார்கள். சக்கரவர்த்தியின் சிம்மாசனத்துக்கு ஒரு பக்கத்தில், வசிஷ்டரையும் வாமதேவரையும் போல், சிவனடியாரும் சிறுத்தொண்டரும் வீற்றிருந்தார்கள். சிம்மாசனத்தின் மற்றொரு பக்கத்தில் சக்கரவர்த்தியின் குமாரன் மகேந்திரனும், குமாரி குந்தவியும் அமர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு





ாற்போல் அருள்மொழி தேவியும் சிறுத்தொண்
ர்மபத்தினி திருவெண்காட்டு நங்கையும் காணப்
ர். அவர்களுக்கு மத்தியில், சிறுத்தொண்டரின்
பப் புதல்வன் சீராளதேவன் உட்கார்ந்து,
த்தினால் விரிந்த கண்களினால்
முழும் சுற்றிச் சுற்றிப் பார்த்துக்
ாடிருந்தான். இவர்களுக்குப்
ால் பொன்னனும் வள்ளியும்
ஒடுக்கத்துடன் நின்று
ாடிருந்தார்கள். சக்கரவர்த்தி
ம்மாசனத்துக்கு நேர் எதிரே,
தூரத்தில் பல்லவ சேனா
இன்னும் சில பல்லவ வீரர்
ும் சூழ்ந்திருக்க, விக்கிரமன்
கம்பீரமாகத் தலை
நிமிர்ந்து உட்கார்ந்தி
ருந்தான். குந்தவி இருந்த

"ஏன் சக்கரவர்த்தி இன்னும் வரவில்லை?" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளும் சப்தம் எழுந்தது.



பக்கம் பார்க்கக் கூடாதென்று அவன் எவ்வளவோ பிடிவாதமாக மனத்தை உறுதிப்படுத்தி வைத்துக்கொண்டிருந்தானென்றாலும், சில சமயம் அவனை அறியாமலே அவனுடைய கண்கள் அந்தப் பக்கம் நோக்கின. அதேசமயத்தில் குந்தவியும் தன்னை மீறிய ஆவலினால் விக்கிரமனைப் பார்க்கவும், இருவரும் திடுக்கிட்டுத் தங்களுடைய மனஉறுதி குலைந்ததற்காக வெட்கப்பட்டுத் தலைகுனிய வேண்டியதாயிருந்தது.

இன்னும் அந்த மகத்தான சபையில், மந்திரிகளும் படைத் தலைவர்களும் தனாதிகாரிகளும் பண்டிதர்களும் கலைஞர்களும் கவிராயர்களும் பிரபல வர்த்தகர்களும் கிராமங்களிலிருந்து வந்த நாட்டாண்மைக்காரர்களும் அவரவர்களுக்கு ஏற்பட்ட இடத்தில் அமர்ந்திருந்தார்கள். இவர்கள் எல்லோரையும் காட்டிலும் அந்தச் சபையில் அதிகமாக அனைவருடைய கவனத்தையும் கவர்ந்த ஒருவர், சக்கரவர்த்தி குமாரன் மகேந்திரனுக்குப் பின்னால் அமர்ந்திருந்தார். அவருடைய உருவமும் உடையும் அவர் தமிழ்நாட்டைச் சேர்ந்தவரல்லர் என்பதைத் தெளிவாக எடுத்துக் கூறின. சபையினர் அவரைச் சுட்டிக் காட்டி தங்களுக்குள்ளே, "சீன தேசத்திலிருந்து வந்திருக்கும் உலக யாத்திரிகர் இவர்தான்!" என்று பேசிக்கொண்டார்கள். யுவான் சுவாங் என்னும் அவருடைய பெயரைப் பலரும் பலவிதமாக உச்சரித்து நகையாடினார்கள்.

இந்தச் சீன யாத்திரிகரைத் தவிர இன்னும் சில அயல்நாட்டாரும் அந்த மகாசபையில் ஒரு பக்கத்தில் காணப்பட்டார்கள். அவர்கள் நடை உடையினால் அயல்நாட்டாராகத் தோன்றினாலும், அவர்கள் பேசுகிற பாஷை தமிழாகத்தான் தெரிந்தது. சற்றே அவர்களை உற்றுப் பார்த்தோமானால், ஏற்கெனவே பார்த்த முகங்கள் என்பது நினைவு வரும். ஆம்; செண்பகத் தீவிலிருந்து வந்த கப்பலில் இரத்தின வியாபாரி தேவசேனனுடன் வந்தவர்கள்தான் இவர்கள். அச்சபையில் நடக்கவிருந்த விசாரணையின் முடிவாகத் தங்கள் மகாராஜாவுக்கு என்ன கதி நேரப் போகிறதோ என்று தெரிந்துகொள்ளும் ஆவல் அவர்களுக்கிருந்தது இயற்கையேயல்லவா?

சபை முழுவதிலும் ஆங்காங்கு பணியாட்களும் பணிப்பெண்களும் நின்று வெண் சாமரங்களினால் விசிறியும் சந்தனம், தாம்பூலம் முதலியவை வழங்கியும் சபையினருக்கு வேண்டிய உபசாரங்கள் செய்துகொண்டிருந்தார்கள்.

குறிப்பிட்ட நேரம் ஆகியும் சக்கரவர்த்தி வராதிருக்கவே சபையில், "ஏன் சக்கரவர்த்தி இன்னும் வரவில்லை?" என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளும் சப்தம் எழுந்

தது. இவ்விதம் பல குரல்கள் சேர்ந்து பேரிரைச்சலாகிவிடுமோ என்று தோன்றிய சமயத்தில் சிறுத்தொண்டர் எழுந்திருந்து, கையமர்த்தி, ''சபையோர்களே! சக்கரவர்த்தி சபைக்கு வருவதற்கு இன்னும் சிறிது நேரம் ஆகும் என்று செய்தி வந்திருக்கிறது. அதுவரையில், இந்தச் சபை கூடியதன் நோக்கம் இன்னதென்பதை உங்களுக்கு எடுத்துரைக்கும்படி எனக்குச் சக்கரவர்த்தி கட்டளையிட்டிருக்கிறார்!'' என்று இடி முழக்கம் போன்ற குரலில் கூறியதும், சபையில் நிசப்தம் உண்டாயிற்று. எல்லோரும் பய பக்தியுடன் சிறுத்தொண்டருடைய முகத்தையே பார்க்கலானார்கள்.

சிறுத்தொண்டர் மேலும் கூறினார்.

''வீர சொர்க்கமடைந்த என் அருமைத் தோழரான பார்த்திப சோழ மகாராஜாவின் புதல்வர் விக்கிரம சோழர், இன்று உங்கள் முன்னால் குற்ற விசாரணைக்கு நிறுத்தப்பட்டிருக்கிறார். சக்கரவர்த்தியின் தேசப் பிரஷ்டத் தண்டனையை மீறி, அவர் இந் நாட்டுக்குள் பிரவேசித்துக் கையும் மெய்யுமாய்க் கண்டுபிடிக்கவும் பட்டார். அவர் இவ்விதம் சக்கரவர்த்தியின் ஆக்ஞையை மீறி வந்ததன் காரண காரியங்களை விசாரணை செய்து, உங்கள் எல்லோருடைய அபிப்பிராயத்தையும் கேட்டு, சர்வ சம்மதமான நியாயத் தீர்ப்பு கூற வேண்டுமென்பது சக்கரவர்த்தியின் விருப்பம். இதற்காகத்தான் இந்தச் சபை கூடியிருக்கிறது. நீங்கள் அபிப்பிராயம் கூறுவதற்கு முன்னால் எல்லா விவரங்களையும் தெரிந்துகொள்ள வேண்டும். விக்கிரம சோழர், சக்கரவர்த்தியின் கட்டளையை மீறியது குற்றமானாலும், அதற்கு அவர் மட்டும் பொறுப்பாளியல்ல. இதோ என் பக்கத்தில் வீற்றிருக்கும் என் தோழர் அதற்குப் பெரும்பாலும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள முன்வந்திருக்கிறார்!'' என்று சிறுத்தொண்டர் கூறியதும், சபையில் எல்லோருடைய கவனமும் சிவனடியார் மேல் திரும்பியது. அவருடைய முகத்தில் குடிகொண்டிருந்த தேஜஸைப் பார்த்து அனைவரும் பிரமித்தார்கள். 'இவர் யார் இந்தப் பெரியவர்? அப்பர் பெருமானோ இறைவன் பதமடைந்துவிட்டார். சம்பந்த சுவாமியோ இளம் பிராயத்தவர். மஹான் சிறுத்தொண்டரோ இங்கேயே இருக்கிறார். வேறு யாராக இருக்கும்? விக்கிரம சோழர் விஷயத்தில் இவர் பொறுப்பு ஏற்றுக் கொள்ளக் காரணம் என்ன?' என்று எண்ணமிட்டனர்.

பிறகு, சிறுத்தொண்டர், பத்து வருஷங்களுக்கு முன் பார்த்திப மகாராஜா போர்க்கோலம் பூண்டு உறையூரிலிருந்து கிளம்பியதையும் வெண்ணாற்றங்கரையில் நடந்த பயங்கர யுத்தத்தையும் சபையோருக்கு ஞாபகப்படுத்தினார். பார்த்திப மகாராஜாவுடன் கிளம்பிய பத்தாயிரம் பேரில் ஒருவர்கூடத் திரும்பாமல் போர்க்களத்திலேயே மடிந்ததைச் சொன்னபோது, சபையோர் புளகாங்கிதம் அடைந்தனர். அந்தப் புரட்டாசி பௌர்ணமியன்றிரவு, இந்தச் சிவனடியார் போர்க்களத்தில் வீர மரணமடைந்த தீர மன்னரின் முகத்தைப் பார்க்கவேண்டுமென்று அவருடைய உடலைத் தேடியலைந்ததை எடுத்துக் கூறினார். கடைசியில் இவர் தம் முயற்சியில்

**''என் மகனை வீர சுதந்திரப் புருஷனாக வளர்க்க வேண்டும்'' என்று பார்த்திப மஹாராஜா வரம் கேட்டதையும், சிவனடியார் அவ்விதமே வரம் கொடுத்ததையும் சிறுத்தொண்டர் எடுத்துச் சொன்னார்.**

**"சபையோர்களே! நீங்கள் கலைந்து போவதற்கு முன்னால் இன்னும் ஒரே ஒரு காரியம் பாக்கியிருக்கிறது" என்றார் சிறுத்தொண்டர்.**

வெற்றியடைந்ததையும் பார்த்திப மகாராஜாவின் உடலில் இன்னும் உயிர் இருந்ததையும், மகாராஜா சிவனடியாரிடம், 'என் மகனை வீர சுதந்திரப் புருஷனாக வளர்க்க வேண்டும்' என்று வரம் கேட்டதையும், சிவனடியார் அவ்விதமே வரம் கொடுத்ததையும் எடுத்துச் சொன்னபோது, அந்தப் பெரிய சபையின் நானா பக்கங்களிலும் 'ஆஹா'காரம் உண்டானதுடன், அநேகருடைய கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடிற்று.

பின்னர், சிவனடியார் உறையூருக்கு வந்து அருள்மொழி தேவியைப் பார்த்துத் தேற்றியது முதல், விக்கிரமன் சுதந்திரக் கொடியை நாட்ட முயன்றது, தேசப் பிரஷ்டத் தண்டனைக்குள்ளானது, செண்பகத் தீவின் அரசனானது, தாயாரையும் தாய்நாட்டையும் பார்க்கவேண்டுமென்ற ஆசையினால் திரும்பி வந்தது, வழியில் அவனுக்கு ஏற்பட்ட இடையூறுகள் எல்லாவற்றையும் சிறுத்தொண்டர் விவரமாகக் கூறினார். இதற்கிடையில் நீலகேசி, 'மகா கபால பைரவர்' என்ற வேஷத்தில் செய்த சூழ்ச்சிகளையும், ராணி அருள்மொழி தேவியை அவன் கொண்டுபோய் மலைக் குகையில் வைத்திருந்ததையும், சிவனடியாரின் தளராத முயற்சியினால் அவனுடைய சூழ்ச்சிகள் வெளிப்பட்டதையும், சென்ற அமாவாசை இரவில் நடந்த சம்பவங்களையும் விக்கிரமன் தன் உயிரைப் பொருட்படுத்தாமல், சிவனடியாரைக் காப்பாற்ற முன் வந்ததையும் விவரித்தார். இவ்வளவையும் சொல்லிவிட்டுக் கடைசியாக, "சபையோர்களே, உங்களையெல்லாம் ஒன்று கேட்க விரும்புகிறேன். என் தோழர் சிவனடியார் போர்க்களத்தில் பார்த்திப மகாராஜாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டதாக - நீங்கள் அபிப்பிராயப்படுகிறீர்களா? பார்த்திப மகாராஜாவின் குமாரர் விக்கிரமர் வீர சுதந்திரப் புருஷராக வளர்க்கப்பட்டிருக்கிறாரா?" என்று கேட்டார்.

அப்போது சபையில் ஏகமனதாக, "ஆம், ஆம்" என்ற மகத்தான பெருங் கோஷம் எழுந்து அந்த விசாலமான மண்டபம் முழுவதும்

*"புலவரே, நான் சொன்னபடி சத்தியம் பண்ணிக் கொடுத்தால்தான் உள்ளே விடுவேன்!"*

*"சரி! மரியாதை நிமித்தம்தான் அரசரைச் சந்திக்க விரும்புகிறேன்... கவிதை எதுவும் பாட மாட்டேன்... இது சத்தியம்!"*

- உ.ராஜாஜி



வியாபித்து, வெளியிலும் சென்று முழங்கியது.

கோஷம் அடங்கியதும், சிறுத்தொண்டர் கையமர்த்தி, "இன்னும் ஒரு முக்கிய விஷயம் உங்களுக்குச் சொல்ல மறந்துவிட்டேன். போர்க்களத்தில் பார்த்திப மகாராஜாவுக்கு இந்த மகா புருஷர் வாக்குறுதி கொடுத்த பிறகு மகாராஜா இவரைப் பார்த்து, 'சுவாமி! தாங்கள் யார்?' என்று கேட்டார். அப்போது இந்த வேஷதாரி, தமது பொய் ஜடா மகுடத்தை எடுத்துவிட்டு உண்மை ரூபத்துடன் தோன்றினார். இவர் யார் என்பதைத் தெரிந்துகொண்ட பிறகு, பார்த்திப மகாராஜா தம் மனோரதம் நிறைவேறும் என்ற பூரண நம்பிக்கை பெற்று நிம்மதியாக வீர சொர்க்கம் அடைந்தார்!" என்று கூறிய போது சபையிலே ஏற்பட்ட பரபரப்பைச் சொல்லி முடியாது.

மீண்டும் சிறுத்தொண்டர், "இந்த வேஷதாரியின் உண்மை வடிவத்தைப் பார்க்க நீங்கள் எல்லோருமே ஆவலாயிருக்கிறீர்கள். இதோ பாருங்கள்!" என்று கூறி சிவனடியார் பக்கம் திரும்பி, ஒரு நொடியில் அவருடைய ஜடாமகுடத்தையும் தாடி மீசையையும் தமது இரண்டு கைகளினாலும் நீக்கிவிடவே, மாமல்ல நரசிம்ம சக்கரவர்த்தியின் தேஜோமயமான கம்பீர முகத்தை எல்லோரும் கண்டார்கள்.

அப்போது அச்சபையில் மகத்தான அல்லோலகல்லோலம் ஏற்பட்டது. குந்தவி தன் ஆசனத்திலிருந்து எழுந்து, "அப்பா!" என்று கதறிக்கொண்டே ஓடிவந்து, வேஷம் பாதி கலைந்து நின்ற சக்கரவர்த்தியின் தோள்களைக் கட்டிக்கொண்டாள். உணர்ச்சி மிகுதியினால் மூர்ச்சையாகி விழும் நிலைமையில் இருந்த அருள்மொழி தேவியை சிறுத்தொண்டரின் பத்தினி தாங்கிக்கொண்டு ஆசுவாசம் செய்தாள். விக்கிரமன் கண்ணிமைக்காமல், திறந்த வாய் மூடாமல் உருவம் மாறிய சிவனடியாரைப் பார்த்த வண்ணம் நின்றான். அந்தப் பரபரப்பில் இன்னது செய்கிறோமென்று தெரியாமல் பொன்னன், வள்ளியின் கையைப் பிடித்துக் குலுக்கினான்.

"தர்ம ராஜாதி ராஜ மாமல்ல நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தி வாழ்க" என்று ஒரு பெரிய கோஷம் எழுந்தது. "ஜய விஜயீ பவ!" என்று சபையினர் அனைவரும் ஒரே குரலில் முழங்கினார்கள். சிறிது நேரம் இத்தகைய கோஷங்கள் முழங்கிக் கொண்டிருந்த பிறகு பொன்னனுக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ, திடீரென்று உரத்த குரலில், "விக்கிரம சோழ மகாராஜா வாழ்க!" என்று கோஷித்தான். அதையும் சபையோர் அங்கீகரித்து, "ஜய விஜயீ பவ!" என்று முழங்கினார்கள்.

அந்தக் குழப்பமும் கிளர்ச்சியும் அடங்கியபோது இத்தனை நேரமும் சிவனடியார் அமர்ந்திருந்த இடத்தில் அவர் இல்லை என்பதைச் சபையோர் கண்டார்கள். சிறுத்தொண்டர், "சபையோர்களே! நீங்கள் கலைந்து போவதற்கு முன்னால் இன்னும் ஒரே ஒரு காரியம் பாக்கியிருக்கிறது. மாமல்ல சக்கரவர்த்தி தர்ம சிம்மாசனத்தில் அமர்ந்து விக்கிரம சோழரின் குற்றத்தைப் பற்றி முடிவான

"அம்மா! உனக்குச் சகல சௌபாக்கியங்களும் உண்டாகட்டும். நரசிம்ம சக்கரவர்த்தியின் திருமகள், பார்த்திப மகாராஜாவின் மருமகள்" என்றாள் அருள்மொழி தேவி.

"மன்னா, மகாராணியையே எதிர்த்துப் பேசிய இவனை என்ன செய்யலாம்?"
"எனது மெய்க்காவலனாக நியமித்து விடுங்கள்!"
- விஷ்ணுகுமார்



தீர்ப்பு கூறுவார்!'' என்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் நரசிம்ம சக்கரவர்த்தி தமக்குரிய ஆடை ஆபரணங்களைத் தரித்தவராய்க் கம்பீரமாக அச்சபைக்குள் பிரவேசித்தார். அவர் சபைக்குள் பிரவேசித்தபோதும், சபையில் நடுநாயகமாக இருந்த தர்ம சிம்மாசனத்தில் அமர்ந்த போதும், ''ஜெய விஜயீ பவ!'' என்னும் முழக்கம் வானளாவ எழுந்தது. சத்தம் அடங்கியதும், சக்கரவர்த்தி எழுந்து, ''விக்கிரம சோழரைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயம் இன்னதென்பதைத் தெரிந்து கொண்டேன். தேசப் பிரஷ்ட தண்டனைக்குள்ளானவர்கள் திரும்பி வந்தால், அதற்குத் தண்டனை சிரசாக்கினையாகும். எனவே, இதோ புராதனமான சோழ மன்னர்களின் மணிமகுடத்தை விக்கிரம சோழர் இனிமேல் தனியாகவே தலைமேல் தாங்க வேண்டுமென்னும் சிரசாக்கினையை விதிக்கிறேன்! இன்று முதல் சோழ நாடு சுதந்திர ராஜ்யமாகிவிட்டது. இதன் பாரம் முழுவதையும் விக்கிரம சோழரும் அவருடைய சந்ததிகளும்தான் இனிமேல் தாங்கியாக வேண்டும்!'' என்று கூறியபோது, சபையிலே உண்டான கோலாகல ஆரவாரத்தை வர்ணிப்பதற்கு, புராண இதிகாசங்களில் சொன்னதுபோல், ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷன்தான் வந்தாக வேண்டும்!

## 40. கனவு நிறைவேறியது

**ந**ல்ல சுபயோக சுப லக்கினத்தில் விக்கிரமன் சோழ நாட்டின் சுதந்திர அரசனாக முடிசூட்டப்பட்டான். அவ்விதமே சுப முகூர்த்தத்தில் விக்கிரமனுக்கும் குந்தவிக்கும் திருமணம் விமரிசையாக நடந்தேறியது. திருமணத்துக்குப் பிறகு விக்கிரமன் நரசிம்ம பல்லவரிடம் சென்று அவருடைய ஆசியைக் கோரியபோது, சக்கரவர்த்தி, ''குழந்தாய்! எக்காலத்திலும் 'பார்த்திப மகாராஜாவின் புதல்வன்' என்னும் பெருமைக்குப் பங்கமில்லாமல் நடந்துகொள்வாயாக. அதற்கு வேண்டிய மனோதிடத்தை பகவான் உனக்கு அருளட்டும்'' என்று ஆசீர்வதித்தார். அவ்விதமே குந்தவி, அருள்மொழி தேவியை நமஸ்கரித்தபோது, ''அம்மா! உனக்குச் சகல சௌபாக்கியங்களும் உண்டாகட்டும். 'நரசிம்ம சக்கரவர்த்தியின் திருமகள், பார்த்திப மகாராஜாவின் மருமகள்' என்னும் பெருமைக்கு உரியவளாக எப்போதும் நடந்துகொள்'' என்று ஆசி கூறினாள்.

விக்கிரமனும் குந்தவியும் உறையூர் சிங்காதனத்தில் வீற்றிருந்தபோது, சோழ வளநாடு எல்லாத் துறைகளிலும் செழித்தோங்கி

யது. மாதம் மும்மாரி பொழிந்து நிலங்கள் மூன்று போகம் விளைந்தன. கிராமந்தோறும் சிவாலயங்களும் விஷ்ணு ஆலயங்களும் நிர்மாணிக்கப்பட்டன. சிற்பம், சித்திரம் முதலிய கலைகள் சிறந்தோங்கின. திருமகளும் கலைமகளும் காவேரி நதிக் கரையில் கைகோத்துக் குலாவினார்கள்.

ஆனாலும், பார்த்திப மகாராஜாவின் கனவு விக்கிரமனுடைய காலத்தில் பூரணமாக நிறைவேறவில்லை. சூரியனுக்குப் பக்கத்தில் மற்றக் கிரகங்களெல்லாம் ஒளி மங்கிவிடுவதுபோல், காஞ்சி நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியின் மகிமையானது, விக்கிரமனுடைய புகழ் ஓங்குவதற்குப் பெரிய தடையாயிருந்தது. பார்த்திப மகாராஜாவின் வீர மரணமும், விக்கிரமனுடைய வீரச் செயல்களும்கூட மாமல்லரின் புகழ் மேலும் வளர்வதற்கே காரணமாயின.

நரசிம்மவர்மருக்குப் பின்னரும் வெகு காலம் பல்லவர் பெருமை குன்றவில்லை. சோழநாடு ஒரு குறுகிய எல்லைக்குள் கட்டுப்பட்டுத்தான் கிடந்தது. ஆனால், விக்கிரமனும் அவனுடைய சந்ததியர்களும் பார்த்திப மகாராஜாவின் கனவை மட்டும் மறக்கவில்லை. வழிவழியாக அவரவர்களுடைய புதல்வர்களுக்கு பார்த்திப மகாராஜாவின் வீர மரணத்தைப் பற்றிச் சொல்லி, உறையூர் சித்திர மண்டபத்தில் தீட்டியிருந்த பார்த்திப மன்னரின் கனவுச் சித்திரங்களைக் காண்பித்து வந்தார்கள்.

சுமார் மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின்னர், சோழ நாட்டின் வீரசிம்மாசனம் ஏறிய இராஜராஜ சோழன், அவனுடைய புதல்வனான இராஜேந்திர சோழன் - இவர்களுடைய காலத்திலேதான் பல்லவர் பெருமை குன்றிச் சோழ நாடு மகோன்னதமடையத் தொடங்கியது. சோழ நாட்டு வீரர்கள் வடக்கே கங்கை வரையிலும், தெற்கே இலங்கை வரையிலும், கிழக்கே கடல்களுக்கு அப்பாலுள்ள கடாரம் வரையிலும் சென்று, வீரப்போர் புரிந்து புலிக் கொடியை வானளாவப் பறக்கவிட்டார்கள். புலிக் கொடி தாங்கிய கப்பல்களில் சோழ நாட்டு வீரர்கள் கடல்களில் நெடுந்தூரம் பிரயாணம் செய்து சாவகம், புஷ்பகம் முதலிய தீவுகளைக் கைப்பற்றிச் சோழர்களின் ஆதிக்கத்துக்கு உட்படுத்தினார்கள். சோழவள நாடெங்கும் அற்புதமான கோயில்களும் கோபுரங்களும், சோழ மன்னர்களின் வீரப் புகழேபோல் வானளாவி எழுந்து, அக்காலத்திய சோழ சாம்ராஜ்யத்தின் மகோன்னதத்துக்கு அழியாத ஞாபகச் சின்னங்களாக இன்றைக்கும் விளங்குகின்றன. இவ்வாறு, பார்த்திப சோழன் கண்ட கனவு, அவன் வீர சொர்க்கம் அடைந்து முந்நூறு வருஷங்களுக்குப் பிறகு பரிபூரணமாக நிறைவேறியது.

**(முற்றும்)**



"என்ன தலைவரே? உங்க மனைவிக்கும் கட்சில பதவி குடுத்திருக்கீங்க?"

"அவ அடிக்கடி கட்சி விஷயமா வெளில போனாதான் நான் வீட்ல நிம்மதியா இருக்க முடியும்!"

- அம்பை தேவா

## டிஜிட்டல் கேன்டீன்-5

# தலையில் ராடார்?

கடுகு சிறுத்தால் ஏன் காரம் போகாது? தொழில்நுட்பம் கைகொடுத்தால், சிறுத்த கடுகு இனிக்கவும் கூடும். நானோ டெக்னாலஜி செய்யும் ஜித்து வேலை இது.

ஒரு பொருளின் வடிவத்தை, அதன் சகல குணாதிசயங்களோடும், செயல்பாடுகளோடும் மிகமிகச் சிறியதாகக் குறுக்க முடிந்தால், சில அற்புத விளைவுகள் ஏற்படக்கூடும் என்கிறது நானோ டெக்னாலஜி. சிறியதாகக் குறுக்குவது என்றால் என்ன அளவு? ஒரு நானோ மீட்டர். அதாவது, ஒரு மீட்டர் நீளமான பொருளை நூறு கோடி துண்டுகளாகக் கூறு போட்டால், அதில் ஒரு துண்டின் அளவு. எளியாகப் புரிய, கதகளி வேஷக்காரன் மாதிரி ஷேவிங் கிரீம் அலங்காரத்தோடு கண்ணாடி முன் நின்று ரேசரை முகத்தை நோக்கி உயர்த்த ஒரு வினாடி நேரம் பிடிக்குமா? அதற்குள் முகத்தில் கூடுதலாக வளர்ந்த முடியின் நீளம் ஒரு நானோ மீட்டர்.

நானோ மீட்டர் அளவில் ஒரு பொருளைக் குறுக்கும்போது, அதன் இயல்பான தன்மைகளே மாறிப்போக வாய்ப்பு உண்டு. செம்பு போன்ற உலோகங்கள் கண்ணாடி போல் ஒளியைக் கடத்த ஆரம்பித்துவிடும். அலுமினியம் கந்தகம் போல பற்றி எரியத் தொடங்கும். தங்கம் சூடு படுத்தாமலேயே திரவமாக மாறும். எந்தச் சேதாரமும் இல்லாமல் தகவல் சேகரித்து வைக்க இப்படித் துகளான வைரம் பயன்படும். வைரம் பதித்த கம்ப்யூட்டர், இன்றைய சூப்பர் கம்ப்யூட்டரைவிட பல மடங்கு அதிகம் திறனோடு செயல்படலாம். அதுவும் நானோ கம்ப்யூட்டர்தான்.

தங்க மூலாம் பூசிய நானோ துணுக்கு



களை நோயாளியின் உடலில் செலுத்தினால், அவை கேன்சர் திசுக்களை ஆரத் தழுவிக் கலக்கும். அப்புறம் இந்தத் திசுக்களைச் சுலபமாக இனம் கண்டுவிடலாம். லேசர் கதிர் மூலம் இவற்றை அழிக்கும் போது புற்றுநோயும் ஒழிந்து போகும். மருத்துவம் சந்திக்க இருக்கும் திருப்பு முனை இது.

அதிசீக்கிரம் இல்லாவிட்டாலும், ரொம்பவே தாமதமாகாமல் வரவிருக்கும் இன்னொரு சமாசாரம் நானோ ரோபோ. இத்துணூண்டு ரோபோக்களை, ஊசி

மூலம் உடம்பில் செலுத்தினால் ரத்தக் குழாய் வழியாக அவை இதயம், மூளை, சிறு நீரகம் என்று தேவையான இலக்கை அடைந்துவிடும். பிறகு, வெளியிலிருந்து டாக்டர் இயக்க, ரோபோ உடம்புக்குள் இருந்தபடியே அறுவை சிகிச்சையை முடித்து, 'ஆப்பரேஷன் சக்சஸ்' என்று அறிவித்து விடும். உடலில் பழுதடைந்த திசுக்களை ஊடுருவி பழுது பார்க்கவும், அப்படித் திருத்தப்பட்ட நலமான திசுக்கள் பெருகவும் இந்த நானோ யந்திரங்கள் வழி செய்யும்.

**நா**னோவில் அபாயமும் உண்டு. இருட்டிலும் தெளிவாகப் பார்க்கும் கண், மின்னலைகளை ஒலியலைகளாக மாற்ற முடிந்த காதுகள் நானோ தொழில்நுட்பம் மூலம் சாத்தியமாகலாம். எஃப்.எம். ரேடியோ இல்லாமலேயே பண்பலையில் ஒலிபரப்பாகும், 'தசாவதாரம்' பாட்டு கேட்கலாம். ராணுவத்தில் இதன் பயன் அதிகம். தலையில் ராடார் காது முளைத்து, முதுகில் எக்ஸ்ட்ரா கண் உள்ள வீரர்கள் குண்டு துளைக்க முடியாத மார்போடு, போர் முனையில் பாய்ந்து வருவதை நினைத்துப் பாருங்கள். கொஞ்சம் பயமாக இல்லையா?



**இரா.முருகன்**

எந்த வீட்டிலும் எட்டிப் பாருங்கள். இப்படி ஒரு காட்சி தெரியும்.

நிறைய காய்கறிகளை அக்கறையோடு சமைத்து வைத்திருப்பார் அம்மா. ஆனால், அந்த வீட்டு இளவரசரோ இளவரசியோ அதைக் கையால்கூடத் தொட மாட்டார். மாற்றாக, 'தனக்கு ஆகி வந்த' ஒரு பெரிய டப்பாவைத் திறப்பார். அதற்குள் கடையிலிருந்து வாங்கி ஸ்டாக் செய்யப்பட்ட சிப்ஸ் பாக்கெட்டுகள் பல இருக்கும். அவற்றில் ஒன்றைத் திறந்து தட்டில் கொட்டிக்கொள்வார். ஆக, அன்றைய சாதத்துக்கு(ம்) தொட்டுக் கொள்ளும் ஐட்டம் சிப்ஸ்தான்.

தொட்டுக்கொள்வது இருக்கட்டும், பல சமயம் இன்றைய இளைஞர்களின் முக்கிய உணவேகூட சிப்ஸ்தானே! சந்தேகம் இருந்தால் கல்லூரி கேண்டீன்களுக் குச் சென்று பாருங்கள். மதிய உணவாக சிப்ஸ் பாக்கெட்டை மட்டுமே வாங்கி, உள்ளே தள்ளிக்கொண்டிருக்கும் பலரைப் பார்க்கலாம்.

## நியூ டேஸ்ட்டி ட்ரீட் - 5
## கூலா சாப்பிடுங்க!



திரையரங்குகளில் இடைவேளை களில், டீ.வி. பார்க்கும்போது என்று பல சமயங்களில் சிப்ஸ் பாக்கெட்கள் மள மளவென காலி செய்யப்படுகின்றன.

அதுவும் ஃப்ரெஞ்ச் ஃப்ரை என்று ஒருவகை வெகு பிரபலம். இதில் மாவுச் சத்துடன்கூட க்ளூட்டின் (glutin) என்கிற புரதத்தைப் போட்டு ஊற வைத்து வேக வைக்கிறார்கள். பிறகு சுவைக்காகவும் மொறுமொறுப்புக்காகவும் அதில் வேறு சில சங்கதிகளையும் சேர்க்கிறார்கள். ஃப்ரெஞ்ச் ஃப்ரை சாப்பிட்டவர்களில் பாதிப் பேருக்கு அஜீரணம், பேதி, வயிற்றை ஏதோ செய்வது போன்ற உணர்வு ஆகியவை உண்டாவது காரண்டீ!

நட்சத்திர ஹோட்டல்களில் கலப் படம் இல்லாத எண்ணெயைப் பயன் படுத்தக்கூடும். அந்த எண்ணெயை ஒருமுறை மட்டுமே பயன்படுத்துகிறார் கள் என்றும் வைத்துக்கொள்வோம். ஆனால், அப்படி ஒருமுறை பயன் படுத்திய எண்ணெயை பல நட்சத்திர ஹோட்டல்கள் என்ன செய்கின்றன தெரியுமா? சிறு கடைக்காரர்களுக்குக் குறைந்த விலையில் விற்கின்றன!

ஒருமுறை பயன்படுத்தப்பட்டு மீண்டும் சுட வைக்கப்படும்போது எண் ணெயில் உள்ள கொழுப்புச் சங்கிலிப் படலங்கள் (fatty chains) மாறிவிடு கின்றன. இதனால் எண்ணெயில் உள்ள கொழுப்பு ஜீரணிக்கப்படாமல் அப் படியே இரைப்பையில் சேமிக்கப்படு கிறது. இதன் காரணமாகத்தான் வயிற்றுப் போக்கு.

சிப்ஸ் செய்யக்கூடிய இன்னொரு விபரீதத்தையும் பார்க்கலாமா?

சாக்லேட்டைவிட அதிக நேரம் வாயில் இருப்பது சிப்ஸ்தான். சிப்ஸை வாயில் போட்டதும் அது முதலில் இரண் டாக உடைந்து, பிறகு சிறுசிறு துண்டு களாகி அதற்குப்பிறகே மெதுவாகத் தொண்டைக்குள் போகிறது. அப்படி





# பற்களின் பகைவன்!

கடைசித் துண்டும் எச்சிலில் கரைந்து உள்ளே செல்ல பல நிமிடங்களாகலாம். அந்த நேரத்தில் அவற்றில் சில துகள்கள் பற்களின் இடுக்குகளில் சிக்கிக்கொள்ள நிறைய வாய்ப்பு உண்டு. ஆக, வாய்ப் பகுதியில் உள்ள பாக்டீரியாவுக்கு, பல்கிப் பெருக களம் அமைக்கின்றன இந்தத் துகள்கள்! இவற்றின் கைவண்ணத் தால் பற்களில் உள்ள எனாமல் சீக்கிரமே கெடுகிறது.

எனவே சிப்ஸை எப்போதாவது அளவுடன் கொறிப்பதோடு நிறுத்திக் கொள்வது புத்திசாலித்தனம். அடிக்கடி நிறைய சாப்பிடுவது புத்திசாலித்தனத் துக்கு எதிர்ப்பதமான 'தனம்.'

**ரைஸ் பால்**

**தேவையான பொருட்கள்:**

சாதம் - 1 கப்
காரட் - 1
பீன்ஸ் - 200 கிராம்
உருளை - 2
கோஸ் - 100 கிராம்
ரவை - 3 டீஸ்பூன்
உப்பு - ருசிக்கேற்ப
மிளகு - 2 டீஸ்பூன்
எண்ணெய் - 5 டீஸ்பூன்

**செய்முறை:** கேரட், பீன்ஸ், முட்டை கோஸ், உருளைக்கிழங்கு ஆகியவற்றை நன்றாக நறுக்கிக்கொள்ளவும். அவற்றை தண்ணீரில் வேகவைக்கவும். உருளைக் கிழங்கை நன்றாக மசித்து, நறுக்கி வைத்த காய்கறிகளோடு சேர்க்கவும். அதனுடன் மிளகு, உப்பு, ரவை, வடித்த சோறு சேர்த் துப் பிசையவும். இந்தக் கலவையை லாடு போன்று உருட்டி எண்ணெயைச் சூடாக்கி, அதில் போட்டு பொன் நிறம் வரும் வரை வறுத்து எடுக்கவும். அழகாக அவற்றை ஒரு தட்டில் வைத்து அலங் கரிக்கவும். சிப்ஸைக் காட்டிலும் ஆரோக்கியமான, சுவையும் சத்தும் மிக்க டிஷ் இது! செய்துதான் பாருங்களேன்!

(தொடரும்)

எழுத்து வடிவம் : **ஆதர்ஷ்**

**டாக்டர் எம். ராஜேந்திரன்**



# டாபர்மேன்

## பாலு சத்யா

''ஒண்ணும் பண்ணாதுல்ல?''

''அட! எத்தினிவாட்டி சார் சொல்றது? ஒண்ணும் பண்ணாது சார். நான்தான் கூடவே இருக்கப் போறேன்ல?'' என்றான் முருகன்.

கோடம்பாக்கம் ஏரியாவில் முருகனைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. டாக்ட்ரெரியர், பொமரேனியன், அல்சேஷயன், ராஜபாளையம் வகை... என்று விதவிதமான நாய்களைத் தேடிப் பிடித்து ஷூட்டிங்குக்கு அழைத்து வருபவன். எப்படிப்பட்ட நாயாக இருந்தாலும் அவன் விரலசைவுக்குக் கட்டுப்பட்டுவிடும்.

ஆஜானுபாகுவாக இருந்தது அந்த டாபர்மேன். ஒரு நாயைப் போய் ஆஜானுபாகுவாக இருக்கிறது என்று சொல்லலாமா? வேறு வழியில்லை. அப்படித்தான் சொல்லவேண்டியிருக்கிறது. அதன் ஆகிருதி அப்படி. 'புஸ்... புஸ்...' என்று மூச்சுவிட்டபடி, தரையில் பின்னங்கால்களை மடித்து உட்கார்ந்திருந்தது. நாக்கை வெளியே நீட்டியபோது தெரிந்த பல் வரிசை கலக்கத்தை ஏற்படுத்தியது. 'பாயறதுக்கு நான் ரெடி. நீ ரெடியா?' என்பது போல என்னைப் பார்த்தது. நான் முகத்தைத் திருப்பிக்கொண்டேன்.

வாசலில் யூனிட் வண்டியிலிருந்து கட்டர் ஸ்டாண்டுகளையும் லைட்டுகளையும் இறக்கிக்கொண்டிருந்தார்கள். ராஜேந்திரன் பைக்கை ஸ்டாண்ட் போட்டுவிட்டு உள்ளே வந்தான். டாபர்மேனை மிரட்சியோடு பார்த்தான்.

''இன்னிக்கு சீன்ல இதுதான் நடிக்கப் போகுதா சார்?''

''ஆமா.''

''என்ன பேருப்பா?''

''டைகர்'' என்றான் முருகன்.

''காலையில் ஏதாவது சாப்டுச்சா?''

''அரைக்கிலோ மட்டன் போட்டுத்தான் கூட்டியாந்திருக்கேன்.''

ராஜேந்திரன் என்னைத் தனியாக அழைத்துக்கொண்டு போனான்.

''என்ன சார் இது? பாக்கறதுக்கே பயமா இருக்கு. இதை வச்சுக்கிட்டு எப்படிச் சமாளிக்கப் போறோம்?''

''டைரக்டர் இதுதான் வேணும்னு சொல்றாரு. நாம என்ன செய்ய முடியும்?''

ராஜேந்திரன் தனக்குள்ளாகவே எதையோ முணுமுணுத்தபடி நகர்ந்தான். எங்கள் டைரக்டர் எதிலும் 'நேடிவிட்டி' வேண்டும் என்று மெனக்கெடுபவர். கதைக்குப் பொருத்தமானதாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தேடிப்பிடித்து இந்த டைகரை வரவழைத்திருந்தார்.

கொஞ்ச நேரத்தில் நான் டைகரை மறந்துபோனேன். ஷூட்டிங் ஸ்பாட்டில் எங்களுக்கு டைகரைத் தாண்டி நிறைய வேலைகள் இருந்தன. சொல்லப்போனால், ஒரு சிங்கத்தையே கட்டிவைத்திருந்தால்கூட ஒரு சினிமா உதவி இயக்குநருக்குத் தேவைப்படும் போதுதான் அதன் ஞாபகம் வரும். அன்றைக்கு எடுக்கப் போகும் காட்சிக்குத் தேவையான செட் பிராப்பர்டீஸ், காஸ்ட்யூம் எல்லாம் தயாராக இருக்கிறதா என்று பார்ப்பதற்காக ராஜேந்திரன் போனான். நான் இன்னொரு அஸிஸ்டெண்டான கார்த்திகைக் கூட்



பிட்டு, டைரக்டர் கிளம்பிவிட்டாரா என்று விசாரிக்கச் சொன்னேன். நடிகர், நடிகைகளுக்கு ஃபோன் போட்டு எப்போது வருவார்கள் என்று விசாரிப்பதிலும், வசனங்களைச் சரிபார்ப்பதிலும் ஆழ்ந்து போனேன்.

எட்டரை மணிக்கு டைரக்டர் வந்தார். அன்றைக்கு ஷூட்டிங் ஸ்பாட்டில் இருந்த அத்தனைபேரின் கவனமும் டைகரின் மேல்தான் குவிந்திருந்தது என்பதை அப்போதுதான் கவனித்தேன். டைகரைச் சுற்றி நிறையபேர் நின்றிருந்தார்கள். கேமராமேன் டைரக்டரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

''இந்த மாதிரி ஜாதி ரொம்ப ரேர் சார்...''

''தொடைல புடுங்கிச்சுன்னா அரைக் கிலோ கறியை எடுத்துடும்போல.''

''இது தொடைல எல்லாம் கடிக்காது. கழுத்தைத்தான் குறிவைக்கும்.''

இப்படி ஆளாளுக்கு ஏதேதோ



சொல்லிக்கொண்டிருந்தார்கள். டைகர் யாரையும் லட்சியம் செய்யாமல் தரையில் ஊர்ந்துகொண்டிருந்த கட்டெறும்பு ஒன்றைப் பார்த்துக்கொண்டிருந்தது. கதாநாயகி, டைகரைப் பார்த்து மிரண்டுபோனார். பயம் வெளிப்படையாகவே தெரிந்தது.

''என்ன சார் இது! சிங்கம் மாதிரி இருக்கு. இதோடயா நடிக்கணும்? கடிச்சுடாதே?''

''ஒண்ணும் பயம் இல்லைம்மா. இங்க பாருங்க'' என்று சொல்லி, டைகரின் தலையை வருடிக்கொடுத்தார் டைரக்டர். பிடரியைத் தடவியபோது, டைகர் உடலைக் குறுக்கிக் கண்களை மூடிக்கொண்டது. நடிகை ஆச்சரியத்தோடு பார்த்தார்.

காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு டைரக்டர், அன்றைக்கு எடுக்கப் போகும் காட்சியை நடிகைக்கு விவரித்தார். ''டைகர் உங்க பெட்ரூம் கட்டில் மேல உட்கார்ந்திருக்கு. நீங்க பக்கத்துல வந்து நின்னு, அதோட தலையைத் தடவிக்கிட்டே அது கிட்ட பேசறீங்க. டயலாக் என்னப்பா?''

நான் வசனத்தை வாசித்தேன். ''இது ரொம்ப கேவலமான உலகம் டைகர். அதுலயும் இந்த ஆம்பளைங்க ரொம்ப மோசம். மனுஷனா அவன்? அவனை நம்பித்தானே நான் எல்லாத்தையும் விட்டுட்டு வந்தேன்? இப்போ அந்த ரஞ்சனி வந்தப்புறம் நான் முக்கியம் இல்லாமப் போயிட்டேன்.''

டைரக்டர் சொன்னார். ''இந்த இடத்துல பெட்ரூம் கதவைத் திறந்துக்கிட்டு ரவி உள்ளே வர்றார். நீங்க திரும்பிப் பாக்கறீங்க. இந்த ஷாட்டை முதல்ல எடுத்துடலாமா?''

நடிகை டாபர்மேனைப் பார்த்தபடி பரிதாபமாகத் தலையசைத்தார். கையடக்கக் கண்ணாடியில் முகம் பார்த்து முடியை ஒழுங்குபடுத்திக்கொண்டார். உதட்டிலிருந்த லிப்ஸ்டிக்கைச் சரிபார்த்தார்.

டைரக்டர் கேமராமேனைப் பார்த்துக் குரல் கொடுத்தார். ''என்னப்பா ரெடியா?''

''ரெடி சார்.''

முருகனிடம் நான் காட்சியைச் சொல்லி, டைகரைக் கட்டில்மேல் உட்கார வைத்தேன். டைகர் முரண்டு பண்ணாமல் ஒத்துழைத்தது. அது உட்கார்ந்ததும் முருகன் ஒரு பிஸ்கட் கொடுத்தான். 'அப்படியே உக்காரு!' என்பதுபோல சில சைகைகளைச் செய்துவிட்டு, எங்களோடு வந்து நின்றுகொண்டான்.

நடிகை ஒருமுறை ரிகர்ஸல் பார்த்துவிட்டுத் தயாரானார். டைரக்டர் 'ஆக்ஷன்' சொன்னார். நடிகை நாயின் அருகே வந்துநின்று வசனம் பேச ஆரம்பித்தார். ''இது ரொம்ப மோசமான...'' எல்லாம் சுமுகமாகத்தான் போய்க்கொண்டிருந்தது, கதவு திறக்கப்படும்வரை. ரவி உள்ளே நுழைந்ததும் அது நடந்தது. நடிகை திரும்பிப் பார்த்தபோது டைகர் 'வவ்!' என்று அவர் முகத்தை நோக்கிப் பாய்ந்தது. நடிகை சட்டென்று விலகிக்கொண்டார். ஆனாலும், அவருடைய தாடையில் பிளேடால் கிறியதுபோல சின்னக் காயம் ஏற்பட்டிருந்தது. முருகன் ஓடிவந்து, டைகரைச் சமாதானப்படுத்தி அறைக்கு வெளியே அழைத்துப் போனான்.

நடிகை கிளிசரின் போடாமலேயே 'பொலபொல'வென அழுதுவிட்டார். ''ஐயோ! எரியுதே! தொப்புளைச் சுத்தி ஊசி போடணுமா? என்ன சார் இது! நாயோட நடிக்கவச்சு என்னைக் கொல்லப் பாக்கறீங்களா?''

''பல்லுகூடப் படலை. லேசான காயம் தானே! வேணும்னா, சேஃப்டிக்கு ஒரு ஊசி போட்டுக்கங்க'' எவ்வளவு சொன்னாலும் நடிகை சமாதானமாகவில்லை. புரொடக்ஷன் மேனேஜர் நடிகையைக் காரில் ஏற்றி, பக்கத்திலிருந்த கிளினிக்குக்கு அழைத்துப்போனார். டாக்டரே ஒன்றும் இல்லை என்று சொன்னபிறகும்கூட

*''இது என்னோட முதல் ஆபரேஷன்... 'சக்ஸஸ்' ஆயிட்டா ஃபீஸே தர வேண்டாம்... ஆனா?''*

*''என்ன...? சொல்லுங்க டாக்டர்!''*

*'' 'பெயிலியர்' ஆயிட்டா யாருகிட்ட ஃபீஸ் கலெக்ட் பண்றதுன்னு சொல்லிடுங்க!''*

**- எஸ்.ஆதிகேசவன்**

நடிகை ஒத்துக்கொள்ளவில்லை. ஸ்பாட்டுக்குத் திரும்பிவராமல் வீட்டுக்குப் போய் விட்டார்.

ஒரு ஷூட்டிங் பாதியில் ரத்தாவது செலவு பிடிக்கிற சமாசாரம். தயாரிப்பாளர் எரிச்சலாகிப் போவார். என்ன செய்வது? டைரக்டர் தனியாக அமர்ந்து யோசித்துக் கொண்டிருந்தார். அவரருகே போகவே எங்களுக்குத் தயக்கமாக இருந்தது. அதற்குள் புரொடக்ஷன் ஆட்களும் யூனிட் ஆட்களும் ''பேக்கப்பா சார்?'' என்று பத்துமுறை கேட்டுவிட்டார்கள். கால்மணி நேரம் கழித்து டைரக்டர் என்னைக் கூப்பிட்டு அந்த யோசனையைச் சொன்னார்.

''சுரேஷ்... இந்த லொகேஷன்ல இந்த சீன் மட்டும்தான் பாக்கி. அந்தப்



பொண்ணு திரும்ப வந்து நடிக்குமான்னு தெரியல. யாரையாவது கட்டில்ல படுக்க வச்சு போர்வையால மூடிடலாம். பக்கத்துல நாய் நிக்கட்டும். படுத்துக்கிட்டே ஹீரோயின் பேசறமாதிரி சீன். டயலாக்கைச் சொல்லி ஷூட் பண்ணிடுவோம். டப்பிங்ல பாத்துப்போம். மத்தியானத்துக்கு மேல ஷூட்டிங்கை வளசரவாக்கத்துக்கு ஷிஃப்ட் பண்ணி, காமெடி டிராக் பேலன்ஸை முடிச்சுடுவோம்... என்ன?''

நான் தலையசைத்துவிட்டு வந்து ராஜேந்திரனிடமும் கார்த்திக்கிடமும் விஷயத்தைச் சொன்னேன். ஆனால், அது அவ்வளவு எளிதான காரியமாக இல்லை. ஸ்பாட்டில் இருந்த யாரும் டைகரோடு நடிக்கத் தயாராக இல்லை. எப்படிப்பட்ட சூழ்நிலையாக இருக்காலும் உயிரைப் போய் யாராவது பணயம் வைப்பார்களா என்ன? முருகன் படுக்கத் தயாராகத்தான் இருந்தான். ஆனால், டைகரை யார் பார்த்துக்கொள்வது?

நான் தயங்கித் தயங்கி டைரக்டரிடம் விஷயத்தைச் சொன்னேன். டைரக்டர் எழுந்து வந்தார். ''லைட்டெல்லாம் ரெடியா?'' என்று கேட்டார். ராஜேந்திரனை அழைத்தார்.

''ராஜேந்திரா! கட்டில்ல ஏறிப் படு!''

ராஜேந்திரன் ஒரு கணம் என்னைப் பார்த்தான். டைரக்டரே சொல்லும்போது பதில் பேச முடியுமா? கட்டிலில் ஏறிப் படுத்தான். அவனிடம் முருகன் சொன்னான். ''டைகர் ரொம்ப சாது சார். இன்னிக்கு என்னமோ அதுக்கு அந்தம்மாவோட ஸ்மெல் பிடிக்கலை போல. அதான் அப்பிடிப் பண்ணிடுச்சு.''

ராஜேந்திரன் போர்வையைப் போர்த்திக் கொண்டான். டைகர் ரொம்பவே சொதப்பியது. கேமரா ரன்னிங்கில் இருக்கும்போது கட்டிலிலிருந்து இறங்கிக் கீழே ஓடியது. ஒருமுறை இருமுறையல்ல, பலமுறை. அதை தாஜா பண்ணி, பிஸ்கட் கொடுத்து, அந்த ஒரு காட்சியை முழுவதுமாக எடுத்து முடிக்க மதியத்துக்கு மேல் ஆனது. அதுவரை ராஜேந்திரன் படுக்கையில் இருந்து எழுந்திருக்கவே இல்லை.

மதிய உணவு இடைவேளையில் நான் ராஜேந்திரனிடம் கேட்டேன்.

''ரொம்ப பயந்துட்டியா?''

''மொதல்ல பயமாத்தான் இருந்துச்சு. அப்புறம் சமாளிச்சுட்டேன்.''

''எப்பிடி?''

''இதே மாதிரி ஒரு சூழ்நிலை நமக்கு வந்தா நாம என்ன பண்ணுவோம் சார்? இதைத்தானே பண்ணுவோம்?''

''ஆமா.''

''அதைச் சொல்லியே என்னை நான் தேத்திக்கிட்டேன் சார்.''

கொஞ்ச நேரம் கழித்துக் கேட்டான்.

''ஏன் சார்! நானும் ஒரு நாள் டைரக்டர் ஆயிடுவேன்ல?''

நான் பதில் சொல்லவில்லை. அவனைப் பார்த்து இலேசாகச் சிரித்தேன். ●

கலப்பை மோத்தடியுடன்
புத்தம் புதிதாய்க் கயிறு
கத்தாழையிலோ புளிச்சக்கீரை நாரிலோ
சரடு விட்டுப் புனையப்படும்
சித்திரை பிறந்தது முதல்

ஊரு ஏர் அத்தனையும்
ஒன்று திரண்டு
விலா கோலி வருகையில்
பிள்ளைகள் பெண்கள் பெரியவர்களின்
பரவசத்தைக் காணக்
கண்கோடி வேண்டும்

எல்லோரிடமும் இருந்த நிலம்
போர்செட் வங்கிக் கடனாலும்
இலவச மின் இணைப்பாலும்
ஒவ்வொன்றாய் ஒன்று சேர்ந்தன
ஊர்ப் புள்ளியிடம்

பிழைப்பு தேடி பிள்ளைகள்
நகரத்துக்குப் போன வீடுகளில்
வாசல் தெளிக்கக்கூட
சாணம் இல்லாத அவலம்

தெக்கிக்காட்டை
வகுந்து வந்து நின்றது
ஒத்தவீட்டு டிராக்டர்
பச்சரிசி வெல்லம் கலந்து படைக்கும்
பட்டவேல் கொல்லையில்.

**சிவராஜ்**





# பலன்!

சிரமம் இல்லாமல் எந்தக் காரியமும் இல்லை. நாமாக ஒரு காரியத்தை இழுத்துப் போட்டுக்கொண்டால், அதற்காக எத்தனை கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் சகித்துக் கொள்கிறோம்? ஏதோ ஒரு கண்டத்தில் உள்ள ஏதோ யூனிவர்ஸிடியில், ஏதோ ஒரு படிப்பு பார்த்தால் பெரிய உத்தியோகம், பணம் கிடைக்கிறது என்கிறபோது உடனே 'ஸிலபஸ்' வரவழைத்துவிடுகிறோம். அங்கே போய் பரீட்சை எழுத ஏற்பாடெல்லாம் செய்கிறோம். நமக்கென்றே ஏற்பட்ட தர்மத்தைக் கஷ்டம் இருக்கிறது என்று விட்டுவிடலாமா? கஷ்டம் இருந்தும் செய்தால்தான் ஜாஸ்தி பலன், ஜாஸ்தி பெருமை.

இப்படி உங்களைக் கஷ்டப்படுத்தத்தான் வந்திருக்கிறேன். நான் சொன்ன பிரகாரம் செய்வதாக நீங்கள் சொல்லி, அதற்கான ஏற்பாடுகளை முடித்து வருகிற வரையில், இங்கேயே உட்கார்ந்து கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தால் என்ன என்றுகூட நினைக்கிறேன். எங்கேயாவது உட்கார்ந்துகொண்டு யாரையாவது உபத்திரவப்படுத்தத்தானே வேண்டும்? இங்கேதான் உட்கார்ந்து உபத்திரவம் பண்ணுவோமே என்று தோன்றுகிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய
சுவாமிகள்



# மருதன்

'**பெ**ண்களே, இந்த ஒரு விஷயத்தில் நான் மிகவும் கண்டிப்புடன் இருப்பேன். என்னிடமிருந்து ஒரு துளி இரக்கத்தையும் எதிர்பார்க்க வேண்டாம். உங்கள் உடலை முழுமையாக மறைத்துக் கொள்ள வேண்டும். நல்ல கறுப்பு பர்தா கடைத்தெருக்களில் கிடைக்கிறது. வாங்கிக்கொள்ளுங்கள். உச்சந்தலை முதல் சுட்டை விரல் நுனி வரை நீண்டிருக்கிறதா என்று சரிபார்த்த பிறகே வாங்கவேண்டும். நாம் இஸ்லாத்தின் குழந்தைகள். நமக்குப் போதிக்கப்பட்டதை மட்டுமே நாம் செய்வோம். என்ன சரிதானே?'

'சரிதான்' என்று தலையசைக்கிறார்கள் மாணவிகள். அஸியா அந்த்ராபி திருப்தியுடன் புன்னகை செய்கிறார். 'நாளை மீதி வகுப்புகளை வைத்துக்கொள்வோம்' என்று சொல்லியபடி தமது இருக்கையை விட்டு எழுந்திருக்கிறார் அவர். தங்கள் ஆசிரியரை அவர்கள் ஆச்சரியத்துடன் பார்க்கிறார்கள். சொல்வது ஒன்று செய்வது ஒன்று என்றில்லை அவர். கைகளில் வெள்ளை உறைகள். கண்களுக்குக் கறுப்புக் கண்ணாடி. முழுமையான பர்தா.



அஸியா வசிப்பது ஸ்ரீநகரில். அதை வசித்தல் என்று சொல்வது பொருத்தமாக இராது. அவர் பதுங்கித்தான் இருக்கிறார். 1981ல் ஓர் இயக்கத்தை ஆரம்பித்தார். Dukhtaran-e-Millet என்று பெயர். நம்பிக்கைக்குரிய மகள்கள் என்று அர்த்தம்.

ரகசியமாகத்தான் இயக்கத்தை நடத்திக்கொண்டிருக்கிறார் அஸியா. மாணவிகளுக்குத் தற்காப்புக் கலைகள் கற்றுத் தருகிறார். ஒவ்வொருவரும் சிறு கத்தி வைத்திருக்க வேண்டியது அவசியம். ஆயுதப் போராட்டத்துக்கு அல்ல. விஷ்க் என்று திறந்து, தாக்க வருபவர்களை பயம் காட்டி விரட்டியடிக்க. சவுதி அரேபியாவில் இருந்து ஒரு கத்தியைத் தருவித்து, தன் கைப்பையில் வைத்திருக்கிறார் அஸியா. பூ வேலைப்பாடுகள் செய்யப்பட்ட கத்தி அது.

**ப**தினெட்டு வயதில் அஸியாவிடம் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. பாடங்கள் படித்தது போதும் என்று கதவைப் பூட்

# பூ வேலைப்பாடுள்ள ஒரு கத்தி!



ஆரம்பித்திருக்கிறார். 'என்னைத் தலைகீழாகப் புரட்டிப்போட்ட ஒரு புத்தகத்தை அப்போதுதான் படித்தேன்' என்கிறார் அஸியா. மரியம் ஜமீலா என்பவர் எழுதிய 50 பக்கப் பிரதி அது. பெண் போராளிகளின் வாக்குமூலம் என்பது அதன் தலைப்பு.

ஆறே ஆண்டுகளில் தீவிரமாகச் செயல்பட ஆரம்பித்துவிட்டது அஸியாவின் இயக்கம். கறுப்பு பெயின்டைக் கையில் தூக்கிக்கொண்டு தெருவில் இறங்கிவிட்டார்கள். பெண்களை ஆபாசமான முறையில் சித்திரிக்கும் சுவரொட்டிகளைக் கறுப்பாக்கினார்கள். ஓடி வந்தது காவல் துறை. 'என்ன தைரியம்? என்ன திமிர்? யார் நீங்கள்? உங்கள் தலைவர் யார்?'

'தலைவர் அல்ல தலைவிதான்' என்று மாணவிகள் சொன்னதும் ஒரு கணம் அசந்து போன காவல்துறை, மறுகணமே அஸியாவைத் தீவிரமாகத் தேட ஆரம்பித்தது. அன்று பதுங்க ஆரம்பித்தவர்தான்; ின்று வரை ஓட்டம் நின்றபாடில்லை. ·க்கொண்டே போராடிக்கொண்டிருக் ார்கள். கோஷம் எழுப்பிக்கொண்டிருக் ர்கள். பேருந்துகளில் பெண்களுக்குத் தனி இருக்கைகள் வேண்டும்; மீடியா, பெண்களை மரியாதையுடன் சித்திரிக்க வேண்டும்; சாராயக் கடைகள் மூடப்பட வேண்டும். 'முடியாது என்ன செய்வாய்?' என்று ஒரு சாராய வியாபாரி கேட்டபோது, கைப்பையைத் திறந்து தீப்பெட்டியை வெளியில் எடுத்து ஒரு குச்சியைப் பற்ற வைத்துக் காட்டியிருக்கிறார் அஸியா.

முகமது காஸிம் என்பவருடன் ரகசியத் திருமணம். தன்னைப் போலவே தன் கணவரும் ஒரு போராளி என்பதில் அஸியாவுக்குப் பெருமிதம். 1993ல் அஸியா, அவரது கணவர், அவர்களது ஆறு மாதக் குழந்தை மூவரும் கைது செய்யப்பட்டனர். காஸிமை ஸ்ரீநகரில் அடைத்துவிட்டார்கள். அஸியாவை ஜம்முவில். பதின்மூன்று மாதங்கள்.

இரண்டாவது குழந்தை பிறந்துவிட்டது. கணவரை இன்னமும் வெளியில் விடவில்லை. அடுத்த வேலையைப் பார்க்க ஆரம்பித்துவிட்டார் அஸியா. வரதட்சணைக்கு எதிராக முழக்கங்கள் வெடித்துக்கொண்டிருக்கின்றன. இளைஞர்கள் புழங்கும் காஃபி ஷாப்களுக்குச் சென்று, இஸ்லாத்தின் மேன்மையை விவரிக்கும் குறுந்தகடுகளை இலவசமாக விநியோகித்துக்கொண்டிருக்கிறார். வகுப்புகள் எடுக்கிறார். பத்திரிகையாளர்களை ரகசியமாக அழைத்து (ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு இடத்தில்) அறிக்கைகள் அளிக்கிறார். 'நிச்சயம் உலகை மாற்றிவிடுவேன்' என்கிறார் நம்பிக்கையுடன். கைப்பையில் உபயோகிக்காத கூரங்கத்தி! ●



''ஒருத்தன் என்னைக் கண்டபடி திட்டிட்டுப் போயிட்டான் டாக்டர்...''

''மனசுல காயம் ஏதாவது பட்டிருக்கான்னு ஒரு ஸ்கேன் எடுத்துப் பார்த்துடவா?''

- பம்மல் நாகராஜன்

''கோயிலுக்கு வந்தா நான் என் மனைவியை மறந்துடுவேன்...''

''ஏன்?''

''துன்பத்தை மறக்கத்தானே கோயிலுக்கு வர்றோம்!''

- தஞ்சை தாமு



மன்னர் பின்னங்கால் பிடரியில் பட ஒரே ஓட்டமாக ஓடுகிறாரே ஏன்?''



''உங்களுடைய இலவச திட்டங்களைக் கேட்டு உங்களைப் பாராட்ட வந்துள்ள மக்கள் கூட்டம், அரண்மனையை 'போர்'மேகம் போல் சூழ்ந்துள்ளது என்று சொன்னேன்... அவ்வளவுதான்!''

- அரூர் மு.மதிவாணன்



# இலவச அரசர்!



''பரீட்சை எல்லாம் நல்லா தானே எழுதுற. அப்புறம் ஏன் ஹோம் ஒர்க் மட்டும் தப்புத் தப்பா பண்றே?''

''பரீட்சையை நான் எழுதறேன். ஹோம் ஒர்க் எங்கப்பா செய்யாரு டீச்சர்.''

- ஆ.விஜயலக்ஷ்மி



''என்னடி! சாம்பார்ல உப்பே இல்லியே?''

''உப்பு கரைஞ்சு போயிருக்கும்னுகூட உங்களுக்குத் தெரியாதா?''

- 'இனாம்' க.ஆ.கேசவன்



''தலைவருக்கு இரட்டையா கொள்ளுப்பேரன்ங்க பிறந்ததால குழம்பிப் போயிருக்கார்.''

''எதுக்கு?''

''மழலை அணித் தலைவரா யாரைப் போடறதுங்கிற குழப்பம்தான்!''

- சீர்காழி வி. ரேவதி



''என் மனைவி மெகா சீரியல்ல நடிக்கப் போறா...''

''உன்னை மட்டும் அழவச்சவங்க இனிமேல் ஊரையே அழவைக்கப்போறாங்கனு சொல்லு.''

- குருவை சோலோசெல்வா

ரஜினி பேசும் பஞ்ச் டயலாக்குகளுக்கு ரசிகர்கள் மத்தியில் எவ்வளவு அமோகமான வரவேற்பு என்று சின்னக் குழந்தையைக் கேட்டாலும் சொல்லி விடும். அவர், சமூக அவலங்களை எதிர்த்துப் போராடும் ஒரு சீர்திருத்தவாதியாக நடித்த, நான் இயக்கிய படம் 'மனிதன்'. ஏவி.எம்.தயாரிப்பு. அதில் வில்லனான வினு சக்ரவர்த்திக்கு அரசியல்வாதி கதாபாத்திரம். அவரது தோழர் 'சோ' சார். படம் நெடுக, அவருக்கே உரிய அரசியல் கிண்டல். வினு சக்ரவர்த்தியின் மகனாக நடித்தார் ரகுவரன். நடிப்பிலும் சரி, சண்டைக் காட்சிகளிலும் சரி, ரஜினிக்கும் ரகுவரனுக்கும் இடையே இருந்த சரியான போட்டி, படத்துக்கு விறுவிறுப்பைக் கூட்டியது. ரஜினி ஏழைகளுக்காக வாதிட, ரகுவரன் பணக்காரத் திமிரில் பேசுவார். பில்லியர்ட்ஸ் ஆடிக்கொண்டே ரஜினியும் ரகுவரனும் வசனம் பேசுகிற காட்சி ஒன்று வரும். அதில், ஒவ்வொரு பந்தாக குறிபார்த்து அடித்தபடியே, ரகுவரனுக்கு எதிராக ரஜினி ஒவ்வொரு பாயின்ட்டாகச் சொல்லி வசனம் பேசுவார். அந்தக் காட்சியின் கடைசியில், முத்தாய்ப்பாக ரஜினிக்கு ஒரு வசனம் இருக்க வேண்டும் என்று நினைத்தேன். யோசித்தபோது, புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் பாடல் வரிகளைப் பயன்படுத்தினால் மிகவும் பொருத்தமாக இருக்கும் என்று தோன்றியது. ''ஓ! பாடல் வரிகளைச் சொல்லுங்க! ஜமாய்ச்சுடலாம்!'' என்றார். அந்த இடத்தில் ரஜினி கூறிய புரட்சிக் கவிஞரது வரி இதுதான்:

'ஓடப்பராக இருக்கும் ஏழையப்பர் உதையப்பராகிவிட்டால் ஓர் நொடிக்குள் ஓடப்பர் உதையப்பர் எல்லாம் மாறி ஒப்பப்பர் ஆகிவிடுவார் உணரப்பா நீ!' இதனை ரஜினி தமக்கே உரிய ஸ்டைலில் சொல்லி முடிக்கிறபோது, தியேட்டரில் ஒரே கைத்தட்டல்தான்!

## எஸ்.பி.முத்துராமன்







'மனிதன்' படத்தில்....

**'சோ'** சார்! பொதுவாக, துக்ளக் பத்திரிகை வேலை காரணமாக குறைவான படங்களையே ஒத்துக்கொள்வார் என்றாலும், நானும் பஞ்சு அருணாசலமும் போய்க் கேட்டால் மறுக்காமல் நடிக்க ஒப்புக்கொண்டுவிடுவார். எங்கள் மீது அவ்வளவு அன்பும் மரியாதையும் அவருக்கு உண்டு. மிகக் குறைந்த நேரத்தில் அவர் சம்பந்தமான காட்சிகளை எடுத்து முடித்துக்கொண்டு அவரை அனுப்பி வைத்துவிடுவோம் என்பதும் அவருக்குத் தெரியும். 'மனிதன்' படத்தில் 'சோ' சார் நடிக்க ஒப்புக்கொண்டார். சில நாட்களில், செட்டில் ரஜினிகாந்த் இருக்கும்போதே, சோ சார் சம்பந்தப்பட்ட காட்சிகளை எடுக்கும்படியாயிற்று. அந்தச் சமயங்களில், 'ரஜினி காத்துக்கொண்டிருக்கிறார். என் சம்பந்தமான ஷாட்களை எடுத்துக்கொண்டிருக்கிறீர்களே!' என்று தயங்குவார். ரஜினியோ,



சோ சாரிடம், 'நோ பிராப்ளம்! உங்க போர்ஷனை நீங்க முதலில் முடிச்சிடுங்க!' என்று சொல்வார்!

ஒரு விழாவில் சோ சார் பேசுகையில், ''பொதுவாக சினிமா உலகில் எஸ்.பி.முத்துராமன் போல ஒரு நல்ல மனிதரைப் பார்ப்பது அபூர்வம் என்று சொல்வார்கள். நான் அதை ஒப்புக்கொள்ளமாட்டேன்'' என்று சொல்லிவிட்டு நிறுத்தினார். பார்வையாளர்கள் அனைவரும் அடுத்து என்ன சொல்லப் போகிறார் என்று ஆர்வமாக இருந்தார்கள். அவர் தொடர்ந்தார், 'திரை

# 'மனிதன்' அனுபவங்கள்!




உலகில் மட்டுமல்ல; இன்று சமூகத்திலேயே இப்படி ஒரு தங்கமான மனிதரைப் பார்க்க முடியாது' என்றவுடன் எழுந்த கரவொலி அடங்க வெகு நேரமானது. சோ சாரின் அடிமனத்திலிருந்து வந்த அந்தப் பாராட்டை எனக்குக் கிடைத்த மிகப் பெரிய பேறாகக் கருதுகிறேன்.



ஸ்ரீவித்யா தம் கேரக்டரை உணர்ந்து 'மனிதன்' படத்தில் கச்சிதமாக நடித்தார். அவரது திறமை மீது எனக்கு ஆரம்பகாலம் முதலே நம்பிக்கை உண்டு. அவரது திறமையை முழுமையாக வெளிப்படுத்தும்படியான கேரக்டர்களை அவருக்கு நான் பல படங்



* ரகுவரன்



* சோ

களில் கொடுத்திருக்கிறேன். 'காலங்களில் அவள் வசந்தம்' அவருக்காகவே உருவாக்கப்பட்ட படம். தமக்குக் கிடைத்த வாழ்க்கையைத் தம்முடைய தங்கைக்காகத் தியாகம் செய்யும் மனம் சிதைந்த முதிர் கன்னி கதாபாத்திரம். என்னுடைய மனைவி கமலா இறந்த சமயத்தில், ஓடி வந்து எனக்கு ஆறுதல் சொன்ன அவரைச் சந்தித்து ஒரு கட்டத்தில் ஆறுதல் சொல்ல விரும்பினேன். ஆனால், 'அவர் தனிமையையே விரும்புகிறார்; யாரையும் சந்திக்க விரும்பவில்லை' என்று அறிந்தேன். அவரைச் சந்திக்க முடியாமலே போய்விட்டது.

**ம**னிதன் படத்தின் கிளைமேக்ஸில் ஒரு ஆயுதக் கிடங்கு வரும். ஆர்ட் டைரக்டர் சலம், மிஷின் மூலம் செங்கல் தயாரிக்கும் ஒரு தொழிற்சாலையைத் தமது திறமை பளிச்சிட ஒரு ஆயுதக் கிடங்காக மாற்றி அமைத்துக் கொடுத்தார். ரஜினி அங்கே சென்று, வில்லனால் கடத்தப்பட்டு, அடைத்து வைக்கப்பட்டிருப்பவர்களை மீட்க வேண்டும்!

இந்த சீனுக்குப் பிறகு ஒரு கார் சேஸ். சரவணன் சாரின் மகன் குகன் சார், கார்கள் விஷயத்தில் மிகுந்த ஆர்வமும் ஆழமான அறிவும் கொண்டவர். ஏவி.எம். ஸ்டுடியோ வளாகத்திலேயே அவர் ஆசையாக வாங்கி வைத்திருக்கும் பல பழைமையான, விதவிதமான மாடல் கார்களைப் பார்க்கலாம். இப்போது மிகவும் பிஸியாக உள்ள கோயம்பேடு பகுதி, அப்போது பொட்டல் காடாக இருந்தது. அங்கேதான் அந்த கார் சேஸ் காட்சி படம் பிடிக்கப்பட்டது. ஒரு நாள் இரவில் அந்தக் காட்சியைப் படம் பிடித்துக் கொண்டிருக்கும் சமயத்தில், வில்லனின் ஆட்களில் ஒருவரது கார் தீப்பிடித்துக் கொண்டு, ரஜினியின் காரை இடிக்க அது தலைகீழாகக் கவிழ்ந்தது. அப்போது காரை ஓட்டிய ஸ்டன்ட் வீரரின் நான்கு விரல்களும் துண்டாகிவிட்டன. உடனே, அவருக்கு முதலுதவி அளித்து, வெட்டப்பட்ட விரல்களை ஒரு பாலிதீன் கவரில் போட்டு எடுத்துக் கொண்டு ஸ்டான்லி மருத்துவமனைக்கு விரைந்தோம். அங்கே டாக்டர்கள் உடனடியாக அறுவை சிகிச்சை செய்தும் இரண்டு விரல்களை மட்டுமே காப்பாற்ற முடிந்தது. அந்த ஸ்டன்ட் வீரர் தமது இரு விரல்களை இந்தப் படத்துக்காக தியாகம் செய்யும்படி நேர்ந்தது. எவ்வளவு ரிஸ்க் எடுத்துச் சண்டைக் காட்சிகளை நாங்கள் எடுக்கிறோம் என்பதற்கு இச்சம்பவம் ஓர் உதாரணம்.

**வே**று ஒரு மொழியில் வெளியாகி வெள்ளிவிழா கண்ட படத்தை, தமிழில் எடுத்தால் வெற்றி வாய்ப்புகள் என்ன?

*(பயணம் தொடரும்)*

எழுத்து வடிவம்: **எஸ்.சந்திர மௌலி**

"சீரியலைப் பார்த்துதான் குடும்பத்துல இப்படியெல்லாம் நடக்குதுன்னு ஒட்டு மொத்தமா பழிசொல்லலை. ஆனால், அதுவும் ஒரு காரணமாயிருக்குமோனு ஒரு சந்தேகம். சந்தேகத்துக்கிடமான ஒரு விஷயத்தை ஏன் தொடர்ந்து பண்ணணும்...?" கேள்வியோடு, பூபதியைப் பார்த்தார், பொன்ராஜ்.

"ஸார்... உங்கள் பேச்சு பூடகமா இருக்கு. மற்ற சீரியல்களைக் காட்டிலும் கதையம்சத்தோடு போய்க்கிட்டிருக்கிறது நம்ம சீரியல்தான். டி.வி. சீரியல்களால சின்னச் சின்னப் பிரச்னைகள் இருக்கலாம். ஆனால், நீங்கள் குற்றம் சொல்றது போல் டி.வி.யால் பெரிய பிரச்னைகள், விபரீதங்கள் நேர்ந்துடறதில்லை. உங்கள் குடும்பத்துல சில பிரச்னைகள் எழுந்திருக்குன்னா... அது துரதிர்ஷ்டமானது. அதுக்காக நானும் வருத்தப்படறேன். எக்காரணத்தைக் கொண்டும் சீரியலை நிறுத்தாதீங்க..."




"அப்ப நீங்க நின்னுக்குங்க..."

"ஸ...ஸார்..."

"என்ன பூபதி, கதையை நிஜமாக்கலாம்னு பாக்கறீங்களா? நான் நிதானமாய் இருக்கப் போய் உங்களை உட்கார வச்சு பேசிக்கிட்டிருக்கேன். உங்களால எங்கள் குடும்பத்துக்கு ஏற்பட்டிருக்கிற பிரச்னை என்னன்னு புரிஞ்சு போச்சில்ல..."

"ஸார்... இப்ப நான் எதைச் சொன்னாலும் புரிஞ்சிக்கிற மனநிலைல நீங்க இல்லை. சுலேகாவும் - நானும்..."

"ஷட்-அப்."

"ஸார்..."

"அவள் பேரைச் சொல்ற யோக்யதைகூட உனக்குக் கிடையாது. போய் அக்கௌண்ட்ஸ் செக்‌ஷன்ல கணக்கை செட்டில் பண்ணிக்கிட்டுக் கிளம்பு..." என்று ஒருமைக்குத் தாவியவர், அதே வேகத்தில் இண்டர்காமில், கணக்கு பிரிவுக்கு சில உத்தரவுகளைப் பிறப்பித்தார்.

"ஸார்... ப்ளீஸ்..! பிரச்னைகளைப் பேசித் தீர்த்துக்கலாம். அவசரப்பட்டு என்னைத் தூக்கிடாதீங்க. எனக்குப் பேர் கெட்டுப் போகும். எதிர்காலம் பாழாயிடும் ஸார்..."

"தெரியுதில்ல. உனக்குன்னா மட்டும் வலிக்குதுல்ல. அப்ப என்னைப் பத்தி நினைச்சிருக்கலாம் இல்ல. எனக்கு எவ்வளவு வலிக்கும்...?"

"மன்னிச்சிடுங்க ஸார். என்னை வெளியில் அனுப்பினால், காரணமும் வெளியில் வரும். அப்பவும் உங்களுக்கு பாதிப்புதான். உணர்ச்சிவசப்படாம யோசிங்க..."

"ஒரு சான்ஸ் தர்றேன். கதை பண்ற வேலையை சீரியலோடு நிறுத்திக்கணும். அதைத் தாண்டி வரக்கூடாது. சம்மதம்னா ெ ரக்ட் பண்ணு. இல்லேன்னா ஓடிப் போயிடு..." என்று முத்தாய்ப்பு வைத்தார் பொன்ராஜ்.

பூபதி, சவம்போல் வெளியேறினான்.

(தொடரும்)



# தம்பதியர் மெஸ் டு

''நாங்க பிழைக்க வழி காண, திருப்பூர்லேந்து வெளியூருக்கு வந்தவங்க. முதல்ல நான் பனியன் கம்பெனியில வேலை பார்த்தேன். கல்யாணம் நடந்தது. இரண்டு குழந்தைகள் பிறந்தன. வருமானம் பத்தலை. என்னோட மனைவி வசந்தியோட வற்புறுத்தலால, நாமளே சொந்தமா சின்ன அளவுல மெஸ் மாதிரி நடத்துனா என்னன்னு தோணிச்சு. வசந்திதான் இந்த 'தள்ளுவண்டி உணவக' ஐடியாவைத் தந்தாங்க!'' என்கிறார் கணவர் பாஸ்கர்.

சேலம், ஆர்ட்ஸ் காலேஜ் பேருந்து நிறுத்தம். மரவனேரி பகுதி. ஆத்தூர் சாலையில் வரிசையாய் நிழல் தரும் மரங்கள். அந்த மரத்தடிகளில் ஆங்காங்கு தள்ளுவண்டிகள். அவற்றுள் ஒன்றுதான், சேலம்வாசிகளால் 'தம்பதியர் மெஸ்' என்றழைக்கப்படும் வசந்தி - பாஸ்கர் தள்ளுவண்டி உணவகம்.

''என்னோட அப்பா நாமக்கல்ல ஆரியபவன் ஹோட்டல் நடத்தி வந்தாரு. சமையல் தொழில் எங்க குடும்ப ரத்தத்தில ஊறிப் போன ஒன்னு. அதான் 'தள்ளுவண்டி மெஸ்' தொடங்கி, அதிலும் தனி முத்திரை பதிக்க வர்றோம்!'' என்கிறார் வசந்தி.

''முதல் நாளன்று சாலையோரமா நின்னு, சாப்பாடு விற்பதற்கு ரொம்ப வெட்கமா இருந்திச்சு. சாப்பிடறவங்களுக்குப் பிடிக்குமான்னு வேறு சந்தேகமும் தொத்திக்கிச்சு. முதல் நாள் வாங்கிச் சாப்பிட்டவங்க, மறுநாள் எங்க வண்டியைத் தேடி வந்ததும்தான் எனக்கு நிம்மதியாச்சு'' என்கிறார் வசந்தி.

காலையில் எட்டு மணிக்கே, வீட்டில் தொடங்கிவிடுகிறது சிற்றுண்டி தயாரிப்பு. எலுமிச்சை சாதம், தக்காளி

சாதம், தயிர்ச் சாதம், வெஜிடபிள் பிரியாணி என, காலை பதினொரு மணிக்கு, சாலையோரமாகத் தள்ளுவண்டியில் 'தம்பதியர் மெஸ்' களை கட்டத் துவங்கிவிடுகிறது.

மாலை மூன்று மணிக்கெல்லாம் 'சிற்றுண்டி' வியாபாரம் நிறைவு பெற்று விடுகிறது. வீடு சென்று சிறிது நேர ஓய்வு. பிறகு தம்பதியர் இருவரும், இன்னொரு இடத்தில் ஆஜராகி விடுகின்றனர்!

அது ஒரு இன்டர்நேஷனல் கம்பெனியின் (Tiens) தயாரிப்புகளை, பார்வையாளர்களுக்கு அறிமுகப்படுத்தும் கூட்டம். அரங்கு எங்கும் நிசப்தம். மைக் பிடித்து வசந்தி பேசத் தொடங்கிவிடுகிறார். அவர்

# இன்டர்நேஷனல்!

குரலின் வசீகரமும், உறுதியும், பொருளைப் பற்றி நேர்த்தியாக விளக்கும் விதமும் பார்வையாளர்களைப் பெரிதும் ஈர்த்து விடுகிறது. ''ஏழு வருடங்களாக மெஸ் நடத்தி வர்றேன். கடந்த இரண்டு வருடங்களாக மாலை நேரங்களில் மைக் பிடித்துப் பேசியும் வருகிறேன். 'டியான்ஸ்' எனப்படும் ஊட்டச் சத்துகள் நிறைந்த துணை உணவுப் பொருட்களின் நேரடி முகவர்களாக, என் பேச்சு மூலமாக முன்னூறு நபர்கள் இயங்கி வருகிறார்கள். அதில் பெரும்பாலோர் பெண்கள். சாதாரண மனிதர்களும் சாதனையாளர்களாக மாறலாம் என்பதே என்னுடைய மேடைப் பேச்சின் அடிநாதம்!'' என்கிறார் வசந்தி.

செய்திச் சித்திரம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# மனம் முழுக்க குளுக்கோஸ்!

''ரோட்டில் கிரிக்கெட் விளையாடும் போது பந்து எதிர்பாராதவிதமாக ஒரு வீட்டுக்குள் விழுந்துவிடுகிறது. அதை எடுக்கச் செல்லும்போது அங்குள்ள பெண்ணைப் பார்த்துக் காதலாக, அவளோ சிறைவைக்கப்பட்டிருக்க, அதிலிருந்து கிளம்பும் வேகம், படம் முழுக்க நின்று விளையாடும்'' என்கிறார் அறிமுக நாயகன் வீரா. பார்க்க கிரிக்கெட் வீரர் தோனி மாதிரி இருக்கிறார். ''ஆனாலும் எனக்கு சினிமாதாங்க சுவாசமே. எம்.டெக். முடிச்சிட்டு நேரா வந்துட்டேன். முதல் படம் 'காதல் என்றால் என்ன' என் நம்பிக்கையை அதிகமாக்கி இருக்கு. இயக்குநர் காளிமுத்து ஏற்கெனவே 'அலையடிக்குது' படம் மூலமா ரசிகர்களைக் கவர்ந்தவர். ஜோடியா தியா பண்றாங்க. புதுமுகத்துக்கு என்ன தேவையோ அதையெல்லாம் பக்காவா கத்துக்கிட்டேன். மனம் முழுக்க குளுக்கோஸ் நிரப்பி நடிச்சிருந்தாலும் ஒரு சின்ன உதறல் உள்ளுக்குள்ள இருக்கத்தான் செய்யுது. ஆனா பெரிய நடிகனாயிடணும்ங்கற கனவு என்னைத் துரத்திக்கிட்டேதான் இருக்கு. அது என்னைக் காப்பாத்திடும் நிச்சயமா!'' என்கிறார் வீரா. கண்கள் முழுக்க சாதிக்கும் வெறி தளும்பி நிற்கிறது.

- மஞ்சு



04.05.2008 முதல் 10.05.2008 வரை

**மேஷம்:** வாக்குமேன்மை நிறைந்த மேஷ ராசிக்காரர்களே... குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. உல்லாசப் பயணம் போவீங்க. வெளிநாடுகளிலிருந்து நல்ல தகவல் வருமுங்க. நல்ல வேலை அமையுமுங்க. ராகு/கேது/சனி வழிபாடு செய்தால் நன்மை மேலும் அதிகரிக்குமுங்க.

*(நல்ல வேலை அமையப் போகுது. பொழைச்சுக்குங்க)*

**ரிஷபம்:** தெய்வ நம்பிக்கையில் அதிகம் நாட்டம் கொண்ட ரிஷப ராசிக்காரர்களே... மகான்களின் தரிசனம் கிட்டப் போகுதுங்க. சுப காரியப் பேச்சுகள் முடிவுக்கு வருமுங்க. உடல் ஆரோக்கியம் ஜோரா இருக்கும். பணக் கஷ்டம் தீருமுங்க. குரு/சனி வழிபாடு நற்பலனை அளிக்குமுங்க.

*(மகான்களிடம் நம்மைப் பற்றி கொஞ்சம் சொல்லுங்க.)*

உண்டுங்க. கல்வியில நல்ல மேன்மை கிட்டப் போகுதுங்க. கேட்டவுடனே கடன் கிடைக்கும். வேலையில் நல்ல பெயர் வாங்கப் போறீங்க. பணப் பற்றாக்குறை இருக்காதுங்க. ராகு/கேது/குரு/சனி வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(சேமிக்கறதுக்கு இது நல்ல டைம்னு நினைச்சுக்கோங்க.)*

**சிம்மம்:** போராட்டத்துக்குப் பெயர் போன சிம்ம ராசிக்காரர்களே... நினைக்கிற காரியங்கள் நடக்கப் போகுதுங்க. வெளிநாடு போகப் போறீங்க. பொன் பொருட்கள் சேர்க்கை கூடுமுங்க. பூர்வீகச் சொத்து பிரச்னைங்க தீருமுங்க. வியாபாரம் நல்லா சூடு பிடிக்கப் போகுது. சனி வழிபாடு நன்மையை அதிகரிக்கும்.

*(பாஸ்போர்ட்டைத் தேடி எடுத்து ரெடியா வைச்சுக்குங்க.)*

**கன்னி:** அன்புக்கு இனிய கன்னி ராசிக்காரர்களே...உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வீட்டை மாற்றப் போறீங்க.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மிதுனம்:** தளராத மனம் கொண்ட மிதுன ராசிக்காரர்களே... சுபகாரியங்கள் தடையில்லாம நடைபெறப் போகுது. வாக்குவாதங்கள் மட்டும் செய்யாதீங்க. வேலைப்பளு அதிகரிக்கும். அதே நேரத்துல உடல் ஆரோக்கியம் நல்லா இருக்குமுங்க. வீடு/மனை வாங்க நல்ல காலமுங்க.

*(சுப காரியம் நடக்கறப்ப சொல்லி விடுங்கப்பா.)*

**கடகம்:** கோபத்தை அடக்கியாளும் கடக ராசிக்காரர்களே... சுபச் செலவுகள் வழக்கு வெற்றியைத் தரப் போகுது. தொழில்துறை மாற்றம் வரப் போகுது. எதிர்பாராத செய்தி மகிழ்ச்சியைப் பெருக்கப் போகுது. ராகு/கேது வழிபாடு மேலும் நன்மையளிக்குமுங்கோ.

*(அந்தச் செய்தி என்னான்னு நமக்கும் சொல்லுங்க.)*

**துலாம்:** திறமையான துலாம் ராசிக்காரர்களே... புதிய வேலைவாய்ப்பு தேடி வரப் போகுதுங்க. புது வீட்டுக்கு குடித்தனம் போகப் போறீங்க. வீடு, மனை வாங்கப் போறீங்க. குடும்ப வாழ்க்கையில








இருந்த பிரச்னைகள் தீர்ந்து சந்தோஷம் பெருகப் போகுது. வியாபாரத்துல குறை இருக்காதுங்க. ராகு/கேது/குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(பழசையெல்லாம் மறந்துட்டு ஃப்ரெஷ்ஷா இருங்க.)*

**விருச்சிகம்:** எளிமையான விருச்சிக ராசிக்காரர்களே... தன யோகம் அடிக்கப் போகுதுங்க. பொருளாதாரத்துல நல்ல மேன்மை அடையப் போறீங்க. நீண்ட காலமாக அச்சுறுத்திக்கிட்டு இருந்த கடன் தொல்லையெல்லாம் தீரப் போகுது. புண்ணிய ஸ்தலம் போகப் போறீங்க. சனி வழிபாடு மேலும் நன்மையை அதிகரிக்குமுங்க.

*(கடனை அடைச்சிடுங்க. அப்பதான் நிம்மதியா இருக்க முடியும்)*

**தனுசு:** பழகுவதற்கு இனிய தனுச ராசிக்காரர்களே... நெருக்கமான கூட்டாளிங்க உங்கள விட்டு விலகிப் போய்டுவாங்க. கைப் பொருள் தவறிடும். ஜாக்கிரதையா இருங்க. வாக்கு வாதம் செய்யாதீங்க. வியாபாரத்துல நல்ல ஏற்றம் தெரியுமுங்க. புதிய தொழில் தொடங்கும்போது கவனம் தேவை. ராகு/கேது/குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(நல்ல ப்ரெண்ட்கிட்டே வாக்குவாதம் செய்யாதீங்க).*

**மகரம்:** பிரச்னைகளைக் கண்டுகலங்காத மகர ராசிக்காரர்களே... நீண்ட காலப் பிரச்னைகள் முடிவுக்கு வருமுங்க. வியாபாரம் சூடு பிடிக்கப் போகுது. வழக்குகள்ல வெற்றி காணப் போறீங்க. கல்வியில நல்ல மார்க் எடுப்பீங்க. ராகு/கேது/சனி/குரு வழிபாடு மேலும் நன்மையை அதிகரிக்கப் போகுதுங்க.

*(முதல் மார்க் வாங்குனா நமக்கும் மறக்காம 'ஸ்வீட்' கொடுங்க.)*

**கும்பம்:** தளராத மனம் கொண்ட கும்ப ராசிக்காரர்களே... இந்த வாரம் உற்சாகமாக காரியங்களில் செயல்படப் போறீங்க. பொன் பொருள்கள் வாங்கிக் குவிக்கப் போறீங்க. குடும்பத்துக்குள்ளே இருந்த பிரச்னை தீர்ந்து சந்தோஷமாக இருப்பீங்க. உடல் ஆரோக்கியம் எதிர்பார்த்தபடி இருக்கும்ங்க. சனி வழிபாடு மேலும் நன்மையை அதிகப்படுத்தும்.




*(டெய்லி 'வாக்' போவீங்க இல்ல...?)*

**மீனம்:** பொறுமைக்குப் பெயர் போன மீன ராசிக்காரர்களே... புதிய தொழில் தொடங்கப் போறீங்க. உத்தியோகத்துல பதவி உயர்வு தேடி வரப் போகுது. கல்வி கேள்வியில மேன்மை அடையப் போறீங்க. உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில இருக்கும். ராகு/கேது/ குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(உற்பத்தியைப் பெருக்கி விலைவாசிக்கு எதிரா போராடுங்கப்பா!)*

     

● எனக்கு வயது 50. இடது கையால் டபரா போன்ற பாத்திரங்களை எடுக்கும் போது கை வெடவெடவென நடுங்குகிறது. இதை உடனடியாக டாக்டரிடம் காட்ட வேண்டுமா? தானாக சரியாகிவிடுமா?

**- தங்கராசு, நாகர்கோவில்**

**நரம்பியல் நிபுணர் டாக்டர் நடராஜன்-**

இதில் இரண்டு வகைகள் உண்டு. சிலருக்குப் பாத்திரங்களை எடுக்கும்போது நடுங்கும். சர்க்கரையை ஸ்பூனில் எடுத்து ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொன்றுக்கு மாற்றும்போதுகூட கை நடுங்கலாம். 'ஒரு கை மட்டும் நடுங்குகிறதா? இரண்டு கைகளுமா? குடும்பத்திலேயே இதுபோன்று உண்டா?' போன்ற கேள்விகளுக்கான பதில்கள் முக்கியமானவை.

வயதாக ஆக இப்படி நடுக்கம் தோன்றுவதை Essential Tremor என்போம். சந்தேகமில்லாமல் இது நரம்பு தொடர்பான பாதிப்புதான். சில குறிப்பிட்ட நரம்புகளுக்கு அளவுக்கு மீறி வேலை கொடுப்பதனால் இப்படி நேரலாம். மருந்துகள் மூலம் இதைக் கட்டுப்படுத்த முடியும். மற்றபடி தானாக சரியாகிவிடாது. அதேசமயம் இதை சரி செய்தே ஆக வேண்டும் என்பது கட்டாயம் இல்லை. பல சீனியர்கள் இதை மனத்தளவில் ஏற்றுக்கொண்டு வாழ்கிறார்கள். இதை அப்படியே விட்டுவிட்டால் இதனால் வேறு ஏதாவது உடல் பாதிப்பு உண்டாகுமோ என்றெல்லாம் கவலைப்பட வேண்டாம். (ஆனால் மேலும் வயதாகும்போது நடுக்கங்களும் அதிகமாவது இயற்கை.)

# நடுக்கம்

இன்னொரு வகை நடுக்கம்தான் கவலைக்கும் கண்காணிப்புக்கும் உரியது. எந்தப் பொருளையும் கையில் எடுக்காதபோதே கைகளில் உண்டாகும் நடுக்கம் அது. பார்க்கின்ஸன் நோயின் வெளிப்பாடாக இது இருக்கலாம். தொடக்கத்தில் ஒரு கை நடுங்கும். பின்னர் இரண்டு கைகளும் நடுங்கலாம். உங்களுக்கு ஏற்படும் நடுக்கத்துக்கு மாறானது இது. அதாவது ஏதாவது பாத்திரத்தைப் பிடித்துக்கொள்ளும்போது நடுக்கம் குறையும். அதேசமயம் தொடர்ந்து கொஞ்ச நேரம் பிடித்துக்கொண்டிருந்தால் மீண்டும் நடுங்கும்.

இந்த இரண்டு வகை நடுக்கங்களையும் ஆரம்ப கட்டத்திலேயே கண்டுபிடிப்பது கொஞ்சம் கஷ்டம்தான். இரண்டு வகைகளும் தானாக சரியாகாது. பொதுவாக அறுபது வயதுக்கு மேல்தான் இவை உண்டாகும் என்றாலும் விதிவிலக்குகள் உண்டு.

நடுக்கத்துக்கான காரணம் அறியவும் தீர்வு பெறவும் டாக்டரை அணுகுவது நல்லது.''



● பொதுவாக அறுவை சிகிச்சை முடிந்து எவ்வளவு நேரம் கழித்து

# ப்ரிஸ்கிரிப்ஷன்



• டாக்டர் மனுலட்சுமி

## ஏன்?

மயக்கம் தெளிய வேண்டும்?

**- சரஸ்வதி, திருச்சி**

**மயக்க மருந்து நிபுணர் டாக்டர் மனு லட்சுமி:**

"அறுவை சிகிச்சை முடிந்தவுடனேயே முழு நினைவு வந்துவிடும் அளவில்தான் மயக்க மருந்து அளிக்கப்படும். அறுவை சிகிச்சை முடிந்தும் நினைவு வரவில்லை என்றால், மயக்க மருந்தின் விளைவுக்கு எதிரான மாற்று மருந்தைச் செலுத்துவோம்.

ஆனால் மயக்கம் தெளிந்த பிறகும் சிலருக்கு கண் இமைகளை மூடியே வைத்திருக்கத் தோன்றும். வேறு சிலருக்கு ஒருவித வாய்க்குமுறல், இலேசான தலை சுற்றல் போன்றவை இருக்கலாம். இவை தற்காலிகமானவையே.

## பிரிவுத் துயர்



நீ எனைப் பிரியும் தருணத்தின்
நினைவுகூட வலி தருகின்றது
கடைசி சந்திப்பாகிவிடுமோ என
உன் பார்வைகள் அச்சுறுத்தும்...
எந்நொடியிலும் விழ எத்தனிக்கும்
ஈரம் என் விழிகளின் ஓரம் தேங்கியபடி
நின்று துடிக்கும்.
உதிராத வார்த்தையொன்று
உதட்டினுள்ளே உறைந்து கிடக்கும்...
உனக்கான என் சொற்கள் எல்லாம்
மௌனத்தின் ஆழத்தில் அமிழ்ந்திருக்கும்...
அடக்க முடியாமல் கேட்கத் துடிக்கும்
காதல் மனதின் ஒரே கேள்வி
'எப்போது திரும்பி வருவாய் நீ?'

- உமா ஷக்தி

# இருக்க வேண்டிய இடம்!

ஆர்.லதா



"நம்ம பாப்பாவோட கும்மோணம் வீடு நல்ல வசதி. கொல்லைப் பக்கம் கொட்டில் இருக்கற அந்தக் காலத்து வீடு. வாங்கற பால் கழனித் தண்ணியாட்டம் வெடவெடன்னு இருக்கு. புள்ளைத்தாய்ச்சி பொண்ணு. அடுத்தது கொழந்தை பிறந்தா அதுக்கும் புகட்ட பசும் பால் வேணும். அதான் நல்ல கறவை பசுவா வாங்கலாம்னு... நல்லதா தோதுபட்டா சொல்லு நமச்சிவாயம்!'' என்றார் என் தாத்தாவிடம் மேட்டுத் தெரு பெருமாள் தாத்தா.

''பார்க்கலாம்ணே. விசாரிப்போம்!'' என்று பட்டுக்கொள்ளாமல் பதில் சொல்லி அனுப்பி வைத்தார் தாத்தா.

''நம்ம கிட்டத்தான் இப்ப கன்னு போட்ட தலையீத்துக் கிடேரியைக் கொடுக்கணும்னு எண்ணமிருக்கே. ஏற்கெனவே ரெண்டு மாடு கறக்குது. இதை நல்ல விலைக்குக் கொடுத்துடலாம். இப்ப வந்து கேட்ட பெருமாள் அத்தான் நல்ல பசையுள்ளவர். சொன்ன தொகையை டான்னு எண்ணி வச்சுட்டு, மாட்டை ஓட்டிட்டுப் போவார். ஏன் அவரை விட்டீங்க?'' என்று பாட்டி பிலு பிலு என்று பிடித்துக் கொண்டாள்.

''நம்ம காத்தானை வரச்சொல்லி இருக்கேன்'' என்றார் தாத்தா.

''யாரு, வெங்கிட்டு மவன் காத்தானா? அவன் வாய்ப்பட்டாவாச்சே. காசும் இழுபறி!''

''ஆனா மாட்டை நல்லா பார்த்துப்பான். கும்மோணத்துல எட்டு நாளானாலும் கட்டுத்தரியைவிட்டு அவுத்துக்கட்ட இடமும் இல்லை. மனுஷரும் கெடையாது டவுன்ல. பாவம் பசு. ஆனா, காத்தான் கிராமத்தான். தினமும் மேய்க்க ஓட்டிட்டுப் போவான்; குளிப்பாட்டுவான். புல் அறுத்துப் போடுவான்; கழுநீரும், புண்ணாக்கும் பார்த்துப் பார்த்து வைப்பான். குடும்பமே விழுந்து விழுந்து பாடுபடும். கண்ணுக்குள்ள வச்சு பார்த்துக்கும். முக்கியமா கால்நடைன்னா காலாற நடக்கணும். குளத்துல குளிக்கணும். நம்ம கருப்பு கிடேரிக்கு இதெல்லாம் கும்மோணத்துல கிடைக்குமா? அந்தப் பாவத்தை நாம செய்யணுமா?'' என்று தாத்தா கேட்க, கதவின் பின்னால் நின்றிருந்த பாட்டி கண்களில் நிறைவு ஆனந்தமாய் வழிந்தது. ●

# அறிவுக்கு ஒரு விருந்து!





எங்கிருந்து வருகுதுவோ... - ரா.கி. ரங்கராஜன், விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 2. விலை ரூ.55/-




தாம் படித்த விஷயங்கள், அறிந்த மனிதர்கள், கேட்ட சுவையான தகவல்களைக் கட்டுரைகளாக்கி, பொது அறிவுக்கு விருந்து படைத்துள்ளார் நூலாசிரியர். குட்டிக்கதைகள் மற்றும் நகைச்சுவை உணர்வுடன் சுவாரஸ்யமாக எழுதி வழங்கியிருக்கும் இவரின் அனுபவங்கள், வித்தியாசமானவை.

'முடியும் முடியும்' என்றே சிந்தியுங்கள் - கே.எஸ்.சுப்ரமணி, கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தியாகராய நகர், சென்னை -17. விலை ரூ.30/-

பிரபல வார இதழில் வெளிவந்து பாராட்டைப் பெற்ற கட்டுரைகளின் தொகுப்பு. 'முடியும்' என்று சிந்தித்து வெற்றிபெற்ற சாதனையாளர்களின் வெற்றி இரகசியங்கள், மன ஆற்றலை வளர்த்துக்கொள்ளும் பயிற்சி போன்ற பல பயன்தரும் பயிற்சி முறைகள் தரப் பட்டுள்ளன. மனத்தை வசியப்படுத்தி, விடாமுயற்சியுடன் தடைகளைச் சமாளித்து வாழ விரும்புவோருக்குத் தேவையான நூல்.

ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் திருமந்திர அருளுரை - ஐந்தாம் தந்திரம் - கி.நாகராசன், குருவருள், 7, காளியம்மன் கோவில் தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம். விலை ரூ.80/-




திருமூலர், திருமந்திரம் ஐந்தாம் தந்திரத்தில், சிவநெறி மற்றும் பொது ஒழுக்கம் பற்றிய சில செயல் முறைகளை வழங்கிய கருத்துகள் கொண்ட புத்தகம். சுவாமிகளால் உரைக்கப்பட்ட திருமந்திர அருளுரையில், சைவத்தின் வகைகள், புண்ணிய நாற்படிகள், சிவத்தை அடைவதற்குரிய நான்கு மார்க்கங்கள், சன்மார்க்கப் பிரிவுகள், உட்சமயங்கள் எளிய உவமைகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

மக்கள் அறிவியல் இலக்கியம் - நோக்கும் போக்கும் - முனைவர் உ.லோ. செந்தமிழ்க்கோதை, பாவை பப்ளிகேஷன்ஸ், 142, ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14. விலை ரூ.70/-

அறிவியல் நடை, அறிவியல் துறையின் முன்னேற்றத்தை விளக்கியுள்ளார் நூலாசிரியர். தொழில் புரட்சிகள், தொழில்நுட்ப முறைகள், மின்னாக்கத்துக்கு உள்ள பலவழிமுறைகள், அவற்றின் சாதக, பாதகங்கள், விண்வெளி ஆய்வில் நம் நாடு புரிந்த சாதனைகள் என பல தகவல்களைக் கொண்ட நூல்.

- மித்ரா

## ஜிலு ஜிலு தொடர்கதை - 5

# கால் கிலோ காதல் அரை கிலோ கனவு

**ப**த்மநாபனுக்கு போரடித்தது. அவன் ஒரு யோசனையுடன் வந்திருந்தான். பள்ளிக்கூடம் முடிந்ததும் ஒரு பத்து நிமிடம் வளர்மதி தன்னுடன், தான் கூப்பிடும் இடத்துக்கு வருவாளா? கொட்டகை இல்லை. கடற்கரை இல்லை. தோப்பில்லை. ஹோட்டல் இல்லை. கோயில், பூசாரி உட்பட யாரும் எப்போதும் போகிற வழக்கமில்லாத முத்துமாரி அம்மன் கோயில். தையூர் பண்ணையின் தோப்பை ஒட்டிய வாய்க்கால் வழியில் இருபதடி நடந்தால், அரசமரப் பிள்ளையார் ஒருவர் எதிர்ப்படுவார். ஒரு கும்பிடு போட்டுவிட்டு அப்படியே மேலும் முப்பதடி போனால், கீரைத் தோட்டங்கள் ஆரம்பிக்கும் வரிசையில் திருப்போரூர் பைபாஸ் சாலையில் செம்மண் புழுதி பூசிய சிறிய கோயில்.

ஊரில் வேறு பெரிய சைஸ் கோயில்கள் முளைக்க ஆரம்பித்தன. புதிய புதிய வழிபாட்டு முறைகள் தோற்றுவிக்கப் பட்டன. 'மட்டைத் தேங்காயைப் பாதி உரித்துக் கட்டு. நாற்பத்தியெட்டு நாளில் திருமணம் ஆகிவிடும். மஞ்சள் துணியில் பத்து ரூபாய் முடிந்து குளத்தில் வீசி விட்டுத் திரும்பிப் பாராமல் போய்ச் சேர். மஞ்சள் காமாலை இருந்த இடம் தெரியாமல் ஓடிவிடும்.'

தொடரத்தான் செய்கின்றன நம்பிக்கைகள். பிரியாணி, மட்டைத் தேங்காய், மஞ்சள் துணியில் முடிந்த பத்து ரூபாய் உள்ளிட்ட எந்த டிக்கெட் செலவும் இல்லாமல் பைபாஸ் முத்துமாரியம்மனின் அருள் இலவசமாகச் சுரந்து கொண்டிருப்பதைப் போலவே.

பத்மநாபனுக்கு முத்துமாரியம்மன் கோயில் மிகவும் பிடிக்கும். அங்கு கிடைக்கும் தனிமை மட்டுமல்ல காரணம். ஜிலுஜிலுவென்று எப்போதும் வீசும் அரசமரக் காற்று. என்ன தப்புக் காரியம் செய்தாலும் யார் கண்ணிலும் பட வாய்ப்பில்லை. முத்துமாரியம்மன் பொதுவில் பிள்ளைகளின் சில்லுண்டி விளையாட்டுகளைக் கண்டுகொள்வதில்லை என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது. பத்மநாபன் தனது முதல் திருட்டுப் பிடியை அங்கே வைத்துத்தான் இழுத்துப்



## பா.ராகவன்

பார்த்தான். தேர்வுகளுக்கான பிட்டுகளை அங்கு வைத்துத்தான் தயாரிப்பது வழக்கம். அம்மனின் அருள், தேர்வுக்கு மட்டுமல்லாமல் பிட்டுக்கும் அவசியமுண்டு.

எனவே வளர்மதியிடம் தான் பேச விரும்பிய விஷயத்தை அங்கு வைத்து தெய்வசாட்சியாகச் சொல்வதே சாலச் சிறந்தது என்று அவன் முடிவு செய்தான்.

விஷயம் சற்றுத் தீவிரமானதும்கூட. இந்த வயதில் அவனைத் தவிர வேறு யாராலும் அப்படிப்பட்ட தொலைநோக்கு மனப்பான்மையுடன் சிந்திக்கவும் இயலாது. செகண்ட் ரேங்க் வாங்கும் வளர்மதிக்கு அந்தத் தொலைநோக்கு அவசியம் பிடிக்கும். அவனை அவள் விரும்ப அதுவே ஒரு தொடக்கப் புள்ளியாக அமையக்கூடும். 'பைபாஸ் அம்மனே, இதற்கு ஏற்பாடு செய்து கொடு. உனக்கு ஐம்பது பைசா காணிக்கை இடுகிறேன்.'

இப்படி யோசித்த உடனே அவனுக்கு வேறொரு கவலையும் வந்துவிட்டது. ஐம்பது பைசாவைக் கண்டிப்பாக அம்மன் எடுத்துச் சென்று அரைமுழம் பூ வாங்கி வைத்துக்கொள்ளப் போவதில்லை. பூசாரி யாரும் வராத நான்கடி உயரமும் மூன்றடி நீளமும் கொண்ட சிறு கோவில். எப்போதும் பூட்டியே இருக்கும் கதவு. கம்பிக்குப் பின்னால் கால் கடுக்க நிற்கும் அம்மன், அந்த ஐம்பது பைசாவை என்ன செய்வாள்?

வீணாகக் கீழே அல்லவா கிடக்கப் போகிறது? வேண்டாம். வீணாக்குவது தவறு. ஆனால் கடவுளே, போடுவதாக வேண்டிக்கொண்டுவிட்டு இப்படிப்பால்



மாறினால் பிரச்னை வந்துவிடுமோ?

இவ்வாறு அவன் கோர்வையற்று யோசித்துக்கொண்டிருந்தபோது தமிழ் ஐயா, ''அழகு என்பது யாது?'' என்று பெருமாள்சாமியைப் பார்த்துக் கேட்டார்.

'அழகு என்பது வளர்மதி' என்று பத்மநாபன் தனக்குள் சொல்லிக் கொண்டான். ஒரு கணம் அவளைத் திரும்பிப் பார்க்கவும் செய்தான். படிக்கிற பெண்ணான வளர்மதி, தமிழ் ஐயாவையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

''என்னடே, கேக்கறேன்ல? சொல்லு. அழகு என்பது யாது?''

பெருமாள் சாமி திருட்டு விழி விழித்தபோது தமிழ் ஐயாவின் பார்வை பெண்கள் வரிசைக்குத் தாவியது.

''நீ சொல்லு வளரு. இப்பத்தானே சொன்னேன்?''

வளர்மதி எழுந்து நின்று திறந்துவிட்ட பம்ப் செட் போல் பொழிய ஆரம்பித்தாள். ''அழகு என்பது நிறத்திலோ மூக்குக் கண்ணாடியிலோ கழுத்துச் சுருக்கிலோ பட்டுடையிலோ பிற அணிகலன்களிலோ அமைவது அன்று. மூளை, இதயம், நுரையீரல், கல்லீரல் போன்ற பேருறுப்புகள் செழிய நிலையில் நின்று ஒழுங்கு பெறக் கடனாற்றலால், நரம்புக்கட்டினின்றும் தடைபடாக் குருதியோட்டத்தினின்றும் முகிழ்க்கும் தசையிடை அரும்புவதே அழகாம்...''

''போடு, போடு. என்னாம்மா படிச்சிருக்கா பாரு. எதுக்குடே நீயெல்லாம் பள்ளியோடத்துக்கு வர்ற? பன்னி மேய்க்கப் போவுறதுதானே?''

தமிழ் ஐயா கையிலிருந்த சாக்பீஸைப் பாதி உடைத்து, பெருமாள் சாமியின் மீது வீசியெறிந்தார்.

வகுப்பறை சிரித்தது.

மணி என்ன இருக்கும் என்று பத்மநாபன் யோசித்தான். வகுப்பு இப்போது தான் ஆரம்பித்தது போலவும், தொடங்கி இரண்டு நாள் ஆகிவிட்டது போலவும் இருவிதமான உணர்வுகள் ஒரே சமயத்தில் தோன்றின. ஒரு நாளின் கடைசி வகுப்பு. சீக்கிரம் முடிந்துவிட்டால் நன்று. வளர்மதியிடம் ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். ஒரே வார்த்தைதான். அதனைப் பின்பற்றி அவள் தன்னுடன் பைபாஸ் முத்துமாரியம்மன் கோயிலுக்கு வந்துவிட வேண்டும். நீளக் கதைகள், விளக்கங்கள் உதவாது. என்ன சொல்லலாம்?

அவன் தீவிரமாக சொற்களைத் தேடிக் கொண்டிருந்த வேளையில் 'உய்ய்ய்' என்றொரு சத்தம் கேட்டது.

பெருமாள் சாமிதான் அப்படி உதட்டைக் குவித்துக் கத்துவான். அது ஒரு சமிக்ஞை. ஒரு குறும்புக்கான முன்னெச்சரிக்கை. அனைவருக்கும் தெரியும்.

பத்மநாபன் தன்னிச்சையாகத் திரும்பிப் பார்க்க, பெருமாள் சாமி தன்னிரு கைகளையும் குவித்து ஒரு பேப்பர் ராக்கெட்டை இடையில் வைத்துக் குறி பார்த்துக்கொண்டிருந்தான்.

தமிழ் ஐயாவுக்கா?

ஒரு கணம் அவன் கண்ணிமைத்துத் திறந்தபோது பெருமாள் சாமியின் ராக்கெட் ஜிவ்வென்று பறந்து சென்று வளர்மதியின் காதோரம் சொருகி நின்றது.

வளர்மதி திடுக்கிட்டுத் திரும்பினாள். முகத்தில் அதிர்ச்சி அப்பட்டமாகத் தெரிந்

## திருப்தி பலம்!

''இதுவரை புது முகங்கள்தான் என் டார்கெட்டா இருந்தன. ஆனா, இப்ப 'சிவமயம்' கதைக்கு பிரகாஷ்ராஜும் ஷாமும்தான் சரியா வந்தாங்க. அதான் அவங்களைத் தேடி உடனே ஓடிட்டேன். ஷாமுக்கு 'சிவமயம்' சிலிர்க்க வைக்கற ஆரம்பமா இருக்கும்'' என்று இயக்குநர் சஞ்சய்ராம் முடிக்கும் முன்பே, ஷாம் ஆரம்பித்தார். ''பல படங்கள் பண்ணிட்டேன். ஆனா, இந்தப் படத்துல ஒரு ஆத்ம திருப்தி இருந்துச்சு. ஒரே பயம், பிரகாஷ்ராஜ் சார்தான். அவர்கிட்டயும் நல்ல பேர் வாங்குவேண்ணு நம்பிக்கை இருக்கு'' என்கிறார் ஷாம்.

- வாணி

தது.

''டேய்... ஹுசு...'' என்றாள் பெருமாளைப் பார்த்து.

''என்னது? என்னது?'' என்றார் தமிழ் ஐயா.

''ஒன்னுமில்ல சார்'' என்று ராக்கெட்டை எடுத்து பெஞ்சுக்குக் கீழே போட்டாள். மீண்டும் பாடத்தில் ஆழ்ந்தாள்.

பத்மநாபனுக்கு ரத்தம் கொதிக்கத் தொடங்கியது. இது அத்துமீறல். சந்தேகமில்லாமல் அத்துமீறல். வகுப்பில் ராக்கெட் விடுவது தொன்றுதொட்டு வழக்கத்தில் இருப்பதுதான். எனினும், வளர்மதியின் மீது அவன் அதனை ஏவியது கண்டிக்கப்பட வேண்டிய செயல். அரசல் புரசலாக முழு வகுப்புக்கும் வளர்மீது அவனுக்குள்ள காதல் தெரியும். இனி அவள் குடுமியின் ஆள்.



பெருமாள் சாமி எப்படி இதனை மீறுவான்? அவனது ஆளான நைன்த் சி மணிமேகலையின்மீது பத்மநாபன் ராக்கெட் விட்டால் சும்மா இருப்பானா?

உக்கிரமாக அவன் எழுந்து நின்றான். பெருமாள் சாமியை நோக்கி அடியெடுத்து வைத்தான்.

முதல் பெஞ்ச் தவிர அனைவரும் இதைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். தமிழ் ஐயா, போர்டில் திரு.வி.க.வின் தமிழுக்குப் பதம் பிரித்துப் பொருள் விளக்கம் எழுதிக்கொண்டிருந்தபடியால் அவர் கவனிக்கவில்லை.

பத்மநாபன் மெல்ல நடந்து பெருமாள் சாமியின் அருகே போய் நின்றான்.

பெருமாள் முறைத்தான். 'என்னா?'

'ஏன் அவமேல ராக்கெட் விட்ட?'

'என் இஷ்டம்.'

'தபார்! அவ என் ஆளு.'

'தூத்தேரி' என்றான். பத்மநாபனுக்கு அது ஒரு கெட்ட வார்த்தை என்று தோன்றியது. ஒரு கணம்கூடத் தாமதிக்காமல் பெருமாள் சாமியின் கன்னத்தில் பளாரென்று ஓர் அறை விட்டான். பற்றிக் கொண்டுவிட்டது.

முழு வகுப்பும் திரும்பிப் பார்க்க, இருவரும் கட்டிப்புரண்டு அடித்துக்கொண்டதன் காரணம் புரியாமல் தமிழ் ஐயா பிரமித்து நின்றிருந்தார். தன் நிலை உணர்ந்த சமயம், ''டேய், டேய், எந்திரிங்கடா டேய்... என்னடா ஆச்சு?'' என்று அருகே ஓடி வந்து இருவர் மீதும் தலா இரண்டு பிரம்படிகளை வைக்க, அந்தச் சண்டை அவ்வாறாக நிறுத்தப்பட்டது.

பள்ளி முடிந்துவிட்டதற்கான மணி அடித்தது. பத்மநாபன் தன் முறைப்பு குறையாமல் தனது பையைத் தூக்கித் தோளில் போட்டுக்கொண்டான்.

வளர்மதி தன்னை கவனிக்கிறாளா என்று பார்த்தான். இல்லை. அவள் கிளம்பும் மும்முரத்தில் இருக்க, வேகமாக அவளருகே சென்றான்.

வகுப்பை விட்டு வெளியே சென்ற தமிழ் ஐயா, என்ன நினைத்தாரோ இடுமென்று உள்ளே திரும்பி வந்து, ''டேய், குடுமி, நீயும் அவனும் ஸ்டாஃப் ரூமுக்கு வாங்க'' என்று சொல்லிவிட்டு மீண்டும் வெளியேறினார்.

பத்மநாபன் அதிர்ச்சியடைந்தான். பைபாஸ் முத்துமாரியம்மன் இப்படிக் கடைசி வினாடியில் கைவிடுவாள் என்று அவன் எதிர்பார்த்திருக்கவில்லை.

**(தொடரும்)**

# புஷ்பவனம் குப்புசாமி

# காதல் சொல்லும் பொய்!

**கா**தல் மற்றும் போர் இவை இரண்டுக்காகப் பொய் சொல்லலாம்னு ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. இந்தப் பூமியிலே காதலுக்காகப் போரே நடந்திருக்கிறது. நாம ஒரு பொய்தானே சொல்லப் போறோம். சொன்னா என்னன்னு தோணுச்சு. கென்னடிங்கிற என் நண்பரை விட்டுச் சொல்லச் சொன்னேன். 'குப்புசாமி லாரிக்குக் குறுக்கே விழுந்துட்டான். கால்ல அடிபட்டுடுச்சு. ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்கோம்'னு ஃபோன் பண்ணி அவன் சொன்னான். எந்த ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்கிங்கனு கேட்டாங்க. 'அதெல்லாம் சொல்ல வேண்டாம்னு சொல்லிட்டான். எங்களுக்கு மனசு கேக்கலை. அதனால, உங்களுக்குச் சொல்றோம்'னான். பதறிப் போய்ட்டாங்க. அவங்க சித்தப்பாவைக் கூட்டிக்கிட்டு வந்தாங்க. நான் பதுங்கியிருந்து கவனித்தேன். கண்ணுல தண்ணி பொலபொலன்னு ஊத்துது. அழுதுக்கிட்டே போனாங்க. அன்றைக்கு 'பந்த்' நடக்கிறது. எப்படி லாரி ஓடும்?!

புஷ்பவனத்துக்குப் பக்கத்துல நடந்த கச்சேரிக்குப் போயிருந்தோம். கச்சேரி முடிந்த பின்னாலே எனக்கு மரியாதை செய்ய மாலை போட்டார்கள். இவங்களுக்கு மாலை போட வந்தபோது, அதை நான் வாங்கி இவங்களுக்குப் போட்டுவிட்டேன். அப்படி மாலை போடும்போது பக்கவாத்தியக்காரர்கள் கல்யாண மேளம் வாசித்தார்கள். அது என்னுடைய ஏற்பாடுதான். உடனே கோவிச்சுக்கிட்டாங்க. அது அவங்களாகவே வாசிச்சிட்டாங்கன்னு சொல்லி சமாதானம் செய்தேன். மாடு அசை போட்

டுக்கொண்டே இருப்பதுபோல எப்பவும் அவங்க நினைவாகவே இருந்தேன்.

ஆவாரம் பூவழகி!
ஆசையுள்ள அத்த மவளே!
ஆசையெல்லாம் உன் மேலத்தான்
தில்லாலேலே லேலோ! - போடு
தன்னானானே னானே!

மச்சு ஊட்டுத் திண்ணையில!
மயிலு நானு உறங்கயிலே!
மனசெல்லாம் உம்மேலத்தான்
தில்லாலேலே லேலோ - போடு
தன்னானானே னானே!

தமிழிசையை வளர்க்க வேண்டும் என்கிற எதிர்பார்ப்பு எங்களுக்கு எப்பவும் இருந்துகொண்டிருந்தது. 'எங்களுக்கு எந்தத் தொகையும் வேண்டாம். பக்க வாத்தியக்காரர்களுக்கு மட்டும் கொடுங்கள்' என்று சொல்லி திருவையாற்றுக்குப் பாடச் சென்றிருந்தோம். எங்களுக்கு அங்கே நேர்ந்த கொடுமைகளைக் கண்டு இனிமேல் இலவசமாகக் கச்சேரி செய்யக் கூடாது என்று முடிவு செய்தோம்.

அவங்க வீட்ல அவங்களுக்காகப் பார்த்திருந்த மாப்பிள்ளை வீட்டார்கள் கொலுசு போட்டிருந்தார்கள். அதை எப்படியாவது அவங்க கால்களிலிருந்து கழட்டி விட வேண்டும் என்று திட்டம் போட்டேன். என்னுடைய பரிசாக நான் ஒரு செட் கொலுசு வாங்கி வைத்துக்கொண்டேன். ஒரு கட்டிங் பிளையரும் வைத்துக் கொண்டேன். மேல் மருவத்தூர் கோயிலுக்குப் போய் வரலாம் என்று சொல்லி பைக்கில் அழைத்துச் சென்றேன். பின் சீட்டில் முனையில் உட்கார்ந்து வந்தாங்க. ஒரு போலீஸ்காரர் சந்தேகப்பட்டு எங்களையே துரத்திக்கிட்டு வந்தார். யாரோ திருட்டுப் பயல் பெண்ணைக் கடத்திக்கொண்டு போறான்னு பார்க்கறாங்க. கொஞ்சம் ஒட்டி உட்கார்ந்தா என்னன்னு கெஞ்சவேண்டிய தாப் போச்சு. கோயில்ல வச்சுப் பிடிவாதமா அந்தக் கொலுசை வெட்டியெடுத்து உண்டியல்ல போட்டுட்டு, என்னுடைய கொலுசை மாட்டிவிட்டேன். வீட்டுக்குப் போன பிறகு அந்தக் கொலுசைக் கழட்டி வைச்சுட்டாங்க போல. என்ன செஞ்சாலும் இந்தப் பொண்ணு என்னைப் புரிஞ்சுக்க மாட்டேன்கிறதே என்று கவலை வந்தது. சோறு தண்ணி பிடிக்கலை. தூக்கம் பிடிக்கலை. பித்துப் பிடிச்சாப்பல இருந்தது.

ஓடுகிற ஓட்டத்திலே! ஓலப்பொட்டி
கக்கத்திலே!
பாடுகிற தெம்மாங்குல என்னாச
மச்சான்! - நான்
பறி கொடுத்தேன் என் மனச என்னாச
மச்சான்!

நான் பண்ணுகிற இந்தச் சேட்டைகளையெல்லாம் தெரிந்து கொண்டு என் அப்பா என்னை ஊருக்கே அழைத்துக்கொண்டு போனார். கிட்டத்தட்ட சிறை வாசம் போலப் பத்து நாட்கள்





வெளியிலேயே விட வில்லை. அந்தப் பத்து நாட் களில் நான் இல்லாத குறையை இவங்க உணர்ந்திருக்காங்க. ரொம்ப நாளா மழையில்லாம பூமி காஞ்சதுனா பண்டிகை சாற்ற வேண்டும்னு ஊர்ல பெரிய மனுஷங்களுக்குத் தோணும் பாருங்க அந்த மாதிரி, என்னைக் காணாத ஏக்கத்திலே தேவதைக்கு மனசுக்குள்ள சின்னதா ஒரு பூப் பூத்திருக்கிறது.

*'நித்திரையும் புடிக்கல வெத்தலையும்*
*செவக்கல*
*சத்தியமா சொல்லுறேன்டி கையும்*
*காலும் ஓடல!*
*கெழக்கப் போற நெனப்புல! வடக்கப்*
*போயி வெறுப்புல*
*கிறுக்குப் போல அலையுறேன்டி!*
*கிறுகிறுப்பு அடங்கல!*
*முத்திப் போனா பிச்சுக்குவேன்டி! -*
*என்னப்*
*பத்திரமாத் தைச்சுக்கவேன்டி!*

**(அடுத்தவாரம் அனிதா குப்புசாமி)**



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2008

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!

**முதல் பரிசு - ரூ.10,000/-**
**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**
**மூன்றாம் பரிசு - ரூ.5000/-**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.

**விதிமுறைகள் :**

★ கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது. சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.

★ அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.

★ படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால், அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.

★ முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

★ தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

★ போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.

★ பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

★ முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2008'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 032.**

❋ **கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 16.**

❋ **போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் வெளியாகும்.**

**படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.**

**- ஆசிரியர்**

# மயக்கும் மணிமாலை... கலக்கல்

மதியம் ஒரு மணிக்கு... கொளுத்தும் வெயிலில் சென்னையின் கல்லூரி குல்ஃபி பேபிகள் என்ன பண்ணுவார்கள்? ஏ.ஸி., ஏர்கூலரை ஆன் பண்ணி வி.ஸி.டியில் படம் பார்ப்பார்கள். கம்ப்யூட்டரில் சாட் செய்வார்கள், லைஃப் ஸ்டைல், வெஸ்ட் சைடுக்குப் படையாகத் திரண்டு, கொத்தாக பட்டியாலா சல்வார்களும், குர்தீஸாக ட்ரையல் ரூமுக்கு எடுத்துச் சென்று 'ஆஸம்', 'வாவ்', 'ஹாப்பனிங் கலர் மேன்...' என ஆர்ப்பரிப்பார்கள். இஸ்பஹானி சென்டரில் கேக் ஷாப், சிட்டி சென்டரில் ஃபுட் கோர்ட் என அப்பா - அம்மா பணத்தைக் கூலாக காலி செய்வார்கள்.

ஆனால், பெசன்ட் நகர் ஸ்பென்சர் அருகே நாம் பார்த்த காட்சி வேறு. 'ட்ரை திஸ்யா, ஹேய் லுக் அட் திஸ், ஸ்டன்னிங், இந்த ப்ளு பீட்ஸ் உன் ட்ரஸ்ஸுக்கு மாட்ச்டா, ருத்ராட்ச் டிஸைன் கூல்...' என ஏரியாவே ஜில்லென்றிருந்தது.

எம்.ஓ.பி. வைஷ்ணவா கல்லூரிப் பெண்கள் குருத்தி மாலைகளை ரகளையாக பேரம் பேசி வாங்கிக்கொண்டிருந்த காட்சி வெயிலுக்கு இதம்!

பி.எஸ்ஸி எலக்ட்ரானிக் மீடியா மாணவிகளான பூஜா, பார்வதி, வைஷாலியின் அதிரடி ஷாப்பிங்கில் நாமும் கலந்துகொண்டோம். கலர் கலராக மணி மாலைகள்... காதுக்குத் தொங்கட்டான்கள்... கால்களுக்கு ஒத்தையாகப் போடும் பாசிமணி கொலுசுகள், கைகளுக்கு பீட்ஸ் வளையல்கள் என ஏராளம்! பவர் ட்ரஸ்ஸை, புடைவைகளை எடுத்துக்கொண்டு மாட்ச் தேடி வியர்வை நதியில் குளித்திருந்தனர். ஆனால், முகத்தில் களைப்பு, அலுப்பு மட்டும் மிஸ்ஸிங்!

மாணவிகள் சூழ்ந்திருக்கும் தெருவோரக் கடையை நடத்தி வரும் தம்பதிகளான ராஜேந்திரன், மல்லிகாவிடம் பேச்சு கொடுத்தோம்.



''எங்களுக்கு மதுர பக்கமுங்கோ. எங்க ஒறவுக்காரரு இந்த மணிமாலை பத்தி சொல்லிக் கொடுக்க, இத ஆரம்பிச்சுக் கிட்டேன். நல்லாப் போவுதுங்கோ... இந்த பீட்ஸ், மணி வாங்க டில்லி போயி வேற ரெயில் பிடிச்சு பதினொராவது டேசன்ல எறங்கோணும். மலைப் பிரதேசம். சின்ன ஊர். செகந்திராபாத்துனு பேரு(!) இப்ப ஆட்டோ கெடைக்குது. முன்னே ஒட்டக சவாரி. அஞ்சு ரூபா கொடுத்து போவோம். பெரிய பெரிய மூட்டை தூக்கிட்டு வருவோம். ஆனா, ரெயில்லயும் போலீசு இம்சைதாங்க... அங்ஙன அங்ஙன பணத்த வெட்டி நாங்க லாபம் பாக்கறது ரொம்பவே கம்மிங்க!''

''பொறக்கற கொளந்தைக்குப் போடறதுதானுங்கோ 'பால்மணி'. இதப் போட்டா கக்காது. 'படிகம்' இருக்கு. சூட்டுக்கு (ஹீட்) போடணும். நைட்டானா தண்ணில போடணும். காலைல எடுத்துப் போட்டா சும்மா குளுகுளுனு இருக்கும். எங்கிட்டே ஒன்தி மாலை, கல்லு இருக்கு.

# மாணவிகள்!

போட்டா மஞ்சக்காமால வராது... லாங் செயின் மால பொண்ணுங்க விரும்பிப் போட்டுப்பாங்க. இப்ப கல்லூரி லீவு. லீவு விட்டாதாங்க எங்களுக்கு யாபாரமே... அதுங்களே புச்சா ஐடியா கொடுத்து மால கட்டச் சொல்லும். அது இட்டாயிடும்... எங்ககிட்டே சரத்குமார்சார், விக்ரம்சார்னு பலர் வாங்குவாங்க. டீ.வி ஸ்டாருங்கோ வருவாங்க...''

''ஹேய் பாரு... இந்த மோவ் கலர் எடுத்துக்கோடா''

''வைஷீ... இது ஷைனிங்யா... ஐ டோன்ட் வான்ட்''

## உடையழகு... நடையழகு...

என எம்.ஒ.பி. பெண்கள் பீட்டர் பெண்களாகக் கூச்சலிட்டு, ஏரியாவைக் கலக்கிக் கொண்டிருந்தார்கள்.

கடைசியாக, ஒருவழியாக செலக்ட் பண்ணி 150 ரூபாய் மாலையை, தடாலடியாக 35 ரூபாய்க்கு (அடி ஆத்தி!) பேரம் பேசி வாங்கிய 'தில்' கொஞ்சம் டூமச்!

- லதா சேகர்



## நீங்கள் கேட்டவை - தராசு

# 'மிஸ்' கூவாகம் பட்டம் தேவைதானா?

● கே. தெய்வசிகாமணி,
சென்னை - 5.

? தில்லையாடி வள்ளியம்மையை இழிவுபடுத்தும்விதத்தில் 'குருவி' படத்தில் ஒரு குத்துப்பாட்டு இடம்பெற்றுள்ளது பற்றி...?

! ராதா, சீதா என்று ஏதோ ஒரு பெண்ணின் பெயரை ஆபாசமாக்கியபோதே ஆட்சேபித்து கத்தரித்திருக்க வேண்டும். அப்போது கை தட்டி ரசித்தோம். குச்சி கிடைத்த குரங்கு, தலையிலேயே உட்கார்ந்து குத்தும் என்பது வழக்குமொழி.



★ உவகை தரும் உண்மை!



★ அபத்த அறிக்கை!

● திருச்சிற்றம்பலம் சுரேஷ்,
திருக்கண்டேஸ்வரம் ★

? மிஸ் கூவாகம் பட்டம் தேவையா?

! சமூகத்தால் ஒதுக்கப்படுவோர், தங்களை அடையாளப்படுத்திக்கொள்ள முயற்சி செய்வது இயல்பான விஷயம். அதை கௌரவமாகச் செய்து சமூகத்தின் மதிப்பில் உயர அவர்களுக்கு வழிகாட்டுவது அவசியம். ஆமோதிப்பது மட்டும் போதாது.

● கே. கே. வெங்கடேசன்,
சென்னை - 37.

? ஐ.பி.எல். போட்டிக்கு ஆதரவு எப்படி இருக்கிறது...?

! கிரிக்கெட் ஆட்டத்துக்கு ஆதரவு அமோகம். கவர்ச்சி ஆட்டம் - பாட்டத்துக்கு எதிர்ப்பும் கணிசம். பின்னது இல்லாமல் முன்னதைப் பெற முடியாமல் போனது வருத்தம்.

● ப. இராம் முருகன், சிவகங்கை.

? நெற்றிக்கண் சிவனையும் வேல் பிடித்த முருகனையும் நம்பாமல், பாதுகாப்புக்கு எட்டு கறுப்புப் பூனைகளுடன் நடமாடுகிறார் இராம. கோபாலன் என்கிறாரே தா. பாண்டியன்...!

! இறைவன் எப்போதுமே நமது முயற்சிகளுக்குத்தான் துணை நிற்பாரே தவிர, எல்லாவற்றையும் அவரே நிறைவேற்றித் தந்துவிட மாட்டார் என்பதைப் புரிந்துகொண்டால், இதுபோன்ற அபத்த அறிக்கைகள் வெளிவரமாட்டா!

● கச்சனம் எஸ். இராதாகிருஷ்ணன்,

திருச்சி.

? 'எனது கணவர் உயிரோடிருந்திருந்தால் ஒகேனக்கல் குடிநீர்த் திட்டத்தில் கர்நாடகா நுழைந்திருக்காது' என்கிறாரே வீரப்பனின் மனைவி முத்துலெட்சுமி!

! மலிவான முத்துக்களை உதிர்த்து வரும் முத்துலெட்சுமி, முதல்தர அரசியல் வாதியாக உருமாறி வருகிறார்!

★ கனவு மட்டும்...

● எம். ராஜேந்திரன், வால்குடி.

? 'ரஜினிக்கு ஜோடியாக நடிக்க கடவுளை வேண்டுகிறேன்' என்று நடிகை சினேகா சொல்வது பற்றி...?

! வேண்டுதல் மட்டும் போதாது. கடவுளின் முடிவை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவமும் வேண்டும்.

● எம். பாஸ்கர், திண்டுக்கல் ❑

? இரண்டு ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசி கொடுப்பது 'சாத்தியம்' என்று சர்டிஃபிகேட் கொடுத்த ப. சிதம்பரம், நெல் கொள்முதல் விலையை உயர்த்தி விட்டு, அரிசி விலையைக் குறைக்க எனக்குத் தெரியாது என்கிறாரே!



★ ஒப்புக்கொண்ட தோல்வி!

! வரிப்பணத்தில் அரசு மானியங்களை அதிகரித்து, கிலோ இரண்டு ரூபாய்க்கு அரிசி ரேஷனில் வழங்கியது சுலப சாத்தியம்தான். பொது மார்க்கெட்டில் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதுதான் கஷ்டம். இதில் ப. சி. அடைந்திருப்பது படுதோல்வியே. அதைத்தான் ஒப்புக் கொள்கிறார்.

● வசீகரன்,

சென்னை - 18.

? 75 கோடி வறுமையாளர்களை வைத்துக்கொண்டு, இந்தியா வல்லரசாக விரும்புவது வேடிக்கையாக இல்லை!

! இல்லை! வேடிக்கை அல்ல; சவால். அந்த 75 கோடி பேரும் இந்நாட்டின் வளமாகக் கருதப்பட்டு, முறையாகப் பயன்படுத்தப்பட்டால் வெகு சுலபத்தில் வல்லரசாகி விடலாம்.



★ மலிவான முத்துக்கள்!

● இரா. இராமமூர்த்தி, சிதம்பரம்.

? மதுரைக்கு அருகில் உத்தமபுரத்தில் தலித்துகளுக்கு எதிராக, உயர்ந்த மதில் சுவர் எழுப்பியுள்ளார்களே - அதுவும் அம்பேத்கர் பிறந்த நாளில்...!

! சட்டபூர்வமான நடவடிக்கை அவசியம்தான். ஆனால், அதிலிருந்து நழுவ வாய்ப்பு உண்டு. எனவே, இதுபோன்ற சமுதாய அநீதிகள் இந்நாளில் மீடியாவில் அம்பலத்துக்கு வந்து, மனச்சாட்சிகளைத் தட்டி எழுப்புவது மகிழ்ச்சிக்குரியது. அதிகப் பலன் தரும்.

❑ ரூ. 100 பரிசு பெறுபவர் :

எம். பாஸ்கர்,
திண்டுக்கல்.

★ ரூ. 50 பரிசு பெறுபவர் :

திருச்சிற்றம்பலம் சுரேஷ்,
திருக்கண்டேஸ்வரம்.

● பழ கவிதா சிவமணி,

புன்செய்ப்புளியம்பட்டி.

? எவையெல்லாமோ இலவசமாக வழங்கும் அரசினால், கல்வியை மட்டும் இலவசமாகத் தர முடியவில்லையே?

! கல்வி இலவசம், பாடப் புத்தகம் இலவசம்; பஸ் பாஸ் இலவசம் என்று நிறையவே இருக்கின்றன. தரமும் கவனிப்பும்தான் அந்த இலவசத்துக்குள் அடங்குவதில்லை! அதனால் 'டியூஷன்' பணம் குவிகிறது!

★ தவறு நம்மிடம்!



● வி. விஜய்,

சென்னை - 4.

? 'எம்.பி.க்கள் தொகுதி மேம்பாட்டு நிதியை உடனடியாக ரத்து செய்ய வேண்டும்' என்று மக்களவைத் தலைவர் சோம்நாத் சாட்டர்ஜி சொல்லியிருப்பது வரவேற்கத்தக்கதா?

! மக்கள் வரவேற்பார்கள். எம்.பி.க்கள் வரவேற்க மாட்டார்கள். காரியம் நிறைவேறாவிட்டாலும் அரசியல் உலகில் ஓர் உண்மை பேசப்பட்டதை வரவேற்று மகிழலாம்.

● வி.எஸ். கீர்த்தனா, ஈரோடு - 11.

? ஸ்ரீ ராமரையும் ஆஞ்சநேயரையும் இழிவுபடுத்தும்விதமாக போஸ்டர்கள் அடித்து, 'வணக்கம்மா' பூஜையின்போது ஒட்டப்பட்டது வேதனை அளிக்கிறதே!

! ஆமாம். போஸ்டர் தயாரித்து ஒட்டியவர்கள், தங்களைத் தாங்களே இப்படி இழிவுபடுத்திக்கொண்டதைக் காண ரொம்ப வேதனையாகத்தான் இருக்கிறது.

● ச. நாகரத்தினம், திருப்பூர்.

? நோய் தடுக்கும் மருந்து நான்கு குழந்தைகளைப் பலிவாங்கியுள்ளது அதிர்ச்சியுடன் அச்சத்தையும் ஏற்படுத்துவது குறித்து...?

! உயிர் காக்கும் கடமையில்கூட கவனக்குறைவும் அலட்சியப் போக்கும் நிலவுவது கோபத்தையும் சேர்த்தே ஏற்படுத்துகிறது. விசாரணை விரைவுபடுத்தப்பட வேண்டும். தண்டனை அறிவிக்கப்பட வேண்டும். இல்லையெனில், இத்தகைய கொடுமைகள் அதிகரிக்கும்.

# கோபம்!

கல்யாணி பாலு

"அத்தே! மாமாவை ஏன் இப்படிச் சத்தம் போடறீங்க! அவர் ஞாபகமறதியா வச்சுட்டதாத்தானே சொல்றார்!"

"நீதான் உன் மாமனாரை மெச்சிக்கணும்!"

எனக்கு என் மனைவியும், அம்மாவும் பேசிக்கொண்டது தெளிவாகக் கேட்டது. அப்பாவுக்குக் கேட்காமலா இருக்கும்?

அம்மா உடம்புக்கு ஏதாவது என்றால் அப்பா பதறுவதும், வெளியே போன அப்பா வரத் தாமதமானால், அம்மா வாசலுக்கும் கொல்லைக்குமாய் உலாத்துவதும் எங்களுக்குத் தெரிந்த விஷயம்.

அம்மாவுக்கு உடம்பு முடியாமல் போனதில் இருந்தே அப்பாவிடம் அடிக்கடி கோபமாகத்தான் பேசுகிறாள். தேவையில்லாமல் குற்றம் கண்டுபிடிக்கிறாள்!

ஒரு நாள் அம்மாவிடம் இதைப்பற்றி கேட்டே விட்டேன்.

"நானும் மனுஷிதானேடா!" என்றாள் அம்மா. "இத்தனை நாளா அடக்கி அடக்கி வைச்ச கோபமெல்லாம், இப்போ உடம்பு முடியாதபோ சேர்ந்து இரண்டு வருது... அது உங்கப்பாவுக்குப் புரிந்த அளவு உனக்கு புரியலியேன்னுதான் ஆச்சரியமாயிருக்கு!"

திகைப்புடன் கொஞ்சம் சந்தோஷமும் ஏற்பட்டது எனக்கு.

# முதல் சம்பளம்!

அ.சுஹைரல் ரஹ்மான்

முதல் சம்பளம். சுளையாக பத்தாயிரம் ரூபாய். வீட்டில் ஐயாயிரம்தான் என்று சொல்லியிருந்தான். கவரிலிருந்து பணத்தை எடுத்தவன், இரண்டு தனித் தனி கவர்களில் ஐயாயிரம் என்று பிரித்து வைத்துக்கொண்டான்.

வீட்டுக்குச் சென்றவன், ஒரு கவரை எடுத்து அம்மாவிடம் கொடுத்தான். "ஏம்பா, என்கிட்டே தர்றே? போய் உன் மனைவி கையில கொடு! இந்த வீட்டைப் பொறுப்பா கவனிக்கப் போறது அவதானே?"

மனைவியிடம் போய், கவரை நீட்டினான். "என்னங்க நீங்க... வீட்ல உங்கம்மா பெரியவங்க இருக்கும்போது, என்னிடம் போய் கவரைக் குடுக்கறீங்க? போய், அவங்க கையில கொடுத்து ஆசீர்வாதம் வாங்குங்க!"

'சே! இந்தப் பெண்களையே புரிந்துகொள்ள முடியவில்லையே?' என்று மனத்துக்குள் நொந்து போனான் அவன்.

## மின்னல் கதைகள்

# இயக்கம்

இன்னொரு பழிவாங்கல் கதைதான். ஆனால் சொன்னவிதம், பசி நேரத்தில் சுடச் சுட பரிமாறப்பட்ட இட்லி போல் இலகுவாக நம்முள் இறங்குகிறது. அநியாயத்தைக் கண்டு பொங்கி எழும் புயலாக வருகிறார் ரிஷிகுமார். அவரது அதிரடிகள் ஒவ்வொன்றும் இடி முழக்கம்! கலெக்டராக வருவது திடீர்த் திருப்பம். காதலைத் தூக்கி எறிந்துவிட்டு, தம் பாதைக்குத் திரும்பும்போது படம் வேகம் பிடிக்கிறது. ஸ்ருதிராஜ், சுஜிபாலா என இரு நாயகிகள். பாந்தமாக வந்து பக்குவ நடிப்பை வெளிப்படுத்தும் ஸ்ருதி, காதலில் கரையும் தேன். சுஜி, சுட்டி. எம்.எஸ். பாஸ்கரின் ரிக்கார்டு டான்ஸ் காமெடி லகலகலக. நல்லவன் வேடத்தில் வந்து வில்லத்தனம் செய்யும் சுதாகர் வசந்துக்கு எதிர்காலம் இருக்கிறது.

அங்கங்கே சஸ்பென்ஸ் வைத்து காட்சிகளை உயிர்ப்புடன் நகர்த்துகிறார் இயக்குநர். இரண்டாம் பாதியில் வரும் ஆண்டவர் பாத்திரம் திடுக். க்ளைமாக்ஸில் 'குருதிப்புனல்' வாடை அடித்தாலும், ரசிக்கலாம். பிரவீன் மணி இசை. 'ஆனை மாத்து' செம குத்து. வியோவின் ஒளிப்பதிவு ரசிகனைக் கட்டிப் போடுகிறது. ஸ்டன்ட் மாஸ்டர் பிரகாஷ் மெனக்கெட்டிருக்கிறார்.

திருப்பங்களுக்காகவே படம் எடுத்தது போன்ற உணர்வு ஏற்படுவதை இயக்குநர் தவிர்த்திருக்கலாம். சில காட்சிகள் தொடர்பில்லாமல் நகர்வது உறுத்தல். வேகம் இருக்கிறது. இன்னும் கொஞ்சம் விவேகமும் இருந்திருக்கலாம்.

– மிருதுளா



# உள்ளே...







# மேரி தரிசனம்!

● திருவாரூரிலுள்ள கமலாலயம் திருக்குளத்தின் பரப்பளவு 25 ஏக்கர்.

● கொடைக்கானலில் உள்ள 'கோக்கர்ஸ் வாக்' பகுதியின் அற்புதமான பள்ளத்தாக்கு அழகை முழுமையாகக் காண வேண்டுமென்றால் மதியம் 2 மணிக்கு



● வேளாங்கண்ணி

முன்பும், உங்களுக்குக் கீழே பனி மேகங்கள் பயணம் செய்வதைப் பார்க்க வேண்டுமென்றால் (குளிர்காலத்தில்தான்) மதியம் மூன்று மணியிலிருந்து ஆறு மணி வரையிலும் செல்ல வேண்டும்.

● வேளாங்கண்ணி - இருமுறை மேரி மாதா நேரடியாக தரிசனம் அளித்த தலம்.

● காவலூர் - உலகின் மிகப்பெரிய தொலைநோக்கியான வேணு பாப்பு அமைந்த ஊர்.

● பிள்ளையார்பட்டியில் உள்ள கற்பக விநாயகர் கோயில் மிகத் தொன்மையானதென நம்பப்படுகிறது. பாறையில் உள்ள இந்தத் திருவுருவம் ஐந்தாம் நூற்றாண்டில் எழுப்பப்பட்டது.

● பிரபல ஆங்கில எழுத்தாளர் ஈ.எம். ஃபாஸ்டர் எழுதிய 'எ பாஸேஜ் டு இண்டியா' திரைப்படமானபோது (இயக்குநர்-டேவிட் லீன்) குன்னூரில்தான் பெரும்பாலான படப்பிடிப்புகள் நடைபெற்றன.

● 4,000 அடி நீளமுள்ள ராமேஸ்வர ஆலயப் பிராகாரம் உலகிலேயே மிக நீண்ட பிராகாரமாகும்.

● உலகின் மிகத் தொன்மையான அணைக்கட்டுகளில் ஒன்று கரிகால் சோழனால் எழுப்பப்பட்ட கல்லணை.

● பெரும்பாலான கோயில்களில் கர்ப்பகிருகத்தின் மேலே உள்ள விமானத்தின் உயரம், அந்த ஆலய கோபுரத்தின் உயரத்தைவிட குறைவாகத்தான் இருக்கும். தஞ்சை பெரிய கோயில் இதற்கு விதிவிலக்கு.

● கருட சேவை திருவிழாவன்று காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாளின் கழுத்தை ஒரு தங்க நெக்லஸ் அலங்கரிப்பதுண்டு. அதை அந்த ஆலயத்துக்கு அளித்தவர் பிரிட்டிஷ் கவர்னர் ராபர்ட் கிளைவ்.

● ஊட்டி மலையை அடையும் (பொம்மை) ரயிலின் வேகம் மணிக்கு ஐந்திலிருந்து பத்து கிலோமீட்டர்






# இங்கேயும் வாங்க!

**சி**ல இடங்கள் மிகவும் பிரபலமானவை. அடிக்கடி சுற்றுலாப் பயணிகளால் பார்க்கப்படுபவை. இந்த இடங்களுக்குச் செல்லும்போது மறக்காமல் அதற்கு அருகில் உள்ள இடங்களுக்கும் சென்று வரவேண்டுமென்பது நம்மில் பலருக்குத் தோன்றுவதே இல்லை. தமிழ்நாட்டில் உள்ள சில முக்கியமான இடங்களும் அவற்றுக்கு அருகில் உள்ள பார்க்கவேண்டிய இடங்களும் இதோ உங்கள் கவனத்துக்கு...

### மகாபலிபுரத்துக்குச் செல்லும்போது...

**தட்சிணசித்ரா** எனும் வளாகம் கிழக்குக் கடற்கரைச் சாலையில் எம்.ஜி.எம். அருகே உள்ளது. எவருமே ரசிக்கலாம். என்றாலும், நகரத்திலேயே பிறந்து வளர்ந்த குழந்தைகளைக் கட்டாயம் அழைத்துச் செல்ல வேண்டிய இடம் இது. தமிழகத்தின் பல்வேறு கலாசாரங்களைப் பிரதிபலிக்கின்றன. திருநெல்வேலி, கோவை, செட்டிநாடு, காரைக்குடி, தஞ்சாவூர் போன்ற பகுதிகளில் உள்ள தொன்மை மறையாத வீடுகளை அப்படியே பெயர்த்து எடுத்துக்கொண்டு வந்து இங்கு வைத்தது போல் இருக்கிறது. பெரியவர்களும் அந்தக் கால கூட்டுக் குடும்ப வாழ்க்கையை இங்கு வந்து நினைவுகொள்ளலாம்!

### தஞ்சாவூர் செல்லும்போது...

**த**ஞ்சாவூரிலிருந்து 34 கிலோ மீட்டர் அருகிலுள்ளது **தாராசுரம்**. ராஜேந்திர சோழ மன்னனால் பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுப்பப்பட்ட சிற்ப அற்புதம். பல அரிய சிற்பங்களும் உண்டு. யுனெஸ்கோ அமைப்பால் 'ஹெரிடேஜ் சைட்' என அறிவிக்கப்பட்ட இடம்.

### திருச்சிக்குச் செல்லும்போது...

**இ**ங்கிருந்து பன்னிரண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது **உத்தமர் கோயில்**. பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரையுமே இங்கு தரிசிக்கலாம். 'திரிமூர்த்தி க்ஷேத்திரம்' என்றும் அழைக்கப்படுகிறது. 108 வைணவ திவ்ய தேசங்களில் பாடல் பெற்ற தலங்களில் இதுவும்

■ கங்கைகொண்ட சோழபுரம் - பெரிய கோயில்



ஒன்று. கதம்பவனம் என்றும் அழைக்கப்படுகிறது.

திருச்சிக்கு அருகிலுள்ள சுற்றுலா மையங்கள் கொடும்பாளூர், நார்த்தாமலை, குடுமியான்மலை போன்றவை. இவை தொன்மையான கோயில் சிற்பக்கலைகள் கொண்ட இடங்கள். சித்தன்னவாசல் சமணக் குகை - சுவர் ஓவியங்களுக்குப் பெயர் பெற்ற ஊர். சிற்பக் கலைக்குப் புகழ் பெற்ற ஆவுடையார் கோயில் (110 கி.மீ.), காவிரியாற்றின் குறுக்கே 2ஆம் நூற்றாண்டில் கட்டப்பெற்ற கல்லணை - அக்கால பொறியியல் திறனுக்கு எடுத் துக்காட்டு.

திருச்சியிலிருந்து 18 கி.மீ. தொலைவிலுள்ள ஸ்ரீரங்கம் தீவுக்குட்பட்ட இடம் **முக்கொம்பு.** ஒரு கண்கவர் உலாத்தலம். கொள்ளிடம் நதியின் இடையே கட்டப்பட்ட மேல் அணைக் கட்டுக்குட்பட்ட முக்கொம்பு பூங்காக்கள், பொழுதுபோக்கு உள்ளடங்கியவை.

தனது தந்தையான இராஜராஜ சோழன் உருவாக்கிய தஞ்சை பெரிய கோயிலைப் போன்று, தானும் ஒரு கோயிலை நிர்மாணிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இராஜேந்திர சோழன் படைத்த பெரிய கோயில், **கங்கை கொண்ட சோழபுரத்தில்** உள்ளது. தஞ்சை கோயிலைப் போன்றே வியக்கத்தக்க, கலையம்சம் பொருந்தியதாகவும், நுட்பமான அழகிய பல்வேறு வகையான கைவினைச் சிற்பங்கள் கொண்டதாகவும் இக்கோயில் வடிவமைக்கப்பட்டுள்ளது.




• ஊட்டி தேயிலைத் தோட்டம்



**கொடைக்கானல் செல்லும்போது...**

**ஆ**று கிலோமீட்டர் தள்ளி இருக்கும் **செண்பகனூர்** அருங்காட்சியகத்தில் பதப்படுத்தப்பட்ட காட்டு விலங்குகள், பறவைகள், அரிதான பட்டாம்பூச்சிகள் போன்றவற்றைக் காணலாம். அப்படியே அருகில் உள்ள அஸ்ட்ரோபிசிகல் அப்சர்வேட்டரிக்கும் அழைத்துச் செல்ல



● பிச்சாவரம்
மாங்குரோவ் காடுகள்

லாம். உலகின் பழங்கால தொலை நோக்கிகளில் ஒன்று இங்கே இருக்கிறது.

### ஊட்டி செல்லும்போது...

**ஊ**ட்டி செல்லும் முன்பாகவே, 17 கிலோமீட்டர் தொலைவில் உள்ள **குன்னூருக்குச்** சென்று வாருங்கள். அங்கிருக்கும் பசுமையான தேயிலைத் தோட்டங்களும், தகதகக்கும் சூரிய காந்திப் பூக்களும் உங்களை மயக்கும். மிக அமைதியளிக்கும் இயற்கை எழில் கொண்ட பகுதி. ட்ரெக்கிங் வசதியும் உண்டு.



### திருவண்ணாமலை செல்லும்போது...

**இ**ங்கிருந்து முப்பத்தைந்து கி. மீட்டர் தூரத்தில் உள்ளது **சாத்தனூர் அணை**. பெண்ணாற்றின் குறுக்கே கட்டப்பட்டது. சுற்றிலும் மலைகள் நிறைந்த இந்த இடம், அமைதியும் அழகும் நிறைந்த ஒன்று. குழந்தைகள் பூங்கா, சிறிய வனவிலங்குச் சாலையம், முதலைப் பண்ணை ஆகியவை குழந்தைகளைக் குதூகலிக்கச் செய்யும். இங்கு சென்றுவர, திருவண்ணாமலையிலிருந்து போதிய போக்குவரத்து வசதி உள்ளது.

### சிதம்பரம் செல்லும்போது...

**உ**ப்பங்கழிகளும், பசுமை நிறைந்த கருபுன்னைக் காடுகளும் சூழ்ந்த அழகிய **பிச்சாவரம்** 16 கி.மீ. தொலைவில் உள்ளது.

### மதுரை செல்லும்போது...

**ம**துரையிலிருந்து 130 கி.மீ. தொலைவில், கடல் மட்டத்திலிருந்து 1500 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளது **மேகமலை**. மலைப் பகுதியில் ஏலக்காய்த் தோட்டங்களும் தேயிலைத் தோட்டங்களும் நிறைந்துள்ளன. யானை, புலி, சிறுத்தை, புள்ளிமான் போன்ற வன விலங்குகள் வாழும் அடர்ந்த வனப் பகுதி. ●

# கொஞ்சம் சிகிச்சை...

**'மெடிக்கல்** டூரிஸம்' - சில வருடங்களுக்கு முன்பு வரை பலரும் கேள்விப்பட்டிருக்காத இந்த வார்த்தைகள் இப்போது சுற்றுலாத் துறையில் வெகு பிரபலம்.

பிரிட்டனில் ஓர் இதய அறுவை சிகிச்சைக்குத் தேவைப்படும் தொகை எழுபதாயிரம் டாலர். அமெரிக்காவில் ஒன்றரை லட்சம் டாலர். ஆனால், இந்தியாவில் சுமார் ஏழாயிரம் டாலர் தான்.



தவிர, இந்தியாவில் தலை சிறந்த மருத்துவமனைகளும் மருத்துவர்களும் இருக்கிறார்கள். எனவே பிற நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வந்து சிகிச்சை எடுத்துச் செல்பவர்கள் ஏராளம். தமிழகத்துக்கு இப்படி வருபவர்கள் ஏராளமானவர்கள். வேலூர், சென்னை போன்ற இடங்களுக்கு இப்படிப்பட்டவர்கள் மிக அதிக அளவில் வருகிறார்கள்.

**மருத்துவர் சுற்றுலா 2012-ஆம் ஆண்டில் பத்து லட்சம் டாலர் பெற்றுத் தருமாம்! கிரேட்!**



நோயாளிகளை மருத்துவமனைகள் உடனடியாக அட்மிட் செய்துகொண்டு விடும் என்று எதிர்பார்க்க முடியாது. முதலில் சில ரத்த சோதனை போன்றவற்றைச் செய்து பார்க்கும். முடிவுகள் தெரிந்த பிறகே அட்மிட் செய்வதா, இல்லையா என்பதைத் தீர்மானிக்கும்.

அதுவரை நோயாளியும் அவருடன் வந்தவரும் எங்கே தங்கி இருப்பது? நட்சத்திர ஹோட்டல்களுக்குக் கொடுக்கும் வாடகைக்குப் பதிலாக தமிழக அரசின் பாக்கேஜ் டூரில் கலந்துகொள்ளலாமே! இந்திய சுற்றுலாத் தலங்களைத் தரிசித்த மாதிரியும் இருக்குமே!

சில சமயம் அறுவை சிகிச்சைக்குப் பிறகு

ஒரு வாரம் நோயாளி மருத்துவமனையில் தங்க வேண்டியிருக்கும். பொதுவாக மருத்துவமனைகளில் ஒருவருக்கு மேல் தங்க அனுமதிப்பதில்லை. இந்த நிலையில் உடன் வந்த விருந்தாளிகளும் 'இனி எப்போது இந்தியா வருவோமோ!' என எண்ணி சுற்றுலாத் தலங்களை விசிட் செய்யக் கிளம்பிவிடுகிறார்கள்.

இதற்கு தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் மருத்துவமனைகளுடன் இணைந்து செயல்படுகிறது. தமிழகத்தில் இதை 'ஆரோக்கிய சுற்றுலா' என்று அழகாகப் பெயரிட்டுள்ளனர்.




குறைந்த தொகையில் சிறந்த மருத்துவ சிகிச்சை என்பதுடன், நியாயமான கட்டணத்தில் சிறந்த சுற்றுலாக்களும் சேரும்போது, உற்சாகம் இரு மடங்காகப் பெருகுவதில் சந்தேகம் என்ன?

# கொஞ்சும் சுற்றுலா!

**தென் கன்னியாகுமரி சுற்றுலா அனுபவத்தைக் கூறுகிறார் சிதம்பரம் வாசகர் பெருமாள் கண்ணன் :**

"அலைகள் தாலாட்டும் கன்னியாகுமரியைப் பார்க்கும்போதே சந்தோஷ அலைகள் மனசைத் தாலாட்ட ஆரம்பித்துவிடும். உலகப் பொதுமறையைத் தந்த வள்ளுவன் வானுயர உயர்ந்து நிற்கும் அழகே தனி. சிந்தனையில் மட்டுமல்ல, உருவத்திலும் தான் உயர்ந்தவன் என்று சொல்வதுபோல இருக்கும். அந்த வள்ளுவர் சிலையைப் பார்க்கும்போது நம் நாட்டின் கடைகோடி எல்லையின் காவல் தெய்வமாகத் தோன்றும். அந்தச் சிலையின் அடியில் நின்று சுற்றிப் பார்க்கும்போது உலகையே வென்றுவிட்டோம் என்கிற உணர்வு. கன்னியாகுமரியில் சூரியன் மறையும் காட்சியைக் காண கண்கோடி வேண்டும். விவேகானந்தர் பாறை, காந்தி மண்டபம் என்று நிறைய மகான்களின் பெயரை உச்சரிக்க வைக்கும் ஏற்பாடுகள் கன்னியாகுமரியில் அதிகம்.

வள்ளுவர் சிலை கடலுக்கு மத்தியில் பல வருடங்களாக எந்த வித இடர்ப்பாடுமின்றி இருந்து வருவது மிகவும் ஆச்சர்யமான விஷயம். தமிழக அரசு நல்ல பல திட்டங்கள் மூலம் தமிழகத்தின் சுற்றுலா சிறப்பம்சமான வள்ளுவர் சிலையைப் போற்றிப் பாதுகாத்து வருவது குறிப்பிடத்தக்கது. சுற்றுலா வளர்ச்சிக் கழகம் சீரிய முறையில் வான்புகழ் கொண்ட வள்ளுவனை இன்னும் இன்னும் உயரே அழைத்துச் சென்றுக்கொண்டேயிருக்கிறது... இருக்கும்."



**த**மிழ்நாடு சுற்றுலா கழகத்தின் அதிகாரபூர்வ கைடாகப் பணியாற்றியவர் சுப்பையன். முப்பது வருடங்களுக்கும் மேலாக இந்தப் பணியிலிருப்பவர், தமது அனுபவங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டார்:

“**நா**ன் கைடு கோர்ஸ் முடித்த கையுடன் ஒரு டூர் சென்றேன். காலை ஆறு மணிக்குக் கிளம்ப வேண்டும் என்று முதல் நாள் இரவு சொன்னார்கள். மறு நாள் கிளம்பிவிட்டோம். காஞ்சிபுரம், புதுச்சேரி, தஞ்சாவூர் என்று பார்த்துவிட்டு, திருச்சி போய்ச் சேர்ந்தோம். மலைக்கோட்டை பிள்ளையாரைப் பார்ப்பதாக ஏற்பாடு. மலை அடிவாரத்துக்குப் போனோம். பஸ்ஸிலிருந்து கீழே இறங்கிய ஒரு ஃபிரான்ஸ் பெண்மணி, 'சுப்பையன்' என்றார். 'என்ன?' என்றேன். 'ஒரு சின்ன சந்தேகம். பிள்ளையாருக்குத் தொப்பை பெருசு. அவ்வளவு உயரத்தில் ஏறி எப்படிப் போனார்?' என்றார். அவர் தமாஷாகக் கேட்டாலும், அவர் கோயில் வரலாற்றைக் கேட்கிறார் என்பதைப் புரிந்துகொண்டேன். ஆனால், எனக்கு ஸ்தல புராணம் தெரியாது. ஏதோ தைரியத்தில் 'மேலே வாருங்கள் சொல்கிறேன்' என்றேன். அவர் ஒவ்வொரு படியாக ஏறி மெதுவாக வருவதற்குள், இரண்டிரண்டு படிகளாகத் தாவி ஏறி இடையில் உள்ள தாயுமானவ ஸ்வாமி சன்னிதி குருக்களிடம் ஸ்தல புராணத்தைக் கேட்டு, மூச்சு முட்ட உச்சிக்குப் போய்ச் சேர்ந்தேன். வியர்க்க விறுவிறுக்க வந்த அந்த ஃபிரான்ஸ் பெண்மணிக்கு, ஒரு வழியாக கதை சொல்லி முடித்தேன். உச்சிப் பிள்ளையார் ஓரக் கண்ணால் என்னைப் பார்த்துச் சிரிப்பதுபோல் இருந்தது.

**சு**ற்றுலாவாசிகள் எதையாவது கேட்டு, நாம் ஏதாவது புருடாவிட்டுச் சமாளித்தோம் என்றால், அந்த டூர் முடிவதற்குள்ளேயே நாம் மாட்டிக்கொண்டு விடுவோம். எனவே, தெரியாத விஷயம் என்றால் 'தெரிஞ்சுக்கிட்டு சொல்றேன்' என்று நேர்மையாகச் சொல்லிவிட வேண்டும்.



● சுற்றுலா பயணியுடன் சுப்பையன்...



# உச்சிப்பிள்ளையார் எப்படி உயரே போனார்?

**ப**யணிகளின் கோபத்துக்குக் கேட்கவே வேண்டாம். எதையும் சமாளிக்கத்தான் வேண்டும். ஒரு முறை ஆந்திரப் பயணி தனக்கு ஏ.ஸி. அறை கொடுக்கவில்லை என்று பயங்கர கடுப்பாகிவிட்டார். 'கொடைக்கானலில் ஏற்பாடு செய்கிறேன்' என்றேன். அங்கே போனவுடன் அறையில் மின்விசிறிகூட இல்லாததைப் பார்த்து இன்னும் கொதித்துப் போனார் (குளிர் பிரதேசங்களில் அறையில் மின் விசிறி போட மாட்டார்கள்). 'இரவு ஏ.ஸி. அறை கட்டாயம் தேவை' என்றார். மாலை ஆறாயிற்று. அந்த மனிதருக்குக் குளிர் தாங்க முடியவில்லை. நான் அவரிடம் போய், 'ஸார், ஏ.ஸி. ரூம்...' என்றேன்... 'நோ... நோ...' என்றவாறு மின் விசிறி கூட இல்லாத அறைக்கு ஓடினார்.

**எ**ன் கைடு வாழ்க்கையில் மறக்க முடியாத சந்தோஷமான, சோகமான விஷயங்கள் இரண்டு உண்டு. முதலில் சந்தோஷம்: மலேஷியாவில் திருமணம் செய்துகொண்டு, சென்னையில் ஒரு கோயிலில் சம்பிரதாயமாக மாலை மாற்றித் திருமணம் செய்துகொள்ள விரும்பிய ஒரு தம்பதிக்கு, வடபழனி கோயிலில் திருமணம் செய்து வைத்தது. பெண்ணுக்கு நானும், என் மனைவியும் தந்தை, தாயாக இருந்து செய்தோம். சோகம் என்றால், பிழிந்தெடுக்கும் சோகம். லட்சுமணன் என்ற வாலிபர் மலேஷிய சுற்றுலாப் பயணிகளுடன் வருவார். கிட்னி பிரச்னையில் தவித்து வந்த அவர் சென்னையில் மரணமடைந்துவிட்டார். நுங்கம்பாக்கம் சுடுகாட்டில் நானே அவருக்குக் காரியங்கள் செய்து கொள்ளியும் வைத்தேன்.''



தமிழ்நாட்டின் சுற்றுலா வளர்ச்சி குறித்து தமிழ்நாடு அரசின் சுற்றுலா மற்றும் பண்பாட்டுத் துறை செயலாளர் வெ.இறையன்பு ஐ.ஏ.எஸ். அளித்த சிறப்புப் பேட்டி :

***சுற்றுலாத் துறை வளர்ச்சியில் தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் பங்கு என்ன?***

''தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் சுற்றுலாவை சந்தைப்படுத்துவதில் முன்னோடியாகத் திகழ்கிறது. படகுத் துறைகள், உணவு விடுதிகள், வாகன வசதிகள் ஆகியவற்றை பயணிகளுக்குப் பெற்றுத் தருவது அதன் நோக்கம். தனியார் முன் வராத இடங்களில் முதலில் சுற்றுலா வசதிகளை உருவாக்கிய பெருமை, சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தையே சாரும். வெளிமாநிலப் பயணிகளுக்குப் பிரத்யேகமான சுற்றுலாக்களை ஏற்பாடு செய்வதில் அதன் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது. தரமான, பாதுகாப்பான தங்கும் இடங்களை நடத்துவதும், விருந்தினர்கள் வருகையை அதிகரிப்பதும் இதில் அடங்கும்.''




# மெரீனாவுக்கு

***நீங்கள் சந்திக்கும் முக்கியமான சவால்கள் என்ன?***

''வெளிநாட்டுப் பயணிகளைக் கவரும் வகையில் கட்டமைப்புகளை மேம்படுத்துவதும், நம் மாநிலத்தை நோக்கி அவர்களை ஈர்க்கும் வண்ணம் வாய்மொழி விளம்பரத்தை உண்டாக்குவதும் முக்கிய சவால்கள்.''

***உங்களின் 'பேக்கேஜ் டூர்'களுக்கு மக்கள் மத்தியில் வரவேற்பு எப்படி உள்ளது?***

''எப்போதுமே திருப்பதி - திருமலை யாத்திரை சுற்றுலாவுக்கு நல்ல டிமாண்ட் உள்ளது. புதிதாக அறிமுகப்படுத்தப்பட்டுள்ள தங்கக் கோயில் சுற்றுலா மக்களிடத்தில் மிகவும் பிரசித்தி பெற்று வருகிறது. தற்போது ஊட்டி, கொடைக்கானல், ஏற்காடு செல்லும் பயணிகள் அதிகரித்து வருகிறார்கள்.''

***தமிழக சுற்றுலா வளர்ச்சியில் தனியார் துறையின் பங்களிப்பு இல்லாதது ஏன்?***

''தமிழகத்தில் தரமான விடுதிகளை நடத்துவதன் மூலமாகவும், சொகுசுப் பேருந்துகளை இயக்குவதன் மூலமாகவும் தனியார் நிறுவனங்கள் சுற்றுலா வளர்ச்சியை அதிகரிக்கின்றன. கலை நிகழ்ச்சிகள், இசை நிகழ்ச்சிகள் மூலமாகவும் தனியார் அமைப்புகள் உலகத்தின் கவனத்தை நம் பக்கம் திருப்பி வைத்திருக்கிறார்கள். தமிழ்நாடு சுற்றுலாத்துறை தனியார் தொழில் முனைவோருக்கு முன்னோடியாக இருந்து ஊக்கப்படுத்தி வருகிறது. அதிகம் பிரபலமாகாத சுற்றுலாத் தலங்களில் சுற்றுலா தொழில் தொடங்க முனைவோருக்கு 10% மானியம் (அதிகபட்சம் ஒரு கோடி) அளிக்கப்படுகிறது.''

***தமிழகத்துக்கு வெளியிலும், அயல் நாடுகளிலும் தமிழகத்தை அறிமுகப்படுத்தி, பயணிகளை ஈர்க்க என்ன நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன?***

''பிரிட்டன், ஜெர்மனி ஆகிய நாடுகளில் நடக்கும் உலகச் சுற்றுலா கண்காட்சிகளில் தமிழகம் கலந்துகொள்கிறது.

# 5 கோடி!

ஆசிய பசிபிக் நாடுகளில் நடத்தப்படும் சுற்றுலா கண்காட்சிகளில் தமிழகத்தை அறிமுகப் படுத்தி சுற்றுலாப் பயணிகளை ஈர்க்க சுற்றுலாத் துறை பங்களித்து வருகிறது. ஆண்டுதோறும் டெல்லி, மும்பை, கொல்கத்தா, அகமதாபாத், ஜெய்ப்பூர், ஹைதராபாத், பெங்களூரு ஆகிய இடங்களில் தமிழக சுற்றுலாத் துறை பத்திரிகையாளர் சந்திப்பையும் விளம்பர முகாமையும் நடத்துகிறது. பன்னாட்டுப் பயண இதழ்களிலும், உலகப் புகழ்பெற்ற தொலைக்காட்சிகளிலும் நம் சுற்றுலா மையங்களை விளம்பரப்படுத்துகிறோம்.''



● கே.இளையராஜா

**இளைஞர்களுக்கென்று சிறப்புச் சுற்றுலா திட்டங்கள் ஏதேனும் உள்ளனவா?**

''இளைஞர்களை ஊக்குவிக்கும் பொருட்டு சென்னை, ஊட்டி, கொடைக்கானல், கன்னியாகுமரி போன்ற சில சுற்றுலா தலங்களில் இளைஞர் விடுதிகள் நடத்தி வருகிறோம். மலை வாசஸ்தலங்களான ஊட்டி, கொடைக்கானல், ஏற்காடு, ஏலகிரி, களக்காடு, முண்டந்துறை, வால்பாறை போன்ற இடங்களில் சாகசச் சுற்றுலா, மலையேறுதல் உண்டு. கிழக்குக் கடற்கரை சாலை முதலியார் குப்பம் படகு குழாமில் அயல்நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட ரெயின் வாட்டர் ஸ்கூட்டர்கள் தருவிக்கப்பட்டு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றுக்கெல்லாம் இளைய தலைமுறையினர் மத்தியில் மகத்தான வரவேற்பு கிட்டியுள்ளது.''

**உலகின் சிறந்த கடற்கரைகளுள் ஒன்றான மெரீனாவில் சுற்றுலாப் பயணிகளுக்கான சிறப்புத் திட்டங்கள் ஏதாவது உண்டா?**

''சென்னை மெரீனா, உலகிலேயே இரண்டாவது மிகப்பெரிய கடற்கரை இதனை மேம்படுத்தவும், மெருகேற்றவும் சுமார் 5 கோடி ஒதுக்க ஒப்புதலளிக்கப் பட்டுள்ளது. நடைபாதை, கேலரி, பொதுக் கழிப்பிட வசதி போன்ற சுற்றுலா திட்டங்கள் அங்கே மேற்கொள்ளப்பட உள்ளன.''

'**வி**ருந்தினர் போற்றுதும்' என்ற முழக்கத்துடன் புறப்பட்டுள்ளது சுற்றுலாத் துறை. மாவட்டம் தோறும் கலெக்டர்கள் மற்றும் காவல் துறை மூலமாக, நம் ஊருக்கு வரும் சுற்றுலாப் பயணிகளுக்குச் சிறப்பாக சேவை புரிந்து, மகிழ்ச்சியூட்டும் அவசியத்தை வலியுறுத்தி வருகிறது. அதன் ஓர் அங்கம் தான் நட்பு ஆட்டோ திட்டம்!

போக்குவரத்துத் துறையின் பிரத்யேக அனுமதி பெற்று, ஆட்டோவின் வழக்கமான மஞ்சள் நிறம், வெள்ளை நிறமாக மாற்றப்பட்டுள்ளது. சுற்றுலாத் துறையின் விளம்பர வாசகங்களைத் தாங்கி, வலம் வரும் இந்த நட்பு ஆட்டோக்களுக்கு சென்னைக்கு வரும் சுற்றுலாப் பயணிகள் மத்தியில், குறிப்பாக அயல் நாட்டு சுற்றுலாப் பயணிகள் மத்தியில் நல்ல வரவேற்பு.

சொந்தமாக ஆட்டோ வைத்திருக்கும் ஆட்டோ டிரைவர்களைக் கவனமுடன் தேர்ந்தெடுத்து, பயிற்சி அளித்து, களமிறக்கி உள்ளனர். தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அனைவருக்கும் தமிழ், ஆங்கிலம் தவிர, வேறு இந்திய மொழிகளும், அயல்நாட்டு மொழிகளும் ஓரளவுக்குத் தெரிந்துள்ளது. தற்போது பெரிய ஹோட்டல்கள், ரயில் நிலையங்களில் சில நட்பு ஆட்டோக்கள் நிறுத்தப்பட்டுள்ளன. தேவையான சுற்றுலாப் பயணிகள் இந்த ஆட்டோக்களைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். தமிழகச் சுற்றுலா குறித்த அனைத்துத் தகவல்களும் இந்த ஆட்டோக்களில் கிடைக்க வழி வகை செய்யப்பட்டுள்ளன.

வள்ளுவர் கோட்டம் அருகே நட்பு ஆட்டோ ஒன்றில் இத்தாலி நாட்டு சுற்றுலாப் பயணிகளை ஏற்றிச் சென்று கொண்டிருந்த ராமச்சந்திரனை நிறுத்தி, பேச்சுக் கொடுத்தோம். ''எனக்கு இருபத்தைந்து வருட சுற்றுலாத் துறை அனுபவம் உண்டு. முதலில் சுற்றுலா கைடாக இருந்தேன். ஆஸ்திரியாவிலிருந்து வந்த ஒரு பெண்மணிக்கு கைடாக தமிழ்நாடு முழுக்கச் செல்லும் வாய்ப்பு சுமார் 12 வருடங்களுக்கு முன்பு கிடைத்தது. என்

• இத்தாலி நாட்டுத் தம்பதியுடன் ராமச்சந்திரன்...



னைப் பற்றி ஆர்வமுடன் கேட்டுத் தெரிந்துகொண்ட அந்தப் பெண்மணி, ஊருக்குச் சென்றதும் ஒன்றே கால் லட்ச ரூபாய்க்கு டி.டி. அனுப்பி வைத்து 'உங்கள் விருப்பப்படியே ஆட்டோ வாங்கி ஓட்டி, வாழ்க்கையில் முன்



னேறுங்கள்' என்று வாழ்த்தி இருந்தார். அந்த ஆட்டோ தான் இது'' என்றார்.



''இந்த நட்பு ஆட்டோக்களுக்கு அரசாங்கம் இவ்வளவு கட்டணம் என்று நிர்ணயிக்கவில்லை. காரணம், ஒவ்வொரு சுற்றுலாப் பயணியின் விருப்பமும் மாறுபடுமில்லையா? ஆனால், நாங்கள் யாருமே பயணிகளிடம் கண்மூடித்தனமாகப் பணம் கேட்பதில்லை. நாம் ஹோட்டலில் கொண்டு போய்விட்டதும் மறுநாள் பத்து மணிக்கு என்னை வரச் சொல்லிவிட்டு நூறு ரூபாயை நீட்டினார். நான் அதிகம் கேட்டிருந்தால் நிச்சயம் அவர் எனக்குக் கொடுத்திருப்பார். ஆனாலும் நான் எக்ஸ்ட்ரா எதுவும் கேட்கவில்லை. மறுநாள் சொன்ன நேரத்துக்கு ஹோட்டலுக்குப் போய் அவர்களை ஏற்றிக்

# நம்பிக்கை தரும் நட்பு ஆட்டோ!

பொறுமையுடன் அவர்களுக்குச் சேவை புரிந்தால், நாம் எதிர்பார்க்கும் கட்டணத்துக்கு அதிகமாகவே தருகிறார்கள். ஒரு இத்தாலிய டூரிஸ்ட் ஜோடிக்கு முதல் நாளன்று அரை நாள் போல ஆட்டோ ஓட்டினேன். நியாயமாக முன்னூறு ரூபாய் கிடைக்கும் என்று எதிர்பார்த்தேன். இரவு கொண்டு ஐந்தாறு மணி நேரம் சுற்றிக் காட்டினேன். மறுநாளும் என்னை வரச் சொல்லிவிட்டு, ஐநூறு ரூபாயை எடுத்துக் கொடுத்து என்னை ஆச்சரியப்படுத்தினார்கள்'' என்றார் ராமச்சந்திரன். ●

* புருஷோத்தமன்



**நட்பு ஆட்டோ டிரைவர்களின் ஒருங்கிணைப்பாளர் புருஷோத்தமன். டூரிஸ்ட் ஆட்டோ ஓட்டுநர்களுக்கு அவரின் அன்பான கட்டளைகள் :**

* டூரிஸ்ட்டுகள் இருக்கும்போது, சிகரெட் பிடித்தபடி வண்டி ஓட்டக் கூடாது.

* பயணிகளை நம் வீட்டு விருந்தினர்போல நினைத்து சேவை செய்ய வேண்டும்.

* டாஸ்மாக் கடைப் பக்கம் நம் வெள்ளை ஆட்டோக்கள் யார் கண்ணிலும் படவே கூடாது.

* வரும் டூரிஸ்ட்டுகளுக்கு நம்மால் முடிந்தவரை உதவிகரமாக இருக்க வேண்டும்.

* கோபம் கூடாது. நேர்மையை கட்டாயம் கடைபிடிக்க வேண்டும்.

# சக்தியர் சுற்றுலா!


experience yourself

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் பல்வேறு சுற்றுலாப் பயணத் திட்டங்களை பயணிகளின் தேவைக்கேற்ப நடத்தி வருகிறது. அவற்றுள் முக்கியமான சில...

● ஒருநாள் மாமல்லபுரம் - காஞ்சிபுரம் - முட்டுக்காடு சுற்றுலா

● ஒரு நாள் திருப்பதி - திருமலை - திருச்சானூர் சுற்றுலா

● ஒரு நாள் திருவண்ணாமலை கிரிவலம் சுற்றுலா

● ஒரு நாள் 'சக்தியர் சுற்றுலா' (மாங்காடு, திருவேற்காடு, திருமுல்லைவாயில், செம்புலிவரம், பஞ்சட்டி, மேலூர், திருவொற்றியூர்)


● காஞ்சிபுரம்

● மூன்று நாட்கள் நவ திருப்பதிகள் சுற்றுலா (திருநெல்வேலியைச் சுற்றி உள்ளவை)

● மூன்று நாட்கள் நவக்கிரக சுற்றுலா (வைத்தீஸ்வரன் கோயில், திருவெண்காடு, கீழ்ப் பெரும்பள்ளம், திருநள்ளாறு, ஆலங்குடி, திங்களூர், திருநாகேஸ்வரம், சூரியனார் கோயில், கஞ்சனூர்)

● மூன்று நாட்கள் பஞ்சபூத ஸ்தலங்கள் சுற்றுலா (காளஹஸ்தி, காஞ்சிபுரம், திருவண்ணாமலை, திருவானைக்காவல், சிதம்பரம்)

● நான்கு நாட்கள் அறுபடை வீடு சுற்றுலா (திருத்தணி, சுவாமி மலை, திருச்செந்தூர், பழமுதிர்ச்சோலை, திருப்பரங்குன்றம், பழனி)

● நான்கு நாட்கள் சோழநாட்டு திருப்பதிகள் சுற்றுலா (சீர்காழி, திருச்சேரை, கும்பகோணம், தஞ்சாவூர் உட்பட பல இடங்கள்)

● ஏழு நாட்கள் கொல்லூர் - பெங்களூரு, வேலூர், சிருங்கேரி, உடுப்பி, மைசூர் உட்பட பல கர்நாடகத் தலங்கள் மற்றும் ஒகேனக்கல்

● ஏழு நாட்கள் ஆந்திரச் சுற்றுலா (நாராயண வனம், கோனே அருவி, ஸ்ரீசைலம், காளஹஸ்தி உட்பட பல இடங்கள்)

● எட்டு நாட்கள் தமிழகச் சுற்றுலா

● எட்டு நாட்கள் கிழக்கு மேற்குக் கடற்கரைச் சுற்றுலா (ஏற்காடு, குருவாயூர், காலடி, கொச்சின், கோட்டயம், மூணாறு, பழனி ஆகியவை அடங்கியது)

● எட்டு நாட்கள் கோவா - மந்த்ராலயம் - ஸ்ரீசைலம், அஹோபிலம் உட்பட்ட இடங்கள்

● பதினான்கு நாட்கள் - மும்பை - அஜந்தா - எல்லோரா சுற்றுலா

● பதினான்கு நாட்கள் - பூரி - கயா - காசி - அலகாபாத் சுற்றுலா ●



லீவு விட்டாச்சே... கோவாவுக்குக் கிளம்பிடலாமா?



*experience yourself*

# நோ ஓவர் டோஸ்!

**ஹாய்** வாசகாஸ்...

டூர் செல்லும்போது கவனமாக இருக்க பிடியுங்க சில டிப்ஸ்...

● எப்போதும் உங்கள் பயணச் சீட்டை பரிசோதகர்கள் கேட்கும்போது எளிதாக எடுக்கும் வண்ணம் மேல் பாக்கெட்டிலோ அல்லது கைப்பையிலோ வைத்துக் கொள்ளுங்கள்.

● ரயிலிலோ அல்லது பஸ்ஸிலோ ஏறும்போது, ரயிலென்றால் கோச் நம்பர், பஸ் என்றால் தடம் எண் ஆகியவற்றை ஒரு முறை செக் செய்துகொள்ளுங்கள். திரும்பி வர எடுத்த டிக்கெட்டையும் சேர்த்து வைத்துக் கொண்டு குழம்ப வேண்டாம். அதை பெட்டியில் தனியாக வைத்துக்கொள்ளலாம்.

● காரில் குடும்பத்தோடு செல்லும்போது கையில் சாலை வரைபடம் இருக்கட்டும். கிளம்புவதற்கு முன் வண்டியை நன்றாக செக் செய்வது நல்லது. காலை ஆறு மணியிலிருந்து, மாலை ஆறு மணிக்குள் பயணத்தை முடித்து எங்காவது தங்கி விடுங்கள்.

● ரத்தக் கொதிப்பு, சர்க்கரை பிரச்னை இருந்தால், மருத்துவர் ப்ரிஸ்கிரிப்ஷனுடன், மாத்திரைகளையும் கவனமாக எடுத்துக்கொள்ளவும். குழந்தைகளுக்கான மருந்து மாத்திரை மற்றும் தேவையானவற்றைத் தனிப் பையில் வைத்துக்கொள்ளவும்.

● பாக்கெட்டில் ஒரு பேப்பரில் உங்கள் வீட்டு முகவரி, தொலைபேசி (மொபைல் உட்பட) எண் மற்றும் ரத்த குருப்பை எழுதி வைத்துக்கொள்ளவும். ஏதாவது அசம்பாவிதம் என்றால், தகவல் கொடுக்க வேண்டியவரின் முகவரியும், தொலைபேசி எண்ணும் இருப்பது நல்லது.

● பயணங்களின்போது அளவாகச் சாப்பிட வேண்டும். தாகம், தண்ணீர் விஷயத்தில் மிகவும் உஷாராக இருக்கவேண்டும். கூடியவரை பாட்டில் தண்ணீரை உபயோகிக்கவும்.

● எடுத்துச் செல்லும் பணத்தை நீங்கள் ஒருவரே வைத்துக்கொள்ள வேண்டாம். இரண்டு மூன்று பேராகப் பிரித்து வைத்துக் கொள்வது நல்லது.

● நொறுக்குத் தீனியை கேட்டு குழந்தைகள் நச்சரிக்கும்போது, அளவோடு கொடுங்கள். நோ ஓவர் டோஸ். வயிறு பத்திரம். ●





கடந்த டிசம்பர் மாதம், தமிழக சுற்றுலாத் துறை, தமிழகத்தின் தலைசிறந்த ஓவியர்கள் கலந்துகொண்ட ஓவிய முகாமொன்றை நடத்தியது. சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடந்த அந்த முகாமில் இருபத்தேழு ஓவியர்கள் கலந்து கொண்டார்கள். முகாமின் பெயர்: தூரிகையில் தமிழகம். தமிழகத்தின் சுற்றுலாத் தலங்கள் குறித்து மக்கள் மத்தியில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவதே இதன் நோக்கம்.

ஓவியர்கள் அனைவரும் தங்களுக்குப் பிடித்த தமிழகக் காட்சி ஒன்றை ஓவியமாக்கினார்கள். மணியம் செல்வம், மாருதி, மருது இவர்களோடு பிற ஓவியர்களும், ஓவியக் கல்லூரி மாணவர்களும்கூட இதில் கலந்து

# கை கொடு

இந்த சம்மர் லீவ்ல டிராயிங் க்ளாஸ்தான் என் சாய்ஸ்!



# க்கும் கான்செப்ட்!

கொண்டனர்.

"அரசாங்கம் நிறைய இலக்கிய, கலை விழாக்களை நடத்தி வருகிறது. ஆனால், ஓவிய முகாம் புதிய முயற்சி. நம் மண்ணின் பெருமையை எடுத்துக்கூறும் வகையில் சக ஓவியர்களுடன் இணைந்து முகாமில் பங்கேற்றது ஒரு இனிய அனுபவம்" என்று கூறுகிறார் ஓவியர் டிராட்ஸ்கி மருது.

சுற்றுலா தலங்களின் அழகான புகைப்படங்கள் கொண்ட உயர்தர புத்தகங்கள் பல வெளிவந்திருக்கின்றன. ஆனால், இதிலிருந்து முற்றிலும் மாறுபட்டு, புகைப்படங்களுக்கு மூன்றாவது பரிமாணம் கொடுத்தாற்போல் வரையப்பட்ட இந்த ஓவியங்கள் அனைத்தையும் 'தூரிகையில் தமிழகம்' என்ற பெயரிலேயே புத்தகமாக அச்சிட்டு வெளியிடப்போகிறார்கள். தமிழக சுற்றுலா வளர்ச்சிக்கு இந்த முயற்சி பெரிய அளவில் கைகொடுக்கும் என்று நம்பப்படுகிறது. சில ஓவியங்கள் இங்கே பார்வைக்கு...



சென்னை மெரினா

கோடைக்கானல் கோக்கர்ஸ் வாக்கை நினைச்சாலே குளிருது!

# உங்களுக்கேற்ற

தமிழகத்தில் சுற்றுலாத் தலங்கள் என்பவை கொஞ்ச நஞ்சமல்ல. அவற்றில் பிரபலமான சிலவற்றை கல்வி, தேனிலவு, குடும்பம், நீர் அற்புதம் என்று பிரித்திருக்கிறோம். ஒரு பிரிவில் இருப்பது இன்னொரு பிரிவினருக்கும் பொருத்தமாக இருப்பது தமிழகத்தின் தனிச்சிறப்பு.

## கல்விச் சுற்றுலா

### வேடந்தாங்கல்

இந்தியாவின் மிகப்பெரிய நீர் நிலைப் பறவைகள் சரணாலயம். கொக்குகள், நாரைகள், கடற்பறவைகள், மீன் கொத்திகள் போன்ற பல்வேறு பறவை யினங்கள் பருவகாலத்தில் (அக்டோபர் முதல் மார்ச் வரை) இங்கே வருகின்றன. ஏரியின் கரையையொட்டி 24 அடி உயரத்தில் பார்வையாளர் கோபுரம் அமைந்துள்ளது. வேடந்தாங்கல் காஞ்சிபுரத்திலிருந்து 48 கி.மீ. தொலைவில் உள்ளது.

### மாமல்லபுரம்

பண்டைய இந்தியாவின் வளங்கொழித்த துறைமுகப் பட்டினங்களில் ஒன்று. பல்லவ மன்னர்கள் சிற்பக் கலைக்கு செழுமை சேர்த்த இடம். இன்று தென்னாட்டின் மிகப்பெரிய சுற்றுலாத் தலம். கடற்கரைக் கோயில், அர்ச்சுனன் தவக்கோயில், புலிக்குகை, கற்தேர்கள் இங்கே கண்டு களிக்கத்தக்கதவை. கடற்கரைப் பொழுதுபோக்குக்கேற்ற சிறந்த இடமும் கூட. இங்கிருந்து வடக்கே 14 கி.மீட்டரில் முட்டுக்காடு படகுக் குழாமும், மேற்கே 15 கி.மீட்டரில் திருக்கழுக்குன்றமும் உள்ளன.

### சென்னை

பிர்லா கோளரங்கம், காந்தி மண்டபம், கிண்டி பூங்கா, வண்டலூரிலுள்ள மிருகக்காட்சி சாலை, எழும்பூரிலுள்ள அருங்காட்சியகம் என்று கண்டுகளிக்கவும் அறிவைப் பெருக்கிக்கொள்ளவும்

# சுற்றுலா எது?

பல இடங்கள் உண்டு இந்த தமிழகத் தலைநகரில்.

### பூம்புகார்

காவிரியாறு கடலில் கலக்கும் இடத்தில் அமைந்துள்ள பழங்காலச் சோழ மன்னர்களின் தலைநகரம் - துறைமுகப் பட்டினம், இன்றோ சிற்றூர். எனினும், புதிதாய் படைக்கப்பட்டுள்ள பூம்புகார் கலைக்கூடம் ரசனைக்கு விருந்தாகும். இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம் மற்றும் கடற்கரை - பார்த்து மகிழத் தக்கவை.

### பெரியார் வனவிலங்கு சரணாலயம், தேக்கடி

இந்த அழகிய சரணாலயத்தின் வனப் பகுதிகள், மனித முயற்சியால் நிர்மாணிக்கப்பட்ட ஏரி ஒன்றை நோக்கிச் சரிவாக அமைந்துள்ளன. இந்த ஏரியில் விசைப் படகுப் பயணம் மேற்கொள்வதன் மூலம் இயற்கைச் சூழ்நிலையில் வன விலங்குகளைக் கண்டு மகிழலாம். யானை, காடி, புலிகள், சிறுத்தைப் புலிகள் எல்லாம் ஏரியில் தண்ணீர் அருந்த வருவதைக் காணலாம்.

மதுரையிலிருந்து பேருந்துகள் மூலம் தேக்கடி சென்றடையலாம். கேரள சுற்றுலாத் துறை தேக்கடியில் மூன்று ஓய்வு விடுதிகளை நடத்துகிறது. வெவ்வேறு வருவாய்ப் பிரிவினரின் வசதிகளுக்கேற்ப அமைந்தவை இவ்விடுதிகள்.

### முதுமலை வனவிலங்குகள் சரணாலயம்

ஊட்டியிலிருந்து 60 கி.மீ. தொலைவில் உள்ளது. யானைகள், காட்டெருதுகள், புலிகள், சிறுத்தைகள், புள்ளிமான்கள், முள்ளம்பன்றி ஆகியவற்றை இயற்கை எழில் கொஞ்சும் பின்னணியில் கண்டு ரசிக்க முடியும். கர்நாடகாவின் பண்டிபூர் வனவிலங்குகள் சரணாலயமும், கேரளாவின் வயநாடு வனவிலங்குகள் சரணாலயமும் முதுமலை சரணாலயத்தில் இணைகின்றன.

**தேனிலவுத் தம்பதிகளுக்கு...**

### உதகமண்டலம்

ஊட்டி எனவும் அழைக்கப்படுகிறது. 2,286 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ள பசுமை கொஞ்சும் அழகுத் தொட்டில். தாவரவியல் பூங்கா, தொட்டபெட்டா சிகரம், படகு நீந்தும் ஏரி, முக்குருத்திச் சிகரம், பைக்காரா அணை, அடுக்கடுக்காகப் பரந்து கிடக்கும் தேயிலைத் தோட்டங்கள் எல்லாம் இங்கே பார்க்கத்தக்கவை. 29 கி.மீட்டர் தொலைவில் உள்ள கோத்தகிரியும், முதுமலை வனவிலங்கு சரணாலயமும் காணத்தக்கவை.

### ஏற்காடு

சேலத்துக்கு அருகில் சேர்வராயன்



• ஸ்ரீரங்கம்

மலைப் பகுதியில் அமைந்த செழுமையான பசுமரங்கள் சூழ்ந்த இடம். 1500 மீட்டர் உயரத்தில் உள்ளது. இங்குள்ள ஏரியில் படகுப் பயணம் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தக் கூடியது.

'லேடீஸ் சீட்', அண்ணா பூங்கா, பசுந்தாவரப் பண்ணை, கிள்ளியூர் அருவி பகோடா முனை, கரடிக் குகை, சேர்வராயன் கோயில் இங்கே கண்டு களிக்கத்தக்கவை.

## கொடைக்கானல்

இந்தியாவின் அழகுமிகு மலைத் தலங்களில் ஒன்று. 2133 மீட்டர் உயரம். பிரயண்ட் பூங்கா, தூண் பாறைகள், பரந்த நட்சத்திர வடிவிலான ஏரி, வானிலை ஆராய்ச்சி நிலையம், பெருமாள் குன்று, வெள்ளி அருவி, தொலைநோக்கிகள், செண்பகனூர் புனித இருதயக் கல்லூரியிலுள்ள பசுந்தாவரப் பண்ணை மற்றும் அருங்காட்சியகம் எல்லாம் இங்கே இன்பம் சுரக்கும் இடங்கள்.

## ஏலகிரி

வேலூரிலிருந்து 85 கி.மீ. தொலைவில் உள்ளது. மலை நடைப்பயணம் மற்றும் மாசு மருவற்ற இயற்கைச் சூழல்களுக்கு ஏற்றது. சிறுவர் பூங்கா, பசுமையான தாவரங்கள், சிறு படகுக் குழாம் என அனைவரையும் உற்சாகப்படுத்தும் இடம்.

## குடும்பத்தோடு களிக்க...

## திருச்சி

காவிரிக் கரையில் கம்பீரமான மலைக் கோட்டையுடன் அமைந்துள்ள நகரம். அன்று கர்நாடகப் போர்கள் பலவற்றுக்குக் களமாக அமைந்த இந்நகர், இன்று மாவட்டத்தின் தலைநகரமாக விளங்குகிறது. அருகில் ஸ்ரீரங்கத்தில் உள்ள அருள்மிகு அரங்கநாதப் பெருமாள் கோயிலும், திருவானைக் கோயிலும் காணத்தக்கதவை.

## செட்டிநாடு

செட்டியார் சமூகத்தினரின் அற்புத மாளிகைகள். பர்மா தேக்கில் அமைந்த தூண்களும், வண்ணக் கண்ணாடிகள் பதித்த ஜன்னல்களுமாக ஒவ்வொரு வீடுமே ஒரு கட்டடக் கலை அதிசயம்தான்.

## மதுரை

சங்கத் தமிழ் வளர்த்துப் புகழ்பெற்ற பாண்டியர் தலைநகரம். இன்று தமிழகத்தின் இரண்டாவது மாநகரம். சிற்பக்கலை செழிக்கும் அற்புத கோபுரங்களைக் கொண்ட மீனாட்சி கோயில் இங்கு காணற்கரிய அதிசயமாகும். திருமலை நாயக்கர் அரண்மனை, மாரியம்மன் தெப்பக்குளம், கூடல் அழகர் கோயில், காந்தி அருங்காட்சியகம் என்று கண்டுகளிக்க ஏராள இடங்கள். திருப்பரங்குன்றம் (8 கி.மீ.), அழகர் மலை (21 கி.மீ.), வைகை அணை (68 கி.மீ.) எல்லாம்கூட அருகருகே இருப்பது சிறப்பு.

## வட்டக்கோட்டை

கன்னியாகுமரியிலிருந்து சுமார் ஆய

கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள சுற்றுலாத் தலம். இங்குள்ள கடல் அமைதியானது. கடற்கரைக் குளியலும் சகஜம். நிறைய தென்னை மரங்கள் உண்டு. கன்னியாகுமரியிலிருந்து 32 கிலோமீட்டர் தொலைவில் உள்ள முட்டம் கடற்கரையும் வெகு அழகானது. கடலோரக் கவிதைகள் உட்பட பல திரைப் படங்களில் இடம்பெற்ற பகுதி.

## திருவண்ணாமலை

சென்னையிலிருந்து 187 கி.மீ. தொலைவில், மலையடிவாரத்தில் அமைந்துள்ளது திருவண்ணாமலை. இந்தியாவின் முக்கிய யாத்திரைத் தலங்களில் ஒன்று. பஞ்ச பூதங்களின் வடிவில் சிவனை வழிபடுவதற்காக ஐந்து வெவ்வேறு கோயில்கள் உள்ளன. அவற்றுள் திருவண்ணாமலையில் உள்ள அருணாச்சலேசுவரர் கோயிலும் ஒன்று. இங்கே நெருப்பு வடிவில் சிவனை வழிபடலாம்.

அருணாச்சலேஸ்வரர் கோயில், அண்ணாமலை எனப்படும் அருணாசல மலையடிவாரத்தில் அமைந்துள்ளது. இக்கோயில் ஒன்பது மகத்தான கோபுரங்களைக் கொண்டது. தொன்மைக் கலைஞர்களின் கைவண்ணமும் திராவிட கட்டடக் கலைச் சிறப்பும் இங்கு மிளிர்கின்றன. சிற்ப வேலைப்பாடுகள் வெகு பிரசித்தம். 10ஆம் நூற்றாண்டு வரை ஆண்டு வந்த மன்னர்கள் மற்றும் செல்வந்தர்கள் இக்கோயிலுக்கு வழங்கிய நன்கொடைகளை விவரிக்கும் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன.

கார்த்திகை தீபத் திருவிழா இந்நகரின் தனிச் சிறப்பு. 20ஆம் நூற்றாண்டின் மகத்தான ஞானியாக விளங்கிய ரமண மகரிஷியின் ஆசிரமம் கோயிலிலிருந்து மிக அருகில் உள்ளது. 20ஆம் நூற்றாண்டின் தொடக்க காலம் வரை இங்கே வாழ்ந்த சேஷாத்ரி சுவாமிகளின் ஆசிரமமும் உண்டு.

## திருநெல்வேலி

தாமிரபரணி நதிக்கரையில் அமைந்துள்ள நகரம். சிவன் மற்றும் பார்வதிக்காக இணைந்து கட்டப்பட்டுள்ள சிறப்பு



* கொடைக்கானல் - கோக்கர்ஸ் வாக்



வாய்ந்த காந்திமதி நெல்லையப்பர் திருக்கோயில் இங்கு பிரபலம்.

இங்கிருந்து 13 கி.மீ. தொலைவில் உள்ள சிற்றூரான கிருஷ்ணாபுரத்தில் உள்ளது, விஷ்ணு திருக்கோயில். இக்கோயிலில் இறைவன் திருவேங்கடநாதர் உறைகிறார். ஆளுயர சிலைகள் மற்றும் நுட்பமான நிலைகளுக்குப் புகழ்பெற்ற இடம்.

### நாகூர்

நாகப்பட்டினத்திலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ள மசூதி, முஸ்லிம்களின் வழிபாட்டுத் தலம். என்றாலும், இங்குள்ள தர்காவில் அனைத்து மத மக்களும் கூடுகின்றனர்.

### வேளாங்கண்ணி

நாகப்பட்டினத்திலிருந்து 14 கி.மீ. தொலைவில் உள்ள வேளாங்கண்ணி மாதா கோயில் கத்தோலிக்கர்களின் முக்கிய தலம். பல மதங்களைச் சேர்ந்தவர்களும் இங்கு வந்து செல்கின்றனர்.

### இராமேஸ்வரம்

இந்தியாவில் உள்ள மிகப் புனிதமான நகரங்களில் ஒன்று. இங்குள்ள கோயில் உட்பிராகாரம் தென்கிழக்கு ஆசியாவில் மிக நீளமானதாகும். கடற்கரையில் புனித நீராடல், கந்தமதன பர்வதம், கோதண்டராமசாமி கோயில், அருகில் உள்ள குருசடை மற்றும் சில தீவுகள் இங்கே காணத் தக்கவை.

### காஞ்சிபுரம்

'ஆயிரம் கோயில்கள் நகரம்' என்னும் பெருமைக்குரிய காஞ்சிபுரம், இந்தியாவின் ஏழு புனித நகரங்களில் ஒன்று. பல்லவர்களின் தலைநகரம், மிக அழகிய பட்டுப் புடைவைகளுக்குப் புகழ் பெற்றது. ஏகாம்பரேசுவரர் கோயில், வரதராஜ சாமி கோயில், வைகுந்த பெருமாள் கோயில், கைலாசநாதர் கோயில் காமாட்சி அம்



மன் கோயில், அண்ணா நினைவகம் முதலானவை பிரமிக்கத்தக்கவை.

### சிதம்பரம்

புகழ்பெற்ற யாத்திரை தலம். ஆனந்தக் கூத்தாடும் நடராஜரின் அழகிய கோயில் உள்ள நகரம். ஆண்டுதோறும் பிப்ரவரியில் நாட்டியாஞ்சலி விழா நடைபெறும். புகழ்பெற்ற அண்ணாமலை பல்கலைக்கழகம் இங்கே அமைந்துள்ளது.

## அருவிகள், அற்புத நீர்நிலைகள்...

### குற்றாலம்

குற்றாலம் பசுமை கொஞ்சும் காடுகள் செறிந்த நீர்வீழ்ச்சிக்குப் பெயர் பெற்ற இடம். மூலிகைகள் அடர்ந்த காடுகள் வழியே வரும் இங்குள்ள அருவிகளில் நீராடினால் உடல்நலக் குறைகள் பல அகலும் என்ற புகழுக்குரிய இடம். இங்கு குற்றாலநாதர் கோயிலும் உள்ளது. ஜூன் முதல் செப்டெம்பர் முடிய இங்கு பருவ காலம். குற்றாலச் சாரல் திருவிழா நினைவுகூரத்தக்க விசேஷமாகும்.

### கன்னியாகுமரி

வங்கக் கடல், அரபிக் கடல், இந்துமாக் கடல் மூன்றும் கூடி முத்தமிடும் இந்தியாவின் தென்கோடி எழில் நகரம்; புகழ்மிக்க புனிதப் பயணத் தலம். கன்னியாகுமரி அம்மன் கோயில், சுவாமி விவேகானந்தர் பாறை, காந்தி நினைவு மண்டபம், வியப்புமிக்க 133 அடி உயர திருவள்ளுவர் சிலை இங்கே பார்க்கத்தக்கவை.

அருகில் உள்ள சுற்றுலா இடங்கள்: இசைத் தூண்கள் கொண்ட சுசீந்திரம் கோயில் (13 கி.மீ.), பத்மநாபபுரம் அரண்மனை - அருங்காட்சியகம் (32 கி.மீ.).

### ஒகேனக்கல்

காவிரி ஆற்றில் அமைந்துள்ள கண் கவர் ஓய்வுத் தலம். சுற்றுலாப் பயணிகளால் இன்னும் முழுமையாகப் பயன்படுத்தப்படாத அற்புதப் பகுதி. புனித நீராடலுக்குப் பெயர் பெற்ற ஒகேனக்கல் நீர்வீழ்ச்சி, நோய் நீக்கும் தன்மை கொண்டது. மலைகளால் சூழப்பட்ட இந்த இடம் அமைதியான ஓய்வுக்கு வசதியான இடம். தர்மபுரி, சேலம், பெங்களூரு ஆகிய நகரங்களிலிருந்த சாலை வழியே ஒகேனக்கல்லைச் சென்றடையலாம்.

### மேட்டூர் அணை

காவிரி நதி சமதளத்தை அடையும் நுழைவாயிலில் கட்டப்பட்டிருப்பது மேட்டூர் அணை. இந்தியாவின் மிகப் பழைமையான அணைக்கட்டுகளில் இதுவும் ஒன்று. சேலம், திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்களில் விவசாயத்துக்கான பாசன வசதிகளுக்கு மேட்டூர் அணை வழி வகுக்கிறது. அணைக்கட்டின் அருகே ஓர் அழகிய பூங்காவும் உள்ளது.

### சுருளி நீர்வீழ்ச்சி

மதுரையிலிருந்து உத்தமபாளையம் வழியாக தேக்கடி செல்லும் பாதையில் 123 கி.மீ.தொலைவில் உள்ளது சுருளி நீர்வீழ்ச்சி. குடும்பத்தினருடன் உல்லாசப் பயணம் சென்றுவரச் சிறந்த இடம். ●

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம், சுற்றுலாப் பயணிகளைக் கவர செயல்படுத்தி வரும் புதுமையான மற்றும் எதிர்கால திட்டங்கள் பற்றி விரிவாகப் பேசுகிறார் அதன் நிர்வாக இயக்குனர் டாக்டர் எம்.ராஜாராம் ஐ.ஏ.எஸ்.



# குறைந்த செலவு... நிறைந்த பலன்!

அண்மையில் அறிமுகப்படுத்தப்பட்டு, சுற்றுலாப் பயணிகள் மத்தியில் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ள திட்டம் சைக்கிள் டூரிசம். மகாபலிபுரம், யுனெஸ்கோ அங்கீகாரம் பெற்ற உலக ஹெரிடேஜ் மையங்களுள் ஒன்று. எனவே அங்கே சுற்றுச்சூழலுக்கு பாதிப்பு எதுமில்லாமல் சுற்றுலாப் பயணிகளுக்கு சேவை செய்யும் வகையில்தான் இந்தத் திட்டம் செயல்படுத்தப்படுகிறது. மகாபலிபுரத்தில் உள்ள தமிழ்நாடு ஹோட்டலில் தங்கும் சுற்றுலாப் பயணிகள் அங்கே தமிழ்நாடு சுற்றுலாத் துறையுடன் டி.ஐ. சைக்கிள் நிறுவனம் இணைந்து செயல்படுத்தும் இந்தத் திட்டத்தால் பயனடையலாம். குழந்தைகள், பெரியவர்கள், பெண்கள் என அனைத்துத் தரப்பினரும் பயன்படுத்தத்தக்க வகையில் வகை வகையான சைக்கிள்கள் அங்கே உள்ளன. அவை சாதாரணமான சைக்கிள்கள் அல்ல. பதினைந்தாயிரம், இருபதாயிரம் ரூபாய் விலையுள்ள கியர் பொருத்தப்பட்ட நவீன ரக சைக்கிள்கள். சுற்றுலாப் பயணிகள் இவற்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டு தங்கள் விருப்பம் போல மகாபலிபுரத்தில் சுற்றி வரலாம். இதனால் போக்குவரத்து நெரிசல் அதிகரிக்காது. சைக்கிள் ஓட்டுவது நல்லதொரு உடற்பயிற்சியும்கூட. அரை நாள் வாடகை ஐம்பது ரூபாய்; முழு நாளுக்கு நூறு ரூபாய் என்பதால் செலவும் குறைவு; பலனும் நிறைய. பார்க்கிங்கும் ஒரு பிரச்னையே இல்லை. இந்த சைக்கிள் திட்டம், இந்த வருட கோடை சீசனில் ஊட்டி, கொடைக்கானல், ஏற்காடு போன்ற இடங்களிலும் தொடங்கப்படவிருக்கிறது.

# ஆஹா... புதுமை!








experience yourself

# இங்கேயும் ஒரு காஷ்மீர்!

**வ**ங்கக் கடலை ஒட்டிய அமைதியான back waters பகுதியில் அமைந்துள்ள முதலியார் குப்பத்தில் (கிழக்குக் கடற்கரை சாலையில் கல்பாக்கத்துக்கு அடுத்தாற்போல இருக்கிறது) வாட்டர் ஸ்கூட்டர்களை அறிமுகப்படுத்தி இருக்கிறோம். ஒவ்வொன்றும் சுமார் ஆறு லட்ச ரூபாய்க்கு மேல் விலையுள்ள இந்த ஸ்கூட்டர்களை இயக்கிக் காட்ட பயிற்சி பெற்றவர்கள் இருக்கிறார்கள். 'சாகச சுற்றுலா' என்ற



**ம**காபலிபுரம் தமிழ்நாடு ஹோட்டலில் அறிமுகப்படுத்தியுள்ள இன்னொரு புதுமை, டெண்ட் (கூடாரம்) வசதி. ஹோட்டல் வளாகத்திலேயே நிரந்தரமாக டெண்ட்டுகள் நிறுவப்பட்டுள்ளன. தினசரி வாடகை 600 ரூபாய். இவற்றுக்கு நல்ல டிமாண்டு இருக்கிறது. சமீபத்தில் மகாபலிபுரத்தில் முப்பது நாட்கள் நாட்டிய விழா நடந்தபோது, ஹோட்டல் ரூம்களோடு டெண்ட்டுகளும் ஃபுல்.

வகையில் இளைஞர்கள் பலரும் இந்த வாட்டர் ஸ்கூட்டர்களை ஓட்டி மகிழ்கிறார்கள். எதிர்பார்த்ததற்கும் மேலாக இவற்றுக்குப் பெரும் வரவேற்பு கிட்டி உள்ளது. படகுக் குழாம்களில் தனியே அமர்ந்து ஓட்டிச் செல்லும் சிறு படகுகளும் உள்ளன. அந்தச் சிறு படகுகளை ஓட்டும் போட்டி ஒன்றை சமீபத்தில் நடத்தி, வெற்றி பெற்றோருக்கு பரிசுகள் கொடுத்தோம். விரைவில் பனானா (வாழைப்பழ) போட் என்ற ஒன்றை வரவழைக்க இருக்கிறோம். இதுவும்

சுற்றுலாப் பயணிகளைக் கவரும் என்பதில் சந்தேகமில்லை.

கேரளாவிலும், காஷ்மீரிலும் படகு வீடுகள் புகழ்பெற்றவை. இதுபோன்று சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் படகு இல்லம் இன்னும் மூன்று, நான்கு மாதங்களில் முதலியார் குப்பத்தில் தயாராகிவிடும். எல்லாவிதமான பாதுகாப்பு நடவடிக்கைகளும் கொண்ட இந்தப் படகு இல்லத்தில் குடும்பத்துடன் தங்கி மகிழலாம். பிசினஸ் கூட்டங்கள், கருத்தரங்குகள் நடத்தலாம்; முதலியார் குப்பத்தின் ஸ்டார் அட்ராக்‌ஷனாக இது இருக்கும் என்பது நிச்சயம்.



# ரோடு டூரிஸம்!

தமிழ்நாட்டில் சுமார் 50 ஆயிரம் கோயில்கள் உள்ளன. இவற்றில் 30 ஆயிரம் பெரிய கோயில்கள். இந்தியாவின் பிறமாநிலங்களில் வாழும் மக்கள் பலரும் இவற்றைக் காண விரும்புவார்கள். ஆனால், தமிழ்நாட்டுக்கு வந்து, அதன் பிறகு எங்களது பேக்கேஜ் டூர்கள் மூலம் காண்பதென்பது அவர்களுக்கு சிரமமாக இருக்கும். இதனால், தற்சமயம் மும்பை, டெல்லி, கொல்கத்தா போன்ற முக்கிய நகரங்களிலிருந்து ரயில் மூலமாக அவர்களை சென்னைக்கு அழைத்து வந்து, மகாபலிபுரம், தஞ்சாவூர், திருச்சி, மதுரை, கன்னியாகுமரி, கொடைக்கானல் மற்றும் திருப்பதி என்று சுற்றிக் காட்டி, மறுபடியும் ரயில் மூலம் அவர்களை ஊருக்கு அழைத்துக் கொண்டுபோய் விடும் வகையில் ரயில் கம் ரோடு டூர்சம் திட்டத்தை அறிமுகப்படுத்தி இருக்கிறோம். பயணத்தின்போது, வட இந்தியர்களுக்குத் தகுந்தாற் போல வட இந்திய உணவைத் தயாரித்து வழங்குகிறோம்.



# பிட்டா பிடிங்க!

### விருந்தினர் போற்றுதும்!

கடந்த ஆண்டில் தமிழகம் வந்த உள்நாட்டு சுற்றுலாப் பயணிகள் எண்ணிக்கை சுமார் 5 கோடி! உள்நாட்டுப் பயணிகளையும், வெளிநாட்டுப் பயணிகளையும் ஒருங்கே கவர உரிய நடவடிக்கைகளை எடுத்து வருகிறது தமிழக சுற்றுலாத் துறை. இதற்காக சுற்றுலாத் துறை உருவாக்கியுள்ள விளம்பர வாசகம்தான் 'விருந்தினர் போற்றுதும்! விருந்தினர் போற்றுதும்!'



### தீம் காலண்டர்

தமிழ்நாட்டின் அதிகம் பிரபலமாகாத சுற்றுலா தலங்கள் - இதுதான் தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் வெளியிட்டுள்ள 2008ஆம் ஆண்டுக்கான காலண்டர் தீம். இதில் ஒகேனக்கல், கோடியக்கரை, ஏற்காடு, புலிகாட், திற்பரப்பு, தரங்கம்பாடி, மேகமலை, ஏலகிரி, பிச்சாவரம், காரையார் அணை, தாரமங்கலம், சித்தன்னவாசல் ஆகிய இடங்களின் படங்கள் இடம்பெற்றுள்ளன.




### நினைவுப் பரிசு!

த.நா. சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் நீண்ட பேக்கேஜ் டூர்களில் பங்கேற்கும் சுற்றுலாப் பயணிகள் டூர் புறப்படுவதற்கு முன்னால் ஒரு குரூப் ஃபோட்டோ எடுக்கப்படுகிறது. அவர்கள் டூர் முடிந்து திரும்பும்போது, அனைவருக்கும் ஒரு குரூப் ஃபோட்டோ பிரதியும், டூரில் பங்கேற்றதற்கான சான்றிதழும் வழங்கப்படுகிறது. வித்தியாசமான நினைவுப் பரிசு!

**தமிழ்நாடு சுற்றுலாத் துறை தனது சேவையில் பின்வரும் கொள்கைகளைக் கடைப்பிடிக்கிறது :**

இன்முகத்துடன் வரவேற்பு, சுற்றுச்சூழல் தூய்மை பேணுதல், பாரம்பரியம்மிக்க கலைச் செல்வங்களைப் பேணிப் பாதுகாத்தல், இயற்கைக்குப் பங்கமில்லாமல் கட்டமைப்பு வசதிகளை ஏற்படுத்துதல், சுற்றுலாப் பயணிகளின் பாதுகாப்பில் அக்கறை, நடைமுறை சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட சேவை.

**சு**ற்றுலாவின் சமீபத்திய புதுவரவு ரூரல் டூரிசம் என்றழைக்கப்படும் ஊரகச் சுற்றுலா. இது தமிழகத்திலும் காலூன்றி சாதனை படைத்து வருகிறது. சமீப காலமாக மகாபலிபுரத்துக்கு வரும் அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் ஆர்வமுடன் செல்லும் இடம் தண்டரை கிராமம். சென்னையிலிருந்து 65 கி.மீ. (மாமல்லபுரத்திலிருந்து 20 கி.மீ.) இருக்கும் இந்த கிராமத்தை ஊரகச் சுற்றுலா மையமாக தமிழ்நாடு சுற்றுலாத்துறை தேர்ந்தெடுத்திருக்கிறது.

இருளில்கூட தங்களது பாதை எது வென்று தெளிவாகத் தெரிந்தவர்கள் இருளர் இன மக்கள். இயற்கை அன்னையின் மடியில் பிறந்து வாழும் தனித்தன்மை வாய்ந்த சமூகத்தினர். இவர்களது கிராமம்தான் காஞ்சிபுரம் மாவட்டம் தண்டரை. இங்கு வரும் விருந்தினர்கள் எப்படி உபசரிக்கப்படுகிறார்கள் தெரியுமா? வந்தவுடன் சூடான மூலிகைத் தேநீர் தரப்படுகிறது. இருளர் இன மக்களின் பாரம்பரிய வாழ்க்கை முறை உள்ளிட்ட பல விஷயங்களைச் சொல்லும் மியூசியம் ஒன்றும் தண்டரை கிராமத்தில் உருவாக்கப்பட்டுள்ளது. இதனைப் பார்த்த பிறகு, இருளர் இனப் பெண்கள் இணைந்து அமைத்துள்ள சுய உதவிக் குழுக்களின் உற்பத்தி மையத்தைப் பார்வையிடும் நிகழ்ச்சி. இங்கு கைவினைப் பொருட்கள் எப்படித் தயாரிக்கப்படுகின்றன என டெமோ செய்து காட்டப்படுகிறது.

இருளர் இனப் பெண்கள் பாரம்பரிய மூலிகை வைத்தியத்தில் கைதேர்ந்தவர்கள். இவர்கள் தண்டரை கிராமத்தில் ஒரு மூலிகைத் தோட்டத்தை உருவாக்கியுள்ளனர். இங்கே சென்று பலவிதமான மூலிகைகளைக் கண்டு, அவற்றைப் பற்றிய பல அரிய தகவல்களைத் தெரிந்துகொள்ளலாம். இருளர் மக்கள் சுற்றுலாப் பயணிகளை தங்கள் பாரம்பரிய இசை மற்றும் நடனத்தின் மூலமாக மகிழ்விக்கிறார்கள். அயல்நாட்டுப் பயணிகளுக்கு மட்டுமல்ல, நமக்கேகூட தண்டரை செல்வது ஒரு புதிய அனுபவம்தான்!

**த**மிழ்நாட்டில் ஊரகச் சுற்றுலாவுக்கு ஏராளமான வாய்ப்புகள் உள்ளன. அயல்நாட்டுப் பயணிகள் வாகனத்தில் கிராமத்துக்கு வந்து இறங்கினாலும், மாட்டு வண்டியில் அவர்களுக்கு ஊரைச் சுற்றிக்



# ஆயுசுக்கும்

காட்டலாம். கிராமத்து பாணி வீடுகளை அவர்கள் கண்டு ரசிக்கலாம். வரும் பயணிகளுக்கு காஃபி, டீ, குளிர்பானங்களுக்குப் பதிலாக இளநீர், பதநீர், கேழ்வரகுக் கஞ்சி, கூழ் போன்றவற்றை வழங்கலாம். எப்படி அவை தயாரிக்கப்படுகின்றன என்றும் விளக்கிக் கூறலாம். கிராமத்துச் சூழலில் அவர்களுக்கு எண்ணெய் தேய்த்து, நன்றாக ஊறிய பின் வெந்நீரில் குளிக்க ஏற்பாடு செய்யலாம். கிராமத்துக் கோயில்களுக்கு



experience yourself




# மறக்காத அனுபவம்!

அழைத்துச் சென்று வழிபாடு, பூஜை முறைகளைக் காணச் செய்து, அவற்றின் பாரம்பரியத்தை விளக்கலாம். அறுவடை சீசனில் வரும் டூரிஸ்ட்களை வயல் வெளிக்கே அழைத்துச் சென்று அறுவடையின் பல நிலைகளைக் காட்டலாம். நிலத்திலிருந்தே நேரடியாக வேர்க்கடலை செடிகளைப் பறித்து, சாப்பிடக் கொடுக்கலாம். அவர்கள் விரும்பினால், ஒரு ஜோடி உழவு மாடுகளைக் கொடுத்து ஏர் உழும் அனுபவத்தையும் அளிக்கலாம்.

கிராமத்துப் பெண்கள், அயல்நாட்டுப் பெண்களுக்கு நம் ஊர் புடைவை கட்டி விடலாம். ஆண்கள் டூரிஸ்ட்களுக்கு வேட்டி கட்டிவிடலாம். கோலம் போட்டு அவர்களை அசத்தலாம். பாண்டி, தாயக் கட்டம், பல்லாங்குழி போன்ற பாரம்பரிய விளையாட்டுகளைச் சொல்லிக் கொடுத்து ஆடும் அனுபவத்தை அவர்கள் பெறச் செய்யலாம்.

கிராமிய முறையில் மதிய உணவு அளித்து உபசரித்து, மரத் தடியில் கயிற்றுக் கட்டிலில் படுத்துச் சிறிது நேரம் அவர்களை இளைப்பாறச் செய்யலாம். மண் பாண்டங்கள் செய்வது எப்படி என்று குயவர்களைக் கொண்டு செயல்முறை விளக்கம் அளிப்பதோடு நிறுத்திக்கொள்ளாமல், அந்தப் பயணிகள் கையிலேயே மண்ணைக் கொடுத்து முயற்சிக்கச் சொல்லலாம். ஆயுசுக்கும் மறக்க முடியாத புது அனுபவமாக இது அமையும். கும்மி, கோலாட்டம், மயிலாட்டம் போன்ற பாரம்பரிய நடன நிகழ்ச்சிகளை அளித்து களிப்புறச் செய்யலாம். கிராம கைவினைப் பொருட்கள் விற்பனை மையம் ஒன்றை உருவாக்கி, அங்கே அவர்களுக்கு ஷாப்பிங் அனுபவத்தையும் தர முடியும்.

ஆனால் ஒன்று, இந்த ஊரகச் சுற்றுலா வளர்ச்சி பெற வேண்டுமானால், அந்த கிராம மக்களது பூரணமான ஒத்துழைப்பு மிக அவசியம்; டூரிஸ்ட்களை நேர்த்தியாகக் கையாள்வது எப்படி என்று முறைப்படி பயிற்சி பெற்றவர்களும் அங்கே கட்டாயம் தேவை!




**த**மிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் நடத்தும் தமிழ்நாடு ஹோட்டல்கள் மற்றும் ரிஸார்ட்டுகளில் சுற்றுலா செல்வோர் தங்க, அவற்றின் முகவரி மற்றும் முன்பதிவு செய்ய வேண்டிய தொலைபேசி எண்கள்:

**சென்னை**
4, ஈ.வி.ஆர்.சாலை,
சென்ட்ரல் ரயில் நிலையம் எதிரில்,
சென்னை - 600 003
போன் : 044-25389132

**மதுரை - 1**
மேற்கு வெளி தெரு, மதுரை - 625 001
போன் : 0452 - 2337471-75
ஃபேக்ஸ் : 0452-2331945

**மதுரை - 2**
அழகர் கோயில் சாலை, மதுரை - 625 002
போன் : 0452-2537461-66
ஃபேக்ஸ் : 0452-2533203

**கோயம்புத்தூர்**
2, டாக்டர் நஞ்சப்பா சாலை,
சென்ட்ரல் பஸ் ஸ்டாண்ட் எதிரில்,
காந்திபுரம், கோவை - 641 018
போன் : 0422 - 2302176-78, 2303310
ஃபேக்ஸ் : 0422-2302184

**குற்றாலம் - 1**
பராசக்தி மகளிர் கல்லூரி எதிரில்,
குற்றாலம் - 627 802
போன் : 04633 - 283003

**குற்றாலம் - 2**
ரமாலயம், குற்றாலம் - 627 802
போன் : 04633 - 2322663

**கிருஷ்ணகிரி**
சென்னை சாலை, கிருஷ்ணகிரி - 635 001
போன் : 04343 - 230079
ஃபேக்ஸ் : 04343 - 230914

**கொடைக்கானல்**
47, ஃபெர்ன் ஹில் சாலை,
கொடைக்கானல் - 624 101
போன் : 04542 - 241336-39
ஃபேக்ஸ் : 04542 - 241340

**ஒகேனக்கல்**
பென்னாகரம் வழி, ஒகேனக்கல் - 636 810
தர்மபுரி, போன் : 04342 - 256447
ஃபேக்ஸ் : 256448

**ஓசூர்**
ஓசூர் பஸ் நிலையம் அருகில்,
பை-பாஸ் சாலை, ஓசூர் - 635 109
போன் : 04344 - 246600
ஃபேக்ஸ் : 04344-242030

Tamil Nadu

experience yourself

# உதவிக்கு...



**காஞ்சிபுரம்**
காமாட்சி அம்மன் சன்னிதி தெரு,
ரயில் நிலையம் எதிரில்,
காஞ்சிபுரம் - 631 502
போன் : 044-27222553, 27222554
ஃபேக்ஸ் : 27222552

**கன்னியாகுமரி**
லைட் ஹவுஸ் மெயின் ரோடு,
கடற்கரை அருகில், கன்னியாகுமரி-629 702
போன் : 04652 - 246257, 246426
ஃபேக்ஸ் : 04652 - 246030

**தஞ்சாவூர்**
காந்திஜி சாலை, ரயில் நிலையம் அருகில்,
தஞ்சாவூர்-613 001
போன் : 04362 - 231325, 231421
ஃபேக்ஸ் : 04362 - 231970

**திருச்சி**
மெக் டொனால்ஸ் சாலை, கன்டோன்மென்ட்
சென்ட்ரல் பஸ் நிலையம் எதிரில்,
திருச்சி - 620 001
போன் : 0431 - 2414346-348, 2414471-72
ஃபேக்ஸ் : 0431-2415725

**மாமல்லபுரம்**
பீச் ரிஸார்ட் காம்ப்ளக்ஸ்,
பெட்ரோல் பங்க் அருகில்,
மாமல்லபுரம் - 603 104
போன் : 044-27442361-64
ஃபேக்ஸ் : 27442268

**முதுமலை**
தெப்பக்காடு, முதுமலை - 625 002
போன் : 0423 - 2526580

**பழனி**
மேற்கு கிரி தெரு,
வின்ச் ஸ்டேஷன் எதிரில், பழனி - 624 601
போன் : 04545 - 241156

**பிச்சாவரம்**
கிள்ளை-போஸ்ட் பிச்சாவரம்,
சிதம்பரம் அருகில்
போன் : 04144 - 249232, 249536
ஃபேக்ஸ் : 249232

**ராமேஸ்வரம்**
அக்னி தீர்த்தம் அருகில்,
ராமேஸ்வரம் - 623 526
போன் : 04573 - 221064-69, 221277
ஃபேக்ஸ் : 04573 - 221070

**திருச்செந்தூர்**
டி.பி. சாலை (கோயில் அருகில்),
திருச்செந்தூர் - 628 215
போன் : 04639-242268, 243471-72
ஃபேக்ஸ் : 04639-245758

**உளுந்தூர்பேட்டை**
ஜி.எஸ்.டி. ரோடு, உளுந்தூர்பேட்டை-606 107
போன் : 04149 - 222258

**உதகமண்டலம் - 1**
சேரிங் க்ராஸ் சாலை, ஊட்டி - 643 001
போன் : 0423 - 2444370-377
ஃபேக்ஸ் : 0423 - 2444369

**உதகமண்டலம் - 2**
யூத் ஹாஸ்டல்,
பொட்டானிக்கல் கார்டன் சாலை,
ஊட்டி - 643 001
போன் : 0423 - 2443665

**ஏற்காடு**
ஏரி அருகில், ஏற்காடு - 636 602
போன் : 04281 - 222335-6, 222273
ஃபேக்ஸ் : 04281 - 222745

**ஹோட்டல் புக்கிங் நேரம் :**
**காலை 10 மணி முதல் மாலை 5.30 மணி வரை**



experience yourself

## ஸ்பெஷல் பரிசுப் போட்டி!

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் வழங்கிய அற்புதமான இந்தக் கையேடை வாசிச்சீங்களா? புத்தகத்தைப் பாதுகாத்து வைக்கறதுக்கு முன்னாடி ஒரு பரிசுப் போட்டியில கலந்துக்குங்க. அடுத்து வர்ற எட்டு கேள்விகளுக்குச் சரியான பதிலை மட்டும் ஒரு அஞ்சலட்டையில் 1, 2, 3...ன்னு வரிசைப்படுத்தி எழுதி, உங்களைப் பற்றின பெயர், விலாசம் போன்ற விவரங்களுடன், **12.05.2008**க்குள்ள '**சுற்றலாம் வாங்க**'ன்னு முகவரிப் பகுதியில எழுதி 'கல்கி'க்கு அனுப்பிட்டு கனவுல மூழ்கிடுங்க. சரியான விடை எழுதும் பத்து நபர்கள், தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் ஏற்பாடு செய்யும் வேலூர் தங்கக் கோயில் சுற்றுலாவில் கலந்துகொள்ளும் 'வைர'மான வாய்ப்பைப் பெறுவார்கள். பலர் சரியான விடை எழுதும்பட்சத்தில், குலுக்கல் முறையில் பத்து நபர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

1. 'நவீன உலக அதிசயங்கள்' பட்டியலில் இடம்பெற தாஜ்மஹாலோடு போட்டியிட்ட தமிழக ஆலயம் எந்த ஊரில் உள்ளது?

2. கடலூர் மாவட்டத்தில் உள்ள மாங்குரோவ் (சுரபுன்னை) காடுகள் நடுவே அமைந்த அழகிய சுற்றுலாத் தலம் எது?

3. மிக உயரமான ஆஞ்சநேயர் திருவுருவத்தைக் கொண்ட தாணுமாலயர் ஆலயம் எந்த ஊரில் உள்ளது?

4. ஒவ்வொரு வருடமும் சிவராத்திரியில் தொடங்கி ஐந்து நாள் நிகழ்ச்சியாக, நாட்டியாஞ்சலி என்ற பெயரில் நடன நிகழ்ச்சிகள் நடத்தப்படும் இடம் எது?

5. தர்மபுரி மாவட்டத்தில் உள்ள இந்த இடம், அருவிக்கும் பரிசல் பயணத்துக்கும் படப்பிடிப்புக்கும் புகழ்பெற்ற இடம். அது...?

6. குற்றாலத்திலிருந்து 75 கிலோமீட்டர் தொலைவில் உள்ள எந்த ஊரில் புலிகள் சரணாலயம் உள்ளது?

7. சென்னையிலிருந்து மகாபலிபுரம் செல்லும் சாலையருகே உள்ள எந்த இடத்தில் படகுப் பயணம் செல்ல சுற்றுலாப் பயணிகள் குவிகிறார்கள்?

8. தமிழக அரசின் முத்திரையில் இடம் பெற்றிருக்கும் கோயில் எந்த ஊரில் உள்ளது?


பேட்டிகள், கட்டுரைகள் : **எஸ்.சந்திரமௌலி, ஜி.எஸ்.எஸ்., ப்ரியன், கதிர்பாரதி**

அட்டைப் படம் : **ஸ்ரீஹரி**


# தங்கக் கோயில் அழைக்கிறது!

# மலைகளின் மன்மதன்!

**தனக்குப் பிடித்த சுற்றுலா ஸ்பாட் குறித்து மனம் திறக்கிறார் எழுத்தாளர் பட்டுக்கோட்டை பிரபாகர் :**

"என்னைக்கும் எனக்குப் பிடிச்ச இடம் ஊட்டிதான். இந்த ஊருக்கும் எனக்குமான தொடர்பு கிட்டத்தட்ட முப்பது வருடங்கள். முதன்முதலாக ஊட்டிக்கு நான் போனது என் கல்லூரி நண்பர்களோடுதான். அப்ப இருந்த ஊட்டி ரொம்ப ரம்மியமானது. வாகன நெரிசல் அற்றது. கடவுளின் ஆசீர்வாதமாய் எப்பொழுதும் வெண்மையான பனிப் படலம் மூடி இருக்கும். இப்போதுள்ளது போல சுற்றுலா பயணிகளுக்கு நெருக்கடி கள் இருக்காது. எனது எழுத்துலகப் பயணத் தில் கிடைத்த நண்பர்களில் முக்கியமான வரான கார்த்திகா ராஜ்குமார் ஊட்டியில் இருப்பதும் எனக்கு ஊட்டியைப் பிடிக்க இன்னொரு காரணம். இரண்டு நாள் இடைவெளி கிடைத்தாலும் ஊட்டியில் நான் இரண்டறக் கலந்துவிடுவேன். கொடைக்கானல் மலைகளின் இளவரசி என்றால், ஊட்டி மலைகளின் மன்மதன். அதனால்தான் என் ஹனிமூன் ட்ரிப் கூட ஊட்டியில் அமைந்தது."



# மனசுக்குள் குற்றாலம்!

நினைத்தால் ஸ்விஸ்; போனால் அமெரிக்கா என்று ஷூட்டிங்குக்காக தினம் தினம் பறந்துகொண்டிருக்கும் நடிகை பாவனாவிடம் தமிழகத்தில் அவரைக் கவர்ந்த சுற்றுலா ஸ்பாட் குறித்துக் கேட்டோம்.

''ஏறக்குறைய எல்லா உலக நாடுகளையும் சுற்றி வந்திருந்தாலும், தமிழ் நாட்ல எனக்குப் பிடிச்ச சுற்றுலா ஸ்பாட்னா அது குற்றாலம்தான். அந்த அருவிகளைப் பார்க்கும்போது மனசுக்குள்ள ஒரு மகிழ்ச்சி அருவி ஊற்றெடுக்கும். காற்றில் பரவி வரும் குற்றாலச் சாரல் கன்னத்தைத் தீண்டும்போது, புதுசா பிறந்த குழந்தையின் விரல்களை ஞாபகப்படுத்தும். அலுவல் நேரத்து அவசரங்கள் மனுஷனை அடிச்சுத் துவைச்சுடுது. ஒருத்தனை முழு மனுஷனா மாத்தற மந்திரம்தான் சுற்றுலா. அந்த ஃபீலிங்கை எனக்குத் தந்தது குற்றாலச் சாரல்தான். அமெரிக்காவுக்கும், கனடாவுக்கும் நயாகரா எப்படியோ, அப்படித்தான் தமிழகத்துக்குக் குற்றாலமும். டைம் கிடைக்கும்போதெல்லாம் குற்றாலத்துக்குப் போய் குதூகலிப்பேன். ஐ லவ் குற்றாலம்!''

